# ஐங்குறுநூற்றுச் சொற்பொழிவுகள்

கழக வெளியீடு: எஅகூ

# ஐங்குறுநூற்றுச் - - -

- - -

# சொற்பொழிவுகள்

[பேராசிரியர் அறுவர்
சொற்பொழிவுகள்]



மதுரைத் திருவள்ளுவர் கழகத்தில்
ஐங்குறுநூறு மாநாட்டில்
21-8-1955-ல் நிகழ்த்தப்பெற்றவை

Appar Achakam, Madras - 1.

# பதிப்புரை

அமிழ்தினும் ஆற்ற இனியது நம் தமிழ்மொழி; இம்மொழி, காலத்தானும் ஆற்றலானும் முந்தியது; அரிய சீரிய கருத்துநயம் மிக்கது; சொற்செட்டுடையது; மெல்லிய இனிய சொற்குழுமங்களைக் கொண்டது.

இச் சிறப்புக்களையெல்லாம் ஒருங்கே கண்ணாடி போல் தெளிவுறக் காட்டுவன, சங்கநூற் செல்வங்கள்;

அவற்றுள், எட்டுத்தொகை நூல்களில் ஒன்றான ஐங்குறுநூறு, மிகத் திட்பநுட்பஞ் சான்றது; கருத்துச் செறிவும் பொருள் நுணுக்கமும் கொண்டது; மூன்றடிச் சிறுமையும் ஆறடிப் பெருமையுங்கொண்ட அகவற்பாக்களால் ஆயது.

இச்சீரிய அரிய நூலைத் தேடியெடுத்து ஆய்ந்து அரிய திருத்தஞ்செய்து தமிழ்கூறு நல்லுலகுக் குதவிய பெருமை, தமிழ்ப்பெரியார் உயர்திரு. டாக்டர் உ. வே. சாமிநாதையரவர்கட்கே உரியது. தமிழுலகு அவர்கட்கு என்றும் நன்றி செலுத்தும் கடப்பாடுடையது.

நுண்மாண் நுழைபுல மிக்க இந்நூலைக் கருத்தாழமும் பழஞ்சொற்களும் நிறைமிக்கிடக்குங் காரணத்தால் எடுப்பார் கைப்பிள்ளைகளான நம் தமிழக மக்கள் கற்றனரில்லை; கற்கக் கருதுவதுமில்லை; வேற்றுச் சொற்கோப்பும் சந்த ஓசையுங்கொண்ட பிற்காலத்தெழுந்த நூல்களையே ஓசையில் மயங்கிக் கற்று இவ் அரிய நூல்களை நயங்காணாது நிற்பாராயினர்.

பழமையிற் புதுமையாக வடித்துக் கொடுக்கும் கருத்துடன், இத் தொகை நூல்களிற் பலவற்றையும்

கற்றுத்துறைபோய தமிழ்ப் பேரறிஞர்களைக்கொண்டு பதிற்றுப் பத்தும் இதுவும் நீங்கலாக ஏனைய ஆறு தொகை நூல்களையும் சொற்பொழிவு ஆற்றச் செய்து, நூலுருவாக்கி ஏற்கனவே வெளியிட்டிருப்பதை நம் தமிழக நன்மாந்தர்கள் யாவரும் நன்கறிவார்கள்.

அம் முறையில் இவ் ஐங்குறுநூற்றுச் சொற்பொழிவுகள் தமிழ்ப் பேராசிரியர்கள் அறுவர்களால் ஆற்றப்பெற்றுத் திசையனைத்தின் பெருமையெல்லாம் நம் தென்னாடே வென்றேறவும், நம் தமிழ்வழக்கே உயரியதெனப் போற்றவும் இச்சொற்பொழிவுகள் நூலுருவாக இன்று மலர்ந்து தமிழ்மணம் பரப்புகின்றது.

ஐங்குறுநூற்று அரிய நூலின் ஐந்திணை ஒழுகலாறுகளையும் தனித்தனியே சொற்பொழிவாற்றி நூலுருவாகத் தந்த ஆசிரியர்கள் ஐவர்கட்கும் இம் மாநாட்டுக்குத் தலைமை தாங்கித் தலைமைச் சொற்பொழிவாற்றியுதவிய பேராசிரியர், செந்நாப் புலவர் உயர்திரு. ஆ. கார்மேகக் கோனாரவர்கட்கும், இது நூலுருவாக வெளிவரச் சொற்செயல்களால் துணைபுரிந்த மதுரைத் திருவள்ளுவர் கழகத்தார்க்கும், சிறப்பாக அக்கழக அமைச்சர் திரு. மீ. கந்தசாமிப் புலவரவர்கட்கும் எம் உளங்கனிந்த நன்றி உரிமையாகுக.

ஏனைய சொற்பொழிவு நூல்களை வாங்கிக் கற்றும் கற்கச் செய்தும் எமக்குப் பெருந்துணை புரிந்த நம் தமிழ்மக்கள் இந் நூலையும் வாங்கி மேலும் ஏனைய நூல்களும் சொற்பொழிவு நூலாக வெளிவரப் பேருதவி புரிவார்களென நம்புகின்றோம்.

சைவசித்தாந்த நூற்பதிப்புக் கழகத்தார்.

## சங்க இலக்கியச் சொற்பொழிவு

**நூல்கள்** அகநானூற்றுச் சொற்பொழிவுகள் :

கரந்தைக் கவியரசு R. வேங்கடாசலம் பிள்ளை அவர்கள் தலைமையில் நடைபெற்ற அகநானூறு மாநாட்டில் நிகழ்த்தப்பெற்ற ஐவர் சொற்பொழிவுகள் அடங்கியது.

மலிவுப் பதிப்பு ரூ. 2 00 கலிக்கா ரூ. 3 00

புறநானூற்றுச் சொற்பொழிவுகள் :

திரு. ரா. பி. சேதுப்பிள்ளை அவர்கள் தலைமையில் நடைபெற்ற புறநானூறு மாநாட்

டில் நிகழ்த்தப்பெற்ற பதினொருவர் பொழிவுகள் அடங்கியது.

சொற்

மலிவுப் பதிப்பு ரூ. 3 50 கலிக்கா ரூ.

4 50 கலித்தொகைச் சொற்பொழிவுகள்:

பண்டித ந. மு. வேங்கடசாமி நாட்டார் அவர்கள் தலைமையில் நடைபெற்ற கலித் தொகை மாநாட்டில் நிகழ்த்தப் பெற்ற சொற்பொழிவுகள் அடங்கியது.

ஐவர்

மலிவுப் பதிப்பு ரூ. 2 25
கலிக்கா ரூ. 3 00

குறுந்தொகைச் சொற்பொழிவுகள்:

பண்டிதமணி மு. கதிரேசச் செட்டியார் அவர்கள் தலைமையில் நடைபெற்ற குறுந் தொகை மாநாட்டில் நிகழ்த்தப்பெற்ற ஐவர் சொற்பொழிவுகள் அடங்கியது.

மலிவுப் பதிப்பு ரூ. 2 25

கலிக்கா ரூ. 3 00 2

**நற்றிணைச் சொற்பொழிவுகள்:**

*பன்மொழிப் புலவர் தெ. பொ*
*மீனாட்சி*
*சுந்தரனார் அவர்கள் தலைமையில் நடைபெற்ற நற்றிணை மாநாட்டில் நிகழ்த்தப் பெற்ற ஐவர் சொற்பொழிவுகள் அடங்கியது.*

*மலிவுப் பதிப்பு ரூ.* 2 25 *கலிக்கா ரூ.*
3 60

**பத்துப்பாட்டுச் சொற்பொழிவுகள்:**

*டாக்டர் மு. வரதராசனார் அவர்கள் தலைமையில் நடைபெற்ற பத்துப்பாட்டு மாநாட்டில் நிகழ்த்தப் பெற்ற பதின்மர் சொற்பொழிவுகள் அடங்கியது.*

*மலிவுப் பதிப்பு ரூ.* 4 50
*கலிக்கா ரூ.* 5 50

**அரசியலறிவு (சொற்பொழிவுகள்):**

பிளேட்டோ, வள்ளுவர், ரூஸோ, பர்க், மார்க்ஸ் ஆகிய ஐவரைப் பற்றி ஆற்றிய பேராசிரியர் ஐவர் சொற்பொழிவுகள் அடங்கியது.

மலிவுப் பதிப்பு ரூ. 2 25

கலிக்கா ரூ. 3 00

**தமிழக வரலாறு (சொற்பொழிவுகள்) :**

சங்க காலம், பல்லவர் காலம், சோழர் காலம், பாண்டியர் காலம், நாயக்கர் காலம், ஆங்கிலேயர் காலம் ஆகியவற்றைப் பற்றிப் பேராசிரியர் அறுவர் ஆற்றிய சொற்பொழிவுகள் அடங்கியது. பன்மொழிப் புலவர் கா. அப்பாத்துரை அவர்கள் முன்னுரையும் இணைக்கப்பட்டுள்ளது.

மலிவுப் பதிப்பு ரூ. 4 00 கலிக்கா ரூ. 6 00

---

# உள்ளுறை

33-82

உ.

நெய்தல் :

வித்துவான், திரு. மு. அருணாசலம் பிள்ளை அவர்கள்,

—தமிழ் விரிவுரையாளர், அண்ணமலைப்

பல்கலைக்

கழகம்

83-126

ந. குறிஞ்சி :

திரு. சுப. இராமநாதன் அவர்கள், எம்.ஏ.,

—தமிழ்ப் பேராசிரியர், அரசர் துரைசிங்கம்

நினைவுக் கல்லூரி, சிவகங்கை

127-170

ச. பாலை :

திரு. அ. கி. பரந்தாமனர் அவர்கள், எம்.ஏ.,

தமிழ் விரிவுரையாளர், தியாகராசர் கல்லூரி,

மதுரை

171-216

ரு. முல்லை :

வித்துவான், திரு. வீ. குமாரசாமி ஐயர்

அவர்கள்,

—தலைமைத் தமிழாசிரியர், மாவட்டக் கழக உயர்நிலைப்பள்ளி, மேலூர்

217-254

---

## படங்கள்

மாநாட்டுத் தலைவர் :

பேராசிரியர். ஆ. கார்மேகக்கோனார் அவர்கள்

சொற்பொழிவாளர்கள் :

பண்டித வித்துவான், திருவாளர். தி. சங்குப்புலவர் அவர்கள்

வித்துவான், திருவாளர், மு. அருணாசலம் பிள்ளை அவர்கள்

திருவாளர், சுப. இராமநாதன் அவர்கள், எம் ஏ.

திருவாளர், அ. கி. பரந்தாமனார் அவர்கள், எம் ஏ.

வித்துவான், திருவாளர், வீ. குமாரசாமி ஐயர் அவர்கள்



பேராசிரியர்,

ஆ. கார்மேகக் கோனார் அவர்கள்

# தலைமை உரை

[பேராசிரியர், செஞ்சொற்புலவர்,
ஆ. கார்மேகக்கோனார் அவர்கள்]

## தோற்றுவாய்

திருநெல்வேலி தென்னிந்திய சைவசித்தாந்த நூற்பதிப்புக் கழகம், நம் தண்டமிழ் மொழிக்கண்ணுள்ள பண்டைப் பனுவல் பலவற்றுள் சங்கத் தொகை நூல்களான நற்றிணை முதலிய நூல்களின் நுண்பொருள்களை, கற்றுவல்ல புலவர்களை யன்றி மற்றுமுள்ளோரும் எளிதின் அறிந்து இன்புற வேண்டுமென்ற உயரிய நோக்குடன், தொகை நூல்களின் மாநாடுகள் பல கூட்டித் தொன்னூலாராய்ச் சித்திறன் வாய்ந்த புலவர் பெருமக்களைக் கொண்டு சொற் பொழிவு செய்வித்துத் தமிழ்த்தாய்க்கொரு நற்றொண் டாற்றி வருகின்றது. இம் முறையில் இவ்வைங்குறு நூற்று மாநாட்டுடன் தொகை நூல் மாநாடு ஒன்றுகுறைய எட்டு நடைபெற்றுவிட்டன. இக் கழகத்தின் இவ் வரும் பெரும் செயல், தமிழ்மக்கள் அனைவராலும் நன்கு போற்றிப் பாராட்டற் பாலது.

நம் தமிழ்நாட்டில் இற்றைக்கு 2000 ஆண்டுகட்கு முன்னர்த் திகழ்ந்திருந்த புலவர் பெருமக்கள் இயற்றிய செய்யுட்கள், பல்லாயிரக் கணக்காகப் பல்கியிருந்தும், பிற்றைநாளில் மூவேந்தர் ஆட்சி நீங்கியபின் வேற்றரசர் ஆட்சியில் அவை ஒவ்வொன்றாக நாட்டிற் பயிற்சி குன்றி ஏட்டில் கிடந்து, சிதலும் பூச்சியும் தின்று, மறைந்தொழிந்தவை போக இன்று எஞ்சியிருப்பவையும் ஆயிரக் கணக்காக உள்ளன. இப் பாட்டுக்களுள் பத்துப்பாட்டு, எட்டுத்தொகை, பதினெண் கீழ்க்கணக்கு முதலியவைகளும், சிந்தாமணி, சிலப்பதிகாரம், மணிமேகலை முதலிய





காப்பியங்களும், தொல்காப்பியமும் முதலிய இலக்கண நூல்களும், இப்பொழுது அச்சிடப்பெற்று வெளிவந்து விட்டன. இதன் பயனாய்ச் சில ஆண்டுகளாக நம் நாட்டவர், தமிழ்ப்பற்று மிகுந்து அவற்றைக் கற்றுப் புலமை பெறவேண்டும் என்ற வேட்கையுடையவர்களாய் விளங்குகின்றனர். தமிழ்நாட்டு இளைஞர்களும் தமிழருடைய பண்பாட்டினையும் அவர்களின் வாழ்க்கைமுறைகளையும் அறிதற்குக் கருவியான நூல்கள், சங்க நூல்களே எனவும், அவையே தமிழரது தனிப்பெருஞ் செல்வமெனவும், அறிந்தவர்களாய் அந்நூற் பயிற்சி பெறுவதில் முனைந்துள்ளனர். அவ்வேட்கையின் பயனாய்த் தமிழ்நாட்டு இளைஞர்களும் ஆசிரியர்களும் அறிஞர்களும் எழுதும் தனித்தமிழ்க் கட்டுரைகளை ஏந்தி, நாளிதழ்களும் வாரஇதழ்களும் திங்கள்

இதழ்களும் நாளுக்குநாள் பல்கி வெளிவருகின்றன. தமிழ்ச் சங்கங்களும் ஊர்கடோறும் நகரங்கடோறும் பள்ளிக டோறும் நிறுவப்பெற்று அவை முத்தமிழ் முழக்கம் புரிகின்றன. தமிழ்இசை இயக்கம் வலுத்து அளித்து வருகின்றது

அது நற்பயன்

நம் நாடு தன்னுரிமை பெற்ற பின்னர் ஆங்கிலப் பட்டதாரிகளான தமிழர்களும் இப்போது தாய்மொழி வளர்ச்சியில் சிறப்பான மனவெழுச்சியும் விழிப்பும் கொண்டு, ஆங்கில அரசியல் காலத்தில், தாங்கள் தமிழ் மக்களாயிருந்தும் தமிழ்மொழியில் பேசுவதும் எழுது வதும் இழிவானவை எனக் கருதித் தாய்மொழிப் பற்றற்று இருந்ததற்கு வருந்திக் கழிவிரக்கங் கொண்டு அதற்குக் கழுவாயாகத் தமிழ்நூல்களைப் பயில்வதிலும் மேடை களில் தமிழ்மொழியில் பேசுவதிலும் பெருவிருப்பம் கொண்டவர்களாய் விளங்குகின்றார்கள். ஆகவே, நம் நாடு தன்னுரிமை பெற்ற ஒரு புரட்சியில் நம் தமிழ்மொழி இப்போது ஒரு மறுமலர்ச்சியுற்று விளங்குகின்றதென்று நாம் மிகவும் ஏக்கழுத்தம் கொள்ளலாம். இவ்வாறு எழுந்துள்ள புத்துணர்ச்சியிலும் இன்னும் ஒரு சிலர் நம் தொன்னூல்களின் நன்னயம் உணராது, பிற்காலக்

காப்பியங்களின் விருத்த ஓசையிலும் கற்பனாலங்கார வருணனையிலும் கட்டுண்டு பண்டைத் தமிழ்ப்பாட்டுக்களே தமிழர் தனிமாண்பினை நனி புலப்படுத்தும் உரைகல் என்பதனைச் சிறிதும் ஓராது, தொகைநூல்களைப் பகைநூல்களைப்போற் கருதி, "இந்நூல்களைக் கற்பதாற் போந்த பயன் யாது? கரும்பு போன்ற காப்பியக் கவிதைகளை விரும்பாது இரும்பு போன்ற இப்பழம் பாட்டுக்களை விரும்புவது எற்றிற்கு? கடல் வாய்மடுத்து எஞ்சிய இப்பாட்டுக்களையும் கடல்வாய்ப்படுத்தலே நம் கடன்" என மொழிந்து வருகின்றனர். இவர்கள் இதனோடு அமையாது கன்னித்தமிழ் வளர்ப்போம் என்று, மாநாடு கூட்டி அம்மேடைகளில் எழுத்தறிவில்லாத மாந்தர் பேசும் இழிமொழிகளையும் வேண்டா வடமொழிகளையும் இடைமடுத்துப் பேசித் தமிழ்மொழியின் மாண்பினையும் மரபினையும் சிதைத்து வருகின்றனர். மேலும் இவர்கள் பண்டிதர் நடை, பண்டிதர் பேச்சு என்று தமிழாசிரியர்களை வேறு பிரித்துத் தாங்கள் பெற்றிருக்கும் தமிழறிவும் அவர்கள் தரப்பெற்றதே என்பதனை அறவே மறந்தவர்களாய், அவர்களை ஏச்சுரைகளால் இயல்கெடப் பேசியும் எழுதியும் வருகின்றனர். தாங்கள் வியக்கும் பிற்காலக் காப்பியக் கவிஞர் பாக்களுக்கெல்லாம் கருவாக இருப்பதும் தமிழ்ப் பழம் பாட்டுக்களே என்பதனையும், அப்பாட்டுக்களின் இயற்கை நலங்கனிந்தொழுகும் இனிமையினையும், பொருளாழத்தினையும், மொழிவளத்தினையும், இவர்கள் நன்கு அறியாதவராவர். இம்பர் நாடெல்லாம் பம்பு புகழ்படைத்த கம்பநாடரும் தமிழ்மொழியில் பல்லாற்றானும் சிறந்த பாட்டுக்கள் எனப்படுவன சங்க காலத்து நல்லிசைப் புலவர்கள் யாத்த செந்தமிழ்ப் பாக்களே என்னும் தமது சிறந்த கருத்தினைத் தம் காப்பியத்துள் கோதாவிரி யாற்றினைச் சிறப்பித்துக் கூறுமிடத்தில், சிலேடை முகத்தால்,

"புவியினுக் கணியாய் ஆன்ற பொருள் தந்து புலத்திற் றாகி
அவியகத் துறைகள் தாங்கி ஐந்திணை நெறிய ளாவிச்
சவியுறத் தெளிந்து தண்ணென் றொழுக்கமும் தழுவிச் சான்றோர்
கவியெனக் கிடந்த கோதா விரியினை வீரர் கண்டார்"



என்னும் செய்யுளில் நன்கு வலியுறுத்தியுள்ளார். முல்லை முதலிய அகனைந்திணைகளையும் அவற்றிற்குரிய அகத் துறைகளையும் தாங்கிய செய்யுட்களையே கம்பர் சான்றோர் கவி எனக் குறிப்பிடுகின்றார். அன்பின் ஐந்திணை நெறியும் அதற்குரிய அகத்துறைகளும் தாங்கிய பாட்டுக்கள் தமிழ் மொழியில் சங்கப்பாட்டுக்களே யன்றி வேறு பாட்டுக்கள் யாவை? சான்றோர் என்னும் பெயருக்கு இலக்கானவர் களும் சங்கப் புலவர்களே என்பது அறிஞர்கள் பலரும் நன்கு அறிந்ததே. ஒன்பான் சுவையும் தன்பால் ஒருங்கே அமையத் தாம் பாடிய இராமாவதாரப் பெருங்காப்பியத் துள் கவிச்சக்கரவர்த்தியாம் கம்பரே இங்ஙனம் போற்றிப் புகழ்ந்தன ரென்றால், இப்பாட்டுக்களின் சிறப்பினைப் புலப்படுத்த வேறு கூறவும் வேண்டுமோ! தமிழ்மொழிக்கே சிறப்பியல்பான அகப்பொருட்டுறைகள் அமைந்த இப் பாட்டுக்களின் சுவையைத் தமிழ்மக்கள் யாவரும் நுகர்ந்து இன்புற்றுப் பயன்பெறற்கு இத்தகைய மாநாடுகள் இன்றி யமையாதனவாகும்.

இதற்கு முன்னர் இக்கழகச் சார்பில் நடந்த மாநாடுக ளெல்லாம் தக்க தலைவர்களைக் கொண்டும் மிக்க புலமை யாளரைச் சொற்பொழிவாளராகக் கொண்டும் செவ்விதின் நடைபெற்றுள்ளன. இப்பொழுது நடைபெறும் இம் மாநாடும் சிரிய புலமையாளரான ஐவரைக் கொண்டு நடை பெறுகின்றது. ஒல்காப் புலமைத் தொல்காப்பியனாரது பெரும்பனுவலுக்குப் பேரிலக்கியமாகத் திகழும் இவ் வைங்குறுநூறு பற்றிய மாநாட்டுக்குத் தலைமை தாங்கும் தகுதியும் புலமையும் எனக்கில்லையென்பதனை நான் நன் குணர்வேன்; எனினும் தென்னிந்திய சைவ சித்தாந்த நூற்பதிப்புக் கழகம், மதுரைத் திருவள்ளுவர் கழகம் ஆகிய இருதமிழ்க் கழகங்களின் விருப்பினைத் தனைய இயலாது ஒருவாறு இப்பணி தலைமேற் கொண்டேன். இப்பிழை யைப் புலவர் குழாம் பொறுத்தருள்க.



## ஐங்குறுநூறு

ஐங்குறுநூறு என்பது இற்றைக்கு இரண்டாயிரம் ஆண்டுகட்கு முன்னர் இம் மதுரைமா நகரில் நிலவியிருந்த கடைச்சங்கத்தில் தமிழாராய்ச்சிசெய்து விளங்கிய நல் லிசைப் புலவர் பல்லோரால் அவ்வப்போது பாடிய பாடல் களிலிருந்து தேர்ந்தெடுத்து, அப் புலவர்களாலேயே தொகுக்கப்பட்ட நூல்கள் எட்டனுள் ஒன்றாகும்.

• இவ் வெட்டுத் தொகை நூல்களை,

'நற்றிணை நல்ல குறுந்தொகை ஐங்குறுநூறு
ஒத்த பதிற்றுப்பத் தோங்கு பரிபாடல்
கற்றறிந்தார் ஏத்துங் கலியோ டகம்புறமென் று
இத்திறத்த எட்டுத் தொகை.'

என்னும் பழைய பாட்டொன்றால் அறியலாம். இவ்வெட்டு நூல்களுள்ளும் பதிற்றுப்பத்து, புறநானூறு என்னும் இரண்டு நூல்களுமே புறப்பொருளைப் பற்றியனவாகும். பரிபாடல் கடவுள் வாழ்த்தொடு காமங்கண்ணி வந்தமையால் அகமெனவும், அறமும் வீடுபேறும் கூறுதலால் புறமெனவும் படும். ஏனையவெல்லாம் அகப்பொருள் நூல்களாம்.

அகப்பொருளாவது, தலைவன் தலைவிகளது அன்பின் அடியாகப் பிறந்த இன்பக் காதல்வாழ்க்கையைப்பற்றி விரித்துக் கூறுவதாம். தலைவன் தலைவிகளது அகத்தில் நிகழ்வதாய், அகமே உணர்ந்து நுகருந் தன்மைத்தாய் வெளிப்படையாக இன்னபடித்தென இயம்ப இயலாததாய் இருக்கின்றமையின் இஃது அகப்பொருளெனப் பட்டது.

புறப்பொருளாவது, மக்கள் அடையவேண்டிய அறம் பொருள் என்பன பற்றிப் புறத்தே நிகழும் போர்ச் செயல், பொருளீட்டும் முயற்சி முதலிய செயல்களாம். மக்கள் வாழ்க்கையில் புறத்தே பிறர்க்குப் புலப்பட நிகழ்வதாகலின், இது இப் பெயர் பெறுவதாயிற்று. வீடுபேறும் பெறுதற்குரிய நோற்றலும் இதனுள் அடங்கும்.

வடநூலார் அறம் பொருள் இன்பம் வீடென வகுத்துக் கூறும் உறுதிப்பொருள்கள் நான்கினையும் தமிழ் நூலார் அகம் புறமென இரண்டாகப் பகுத்துக் கூறுவது மரபு. மக்களது வாழ்க்கையின் இயல்பறிந்து அகவாழ்க்கை, புற வாழ்க்கை என, அதனைப் பண்டையோர் இரண்டாகப் பகுத்தது எத்துணை அறிவுநுண்மை வாய்ந்ததாக உள்ளது!

இவ் ஐங்குறுநூற்றிலிருந்து பல பாட்டுக்கள், தொல்காப்பிய உரையாசிரியர்களாலும் பிற அகப்பொருள் இலக்கண உரையாசிரியர்களாலும் பல நுண்ணிய அகப்பொருள் இலக்கண விதிகட்குச் சிறந்த எடுத்துக்காட்டாக ஆங்காங்கு எடுத்துக் காட்டப்பெற்றுள்ளன. இதனால் இந் நூலின் பெருமை நன்கு புலப்படும்.

இந் நூல், அன்பின் ஐந்திணையாகிய முல்லை, குறிஞ்சி, மருதம், நெய்தல், பாலை என்னும் ஐந்திணையையும் தனித் தனி உணர்த்துவதாய்த் திணை யொன்றுக்கு நூறு நூறு குறுகிய அடிகளையுடைய பாட்டுக்களைக் கொண்டு விளங்குகின்றமையின், ஐங்குறுநூறு எனப் பெயர்பெறுவதாயிற்று. இந் நூற்பாக்கள், மூன்றடிச் சிற்றெல்லையும் ஆறடிப் பேரெல்லையும் உடைய ஆசிரியப்பாக்களாகும். தொல்காப்பியர் கலி, பரிபாடல் என்னும் இருவகைப் பாக்களுமே அகப்பொருளுக் குரியன வென்று விதிப்பாரேனும்* இவ் வரன்முறை பிற்காலத்துப் பிறழ்ந்து, ஆசிரியம், வெண்பா முதலிய பாக்களாலும் பாடுதல் என்பது பெரு வழக்காகி விட்டது. இதனைத் தொகை நூல்களிலும் கீழ்க்கணக்கு நூல்களிலும் கண்டுணரலாம்.

இந் நூலிலுள்ள ஐந்திணைகளையும் பாடிய புலவர்கள் ஓரம்போகியார், அம்மூவனார், கபிலர், ஓதலாந்தையார், பேயனார் என்போர். இதனை,

*"நாடக வழக்கினும் உலகியல் வழக்கினும்
பாடல் சான்ற புலனெறி வழக்கம்
கலியே பரிபாட் டாயிரு மருங்கினும்
உரிய தாகு மென்மனார் புலவர்" (தொல். அகம் ு

தலைமை உரை 7

"மருதமோ ரம்போகி, நெய்தலம் மூவன்,
கருதுங் குறிஞ்சி கபிலன்—கருதிய
பாலையோ தலாந்தை, பனிமுல்லை பேயனே
நூலையோ தைங்குறு நூறு"

என்னும் பழைய பாட்டினால் உணரலாம்.

இந்நூலை ஐந்து பகுதியாகப் பிரித்துப், பகுதி ஒன்றுக்குப் பத்துப் பாடல்களடங்கிய பத்துப் பத்தினை உட்பிரிவாக அமைத்து, ஒவ்வொரு தலைப்பிற்கும் கருப்பொருள் முதலியவற்றின் பெயரோடு இணைத்துப் பத்து எனப் பெயரிட்டுத் தொகுத்திருக்கின்ற முறையைக் கூர்ந்து நோக்கின், இந்நூல் தொகுத்த ஆசிரியர், இத்தகைய நூலொன்றை உருவாக்க வேண்டுமென்று முன்னரே தம்முள்ளத்துட் கொண்டு, ஐந்திணைகளில் எவ்வெத்திணையை எவ்வெப் புலவர் பாடுவதில் வல்லுநர் என்பதனை ஆராய்ந்து அவ் வப் புலவர்களை யணுகிப் பாடல் இயற்றச் செய்து, அவர்கள் புதிதாகப் பாடித்தந்தவற்றைக் கொண்டே இவ்விதம் இந்நூலைத் தொகுத்தனரோ எனக் கருதுதற்கும் இடமுண்டு.

இந் நூலைத் தொகுத்த ஆசிரியர், சங்கப் புலவராகிய புலத்துறை முற்றிய கூடலூர்கிழார் என்பார். தொகுப்பித்தோன் யானைக்கட்சேய் மாந்தரஞ் சேரலிரும்பொறை என்னும் சேர வேந்தன். கூடலூர் கிழாரைச் சேர நாட்டுப் புலவர் என்பர் மகாமகோபாத்தியாய உ.வே. சாமிநாத ஐயரவர்கள். எனினும், தொல்காப்பியம் சங்கத்துச் சான்றோர்களே தொகுத்தார்கள் என்பது பண்டைய உரையாசிரியர்கள்* உரைகளால் அறியப்படுகின்றமையின், இந் நூல் தொகுத்த இப் புலவர், சேரநாட்டவரே யெனினும், சங்கப் புலவர் என்பதில் தடையில்லை. இப் புலவர் 'புலத்துறை முற்றிய' என்று சிறப்பிக்கப்படுகின்றமையின், இவர் இலக்கண இலக்கியக் கடலின் கரைகண்டவரேயன்றி நுண்ணிய பல கலைகளையும் கற்றுத் துறைபோயவர் என்றுங் கருதப்படுகின்றார். இப் புலவரின் நண்பனாகிய யானைக்கட்சேய் மாந்தரஞ் சேரலிரும்பொறை இறந்தஞான்று, இவர்

* மலைபடுகடாம் 145 ஆம் அடி, நச்-உரை பார்க்க.

இரங்கிப் பாடிய 'ஆடியல் அழற் குட்டம்' என்ற புறப் பாட்டினால், இவரது வானநூற் புலமையும், சோதிடக் கலைத் திறமையும் இத்தகைய வென்று அறியப்படும். இந் நூலைத் தொகுப்பித்ததினால், இச்சேரல், அவன் முன்னோர் போலச் சிறந்த தமிழ்ப்பற்றும் புலமையும் வாய்ந்தவனென்று கருதலாம். இச் சேரன், பாண்டியன் தலையாலங் கானத்துச் செருவென்ற நெடுஞ்செழியனோடு பொருது, அவனாற் பிணிப்புண்டு, பின்னர் ஏதோ ஓர் உபாயத்தால் அப் பிணிப்பினின்றும் நீங்கித் தன்னுடை அடைந்து, அரசு கட்டில் ஏறியவன் என்று புறப்பாடல்களால் தெரியவருகின்றது.

அகப்பொருள் நூல்களுள் திணைகளை வைத்துக் கூறும் முறையை ஆசிரியர் தொல்காப்பியனார்,

"மாயோன் மேய காடுறை உலகமும்,
சேயோன் மேய மைவரை உலகமும்,
வேந்தன் மேய தீம்புனல் உலகமும்,
வருணன் மேய பெருமணல் உலகமும்,
முல்லை குறிஞ்சி மருதம் நெய்தல் எனச்
சொல்லிய முறையாற் சொல்லவும் படுமே"

என்று முல்லையை முதலாகக் கொண்டு கூறுவர். சொல்லவும் படுமே என்ற எதிர்மறை உம்மையால் இம் முறையிற் பிறழ அமைக்கவும் பெறும் என்பது புலப்படுகின்றமையின், முல்லையை முதலாகக்கொண்ட முறைக்கு வேறாகவும் தொகைநூல்களிலும், கீழ்க்கணக்கிலும் அகப்பொருள் நூல்களில் திணைகள் கோக்கப்பட்டிருக்கின்றன. எனினும், இவ் வைங்குறுநூறுபோல் களவு, கற்பு என்ற இருபகுதியுள் இரண்டாவதான கற்புக்குரிய மருதத்திணையை முதற்கண் வைத்து உணர்த்தும் நூல்கள் ஒன்றுமே இன்று என்னலாம். இங்ஙனம் கூடலூர்கிழார் மருதத்திணையை இந் நூலுள் முதற்கண்வைத்துத் தொகுத்தது, இ மருதத்திணையைச் சேர்ந்த 'வேட்கைப் பத்து' எ னும் முதற்பகுதியுள் பத்துப்பாட்டுக்களிலும் தம் நாட் சேரவேந்தனாகிய ஆதன் அவினி என்பான் வாழ்த்



சிறப்பிக்கப்பட்டிருக்கின்றமையாற் போலும்; அன்றியும், சேரர் துறைமுகப் பட்டினமாகிய தொண்டி என்னும் நகரினைச் சிறப்பித்துக் கூறும் 'தொண்டிப் பத்தினை'த் தன்னுட் கொண்ட நெய்தற் றிணையை இந் நூலுள் இரண்டாவதாக வைத்துத் தொகுத்திருப்பதும் இக் கருத்தினை வலியுறுத்தும்.

சுருங்கிய அடிகளில் முதல்-கரு-உரி என்னும் அகப் பொருள் மூன்றினையும் எஞ்சாது நயம்படப் புலப்படுத்த லில் இந்நூலுக்கு இணையாகக் கூறத்தக்க தொகை நூல்கள் வேறில்லை என்றே கூறலாம். இதனாலன்றோ தொல்காப்பிய அகத்திணையியலுள்,

"நாடக வழக்கினும் உலகியல் வழக்கினும்
பாடல் சான்ற புல்னெறி வழக்கம்"

என்ற சூத்திர உரையில், ஆசிரியர் நச்சினார்க்கினியர், முதல்-கரு-உரி என்னும் மூன்று பொருளும் கூறி, நாடக வழக்கும் உலகியல் வழக்கும் ஒருங்கே அமைந்ததற்கு,

"மனைநெடு வயலை வேழஞ் சுற்றும்
துறைகெழும் ஊரன் கொடுமை நாணி
நல்ல னென்னும் யாமே;
அல்ல னென்னுமென் தடமென் றோளே"

என்னும் இந் நூற் பாட்டினை உதாரணமாகக் காட்டியுள் ளார். எனவே, "தினையளவு போதாச் சிறு புல்நீர் நீண்ட, பனையளவு காட்டும் படித்தால்" என்னும் உவமை இந் நூலுக்கும் சாலப் பொருந்தும்.

இந் நூற் பாக்களெல்லாம் நோக்கு முதலிய செய் யுள் உறுப்பினைக்கொண்டு சொற்சுவை பொருட்சுவை துவன்றி விளங்குகின்றன. மரம், செடி, கொடி, பூ, விலங்கு, ஊர்வன, நீர்வாழ்வன முதலிய அஃறிணைப் பொருள்களின் இயற்கைத் திறங்களையும், மலை, ஆறு, பொய்கை, கடல் முதலியவற்றின் இயற்கை எழில்நலங் களையும் படிப்போரது கண்முன் நிறுத்திக் காட்டும் பான் மையை இந் நூற் பாட்டுக்களில் ஆங்காங்குக் கண்டு மகிழலாம்.

தமிழ்ப் பெருஞ் செல்வமான இந் நூலை அச்சிட்டு வெளிப்படுத்திய மகாமகோபாத்தியாய டாக்டர் உ. வே. சாமிநாதையரவர்களது பேருபகாரத் தகைமையைத் தமிழகம் என்றும் பாராட்டும். இந் நூலின் முதற் பகுதியாகிய மருதத்திணையின் நூறுபாடலுக்கும் தமிழ்மொழியின் கொழுமையும் செழுமையும் செறியப் புத்துரை ஒன்றெழுதி அச்சிட்டு வெளிப்படுத்திய சித்தாந்த கலாநிதி, தமிழ்ப் பேராசிரியர், ஒளவை சு. துரைசாமிப்பிள்ளையவர்களது புலமையும் தகைமையும் சாலவும் போற்றற்குரியன.

தமிழ்மக்கள்

தமிழ்மக்களது தோற்றமும் வாழ்க்கை வரலாறும் அளவிடற்கரிய தொன்மை வாய்ந்தவை. பன்னூறாயிரம் ஆண்டுகட்கு முன்னர் உலகெலாம் நீர்ப்பரப்பாகவே இருந்ததென்றும், பின்னர் ஒரு காலத்தில் அந் நீர்ப்பரப்பி னின்றும் மலைகள் தோன்றி, அதன் பின்பு மண் தோன்றிற் றென்றும், அம்மலைமீது படிந்திருந்த நீரணுக்களில் செறிந் துள்ள உயிரணுக்களினின்றும் பல்வேறு உயிரினங்களும் மரஞ் செடி கொடி வகைகளும் தோன்றிப் பின்னர் மக்கள் தோன்றினர் என்றும் ஒரு சார் உயிரியல், மண்ணியல் முதலிய நுண்ணியல் கலைவல்லார் கூறுவரென்ப. வீரத் தமிழ் மக்களது தொன்மையைச் சுட்டுதற்கெழுந்த பழம் பாட்டொன்று,

> கல்தோன்றி மண்தோன்றாக்
> முன்தோன்றி மூத்த குடி''

காலத்தே, வாளோடு

எனக் கூறுகின்றது. இது மேற்கூறிய கலைவல்லார் துணி பிற்கேற்பப் பொருந்தியிருப்பது, நம் முன்னோரது கலையறி வின் தேர்ச்சியைத் தெளிவுறக் காட்டிச் சாலவியப்பினைப் பயக்கின்றது. இப்பாட்டு, தமிழ்ப் பழங்குடி தோற்றமுற் காலம், கல் மாத்திரம் தோன்றி மண் தோன்றாப் பழங் காலம் என்று குறிப்பிடுகின்றமையின், அவர்களது மு பிறப்பிடம் மலையேயென்பது கூறாமலே விளங்கும்.

வுண்மையையெல்லாம் உட்கொண்டே ஆசிரியர் பரி மேலழகரும்,

> "வழங்குவ துள்வீழ்ந்தக் கண்ணும் பழங்குடி
> பண்பிற் றலைப்பிரித லின்று"

என்னும் குறளுரையில், பழங்குடி என்பதற்கு விளக்கம் எழுதுங்கால், "பழங்குடியாவது தொன்று தொட்டுச் சேர சோழ பாண்டியர் என்றாற்போலப் படைப்புக் காலந் தொட்டு மேம்பட்டுவரும் குடி" என்று எழுதியுள்ளார்.

உலகத்தில் உயிரினங்கள் முதலில் தோற்றமுறுதற் கேற்ற சூழ்நிலைகளையுடையது தமிழகமே என்றும், அதற்குக் காரணம் உலக உருண்டையில் உள்ள அழற்குழம்பின் வெம்மை தணிந்து முதலில் உயிரினங்கள் தோன்றுதற் கேற்ற வெப்ப தட்ப நிலையையடைந்த நிலநடுக்கோட்டின் அருகில் தமிழகம் அமைந்திருப்பதே என்றும் இக்காலத்து நில நூல், உயிர் நூல் வல்லார் பலரும் ஆராய்ந்து கூறிவருகின்றனர். இவ் ஆய்வுரைகளும் தமிழருடைய தோற்றத்தின் தொன்மையை நன்கு நாட்டுதற்குற்ற சிறந்த சான்றுகளாகத் திகழ்கின்றன. தமிழர் தொன்மையை நாட்டுதற்குரிய சான்றுகள் இவை போல்வன இன்னும் எத்தனையோ உள; அவற்றையெல்லாம் ஈண்டுரைப்பிற் பெருகும்.

இங்ஙனம் அலைகடலின் கொந்தளிப்பில் மலையின்கண் பிறந்த தொன்மையையுடையோர்

தோன்றிய
தமிழ் மக்

கள் என்னும் இக் கொள்கையை, அவர்கள் பேசிய தமிழ் மொழியின் பிறப்பிடமாக மலையினையே பழந்தமிழ்ப் பாட்டுக்கள் பல கூறுவதும் நன்கு வலியுறுத்துகின்றன.

"ஓங்க லிடைவந் துயர்ந்தோர் தொழவிளங்கி,
ஏங்கொலிநீர் ஞாலத் திருளகற்றும்—ஆங்கவற்றுள்,
மின்னேர் தனியாழி வெங்கதிரொன் றேனையது
தன்னேரி லாத தமிழ்"

ன்ற பழம் பாட்டு, சூரியனேடு தமிழுக்குப் பல்வகையில் புமை கூறப்புகுந்து, இரண்டிற்கும் பிறப்பிட ஒற்றுமை வங்கால், "ஓங்கலிடை வந்து" என்று மலையையே தமி நம் பிறப்பிடமாகக் கூறுகின்றது.

# 12

## ஐங்குறுநூற்றுச் சொற்பொழிவுகள்

"பொருப்பிலே பிறந்து தென்னன் புகழிலே கிடந்து"

என்று ஜில்லிபாரதமும் சொல்லியுள்ளது. இவ்வாறு தமிழின் பிறப்பகமாகத் தமிழ்ப்பாடல்கள் உரைக்கும் மலை, பொதியிலே என்பதனைக் கற்றோர் பலரும் நன்கறிவர். "தெரிமாண் தமிழ்மும்மைத் தென்னம் பொருப்பன்" என்ற பழைய செய்யுட் பகுதியில், பொதியில் இயல், இசை, நாடகம் என்னும் மூத்தமிழையும் உடையது எனக் குறிக்கின்றது. "தஞ்சை வாணன் மலைய வெற்பில், தேரும் தொறும் இனிதாங் தமிழ் போன்று" என்று தஞ்சை வாணன் கோவைச் செய்யுளடி, பொதியத்தில் முத்தமிழையும் சான்றோர் ஆராய்ந்த செய்தியை உணர்த்துகின்றது. "தமிழ்க்குன்றில் வாழும் சடாதரி பேரியாழ்" எனத் தக்கயாகப்பரணி பொதியத்தைத் தமிழ்க்குன்றென்றே கூறுகிறது.

கம்பர், தமது இராமாவதாரக் காப்பியத்தில், சுக்கிரீவன் சீதாபிராட்டியைத் தேடிவர வானரவீரர்களை உய்த்த போது அவர்கள் செல்லவேண்டிய வழிகளையும், எதிர்ப்படும் இடங்களையும் குறிப்பிடுவதாகக் கூறுமிடத்து,

> "தென்தமிழ் நாட்டு, அகன்பொதியில், திருமுனிவன்
> தமிழ்ச்சங்கம் சேர்கிற் பீரேல்"

எனப் பொதியத்தில் அகத்திய முனிவரைத் தலைவராய்க் கொண்ட தமிழ்ச்சங்கம் இருந்ததனைச் சுட்டுகின்றார். வால்மீகியோ, இவ்விடத்தில், மலய மலையின் உச்சியில் ஞாயிற்றின் கதிர்களோடு ஒத்த அறிவொளியின் பிழம்பாய்த் திகழும் அகத்திய முனிவரைக் கண்டு வணங்குங்கள் என்று கூறியதாக மாத்திரம் கூறியுள்ளார்.

வால்மீகி, மலயத்தில் தமிழ்ச்சங்கம் இருந்ததெனச் சுட்டாது செல்லவும், கம்பர் இங்ஙனம் கூறியது கடல் கொண்ட தமிழகத்திலிருந்த தென்மதுரை, கவாடபுரம் என்னும் நகரங்களும், அவற்றில் விளங்கியிருந்த சங்கங்களும் தோன்றுதற்கு முன்னரேயே தமிழாது (



பிறப்பிடமாகிய பொதிய மலையிலேயே முதல் தமிழ்ச்சங்கம் தோன்றியிருந்தது என்னும் தொன்மை வரலாற்றை உட்கொண்டேயாம் என்று கருதுவது பொருந்தும். பொதியமே மலைகளுள் முதுமையானது என்பதும், முதற்கண் உயிர்கள் அம்மலையின் கண்ணேயே தோன்றியிருந்தன என்பதும் முறையே இம்மலைக்கு வழங்கும் முதுகுன்று, பொதியில் என்னும் பெயர்களே நன்கு விளக்கும். இம் மலையே குமரிக்கோடு முதலிய மலைகள் தோன்றுவதற்கு முன்னரே தோன்றித் தமிழகத்துக்குத் தெற்கெல்லையாக இருந்தது என்பதனைச் சான்றோர் இதற்கு வழங்கும் தென்மலை என்னும் பெயரே நன்கு வலியுறுத்தும்.

"தென்னம் பொருப்பன் நன்னாட் டுள்ளும்",

"தென்மலைப் பிறந்த சந்தனம் மறுக"

"தெரிமாண் தமிழ் மும்மைத் தென்னம் பொருப்பன்"

என்ற சான்றோர் வழக்குகளைக் காண்க.

இப் பொதியிற்கண் உயிர்கள் தோன்றியவுடன் அவைகள் நிலைத்திருக்க வேண்டிய உயிர்வளியும்[1] ஆங்கு உடன் தோன்றியமைபற்றியே போலும், தென்றல் காற்றின் பிறப்பகமாகப் பொதியத்தையே புலவர்கள் புனைந்து கூறுவாராயினர்.

"தென்னவன் பொதியில் தென்றல்" (சிலப்.)

"ஆவியர் தென்றல் வெற்பின்" (திருவிளை.)

என்பன காண்க.

இவற்றையெல்லாம் ஆராயுங்கால், தமிழரது தோற்ற
...ம் தொன்மை நாகரிகமும் மொழியும் எல்லாம் இயற்கை
...கின் நிலையமாக விளங்கும் பொதிகை — மலையிடைப்
...து, நாளடைவில் மண்ணிடைப் பரந்து, காலக் கணிதத்
...எட்டாத பழைமை உடையதென்பது பெறப்படும்.
இங்ஙனமிருப்பவும் தமிழ்மக்களது பிறப்
...ராய்ந்து கூறப்புக்க சரித அறிஞர் சிலர், தமி

...en.



ழர் வடதிசை முதலிய திசைகளினின்றும் இந் நாட்டிற்கு வந்து குடியேறியவர்கள் என்னும் கருத்துப்பட எழுதிச் சென்றுள்ளனர். அக் கருத்துக்களெல்லாம் தவறானவை என்றும், 'செந்தமிழியற்கை சிவணிய நிலம்' என ஆசிரியர் தொல்காப்பியனார் சிறப்பித்த இத்தமிழகமே தொன்று தொட்டுத் தமிழர் பிறப்பகமாகும் எனவும் கருதுதல் பொருந்தும்.

இத்தகைய பழைமை வாய்ந்த தமிழ்மக்களையும் தமிழ் மொழியையும் இக்காலத்துச் சிலர் திராவிடர் எனவும் திராவிடம் எனவும் வழங்கி வருகின்றனர். தமிழ் மக்களை யும் மொழியையும் குறிக்க வழங்கும் இப்பெயர்கள், சங்க இலக்கியங்களிலும், மற்றைய பண்டைய தமிழ்ச் சான்றோர் வழக்குகளிலும் யாண்டும் காணற்கரியதாம். இப்பெயர் வழக்குகள் பிற்காலத்தெழுந்த ஒரு சில நூல்களுள்ளேயே பயின்றுள்ளன. திராவிடர் என்னும் இவ்வட சொற்குப் பொருள், ஓடி வளைந்து வந்தவர்கள் என்பதாகும். மலைதோன்றி மண் தோன்றாக் காலத்தே இத் தமிழ கத்திலேயே தோன்றி வாழும் மக்களுக்கு இப்பெயர் பொருந்துமாறு எங்ஙனம்? தமிழ் என்னுஞ் சொல்லைப் பன்முறை சொன்னாலே அமிழ்து என்னும் ஒலி விளை வதை உணரலாம். இங்ஙனம் இனிமை மிக்க அமிழ்தமான மொழிக்கு வடமொழியாளர் இட்டு வழங்கிய திராவிடம் என்னும் பெயர் எத்துணை அடாத முரண்பட்ட பெயரா கும். அந்தோ! அமிழ்தம் விடமாயிற்றே! இதனுடைமை யாது எல்லையிறந்த வடமொழிப் பற்றுடையார் ஒரு சிலர் திராவிடம் என்னும் வடமொழிப் பெயரே திரவிடம் திமிளம், திமிள், தமிழ் என்று திரிந்து வந்ததென் கூறித், தமிழர் அனைவரையும் தாம் பெற்ற மொழி பெயருமிடத் தெரியாத அறிவிலிகள் என்ற பட்டச் சூட்டுவாராயினர். இங்ஙனம் கூறுவாரது கூற்று கூற்றாகும். தமிழகத்தில் மிகப் பழங்காலத்தே ஒரு மொழி, வடவாரியர் வந்து பெயரிடும் வ லாது ஏக்குற்றுக் காத்துக் கிடந்தது போலும்

திராவிடர், திராவிடம் என்னும் பெயர்களின் இழி தகைமையை உணராது இக்காலத்து நம்மவர்களே இப்பெயர்களை ஏற்றுத் திராவிடர் திராவிடம் என்று வழங்குவது மிகவும் வருந்தத்தக்கதாகும். தமிழர்களது பண்பாட்டினையும் வாழ்க்கை முறைகளையும் சீர்திருத்தஞ் செய்தற்கு இக்காலத்து முனைந்து நிற்கும் தமிழறிஞர்களும் பெரியார்களும் தமிழரது தொன்மைத் தன்மைக்கும் பெருமைக்கும் இழுக்காக இப்போது வழங்கும் இப்பெயர் வழக்குகளை அறவே நீக்கித் தமிழர்—தமிழ் என்னும் பெயர் வழக்குகளே நாட்டில் தலைசிறந்து விளங்குதற்கும் வழங்குதற்கும் முயல்வதே தக்க செயலாகும்.

## ஐந்திணை

பன்னெடுங் காலம் மலைவாணராயிருந்த தமிழ் மக்கள் தங்களுக்குச் சிறந்த உணவாகப் பருகத் தேனைப் பெருகத் தரும் குறுஞ்சித் தருக்களை அம்மலை மிகுதியாகக் கொண்டிருந்தமைபற்றித் தாங்கள் வாழ்ந்த அவ்விடத்தைக் குறிஞ்சி எனப் பெயரிட்டழைத்தனர். பின்னர் மலைசார்ந்த நிலம் படிப்படியே தோன்ற, மலைவாணருட் சிலர், அந்நிலப் பகுதியினும் குடியேறுவாராயினர். அந்நிலம், அம்மலையின் புறம்பாக இருந்தமையால் புறவு எனவும், அதனுள் நறுமலர் முல்லைச் செடிகள் செழித்து வளர்ந்தமையின் முல்லையெனவும் அந்நிலப் பகுதியைப் பெயரிட்டழைத்தனர். அவர்கள் மலைகளிலிருந்து தாம் கொணர்ந்த ஆநிரை முதலியவற்றை வளர்த்துப் பேணி, அவற்றின் பயன்கொண்டு

வாழ்க்கை புரியலாயினர். இதுவரை மலையில் காய்கனி கிழங்கு முதலியவற்றையே உண்ட இவர்கள், பின்னர் முல்லை நிலத்தில் உழுது பயிரிட்டு உணவினை விளைத்து உண்டு வாழவும் அறிந்தனர். இந்நிலத்து வாழ்ந்த இம்மக்கள், தங்கள் ஆநிரைகளைப் பிறவுயிர்களால் தீங்கு வாராமல் அரணமைத்துக் காக்கும் தொழில் புரிந்து வந்த பயிற்சி வயத்தால் மக்களுள் தலைமை பூண்டு, அவர்களைக் காக்குந் தொழிலும் கைவரப் பெற்றனர். பின்னர் ஒருசிலர், அம்



முல்லையம் புறவினை அடுத்து, நிலத்தினை அகழ்ந்து நீர் நிற்றற்கு இடஞ்செய்து வரம்புகோலிச் செந்நெலும் கன்னலுமான விளைவுகளை விளைத்து உண்டு திளைத்தனர். இந்நிலத்தில் மருதமென்னும் ஒருவகை மரம் வானுற ஓங்கி வளர்ந்தமையால், அம் மரத்தின் பெயரால் இந்நிலம் மருதமெனப்பட்டது. பின்னர் ஒருசிலர், கடல் அருகிலுஞ் சென்று, அங்குள்ள பெருமணல் உலகிலும் வைகி வாழலாயினர். இப்பகுதியில், கழிக்கரையிடத்து நெய்தல் என்னுஞ் செடி செழித்து வளர்ந்திருந்தமையால், இந் நிலப்பகுதியை நெய்தலெனக் கூறினர். இந்நிலத்து வாழ்ந்த மாந்தர் உழா உழவினராய் உப்பு விளைத்தும், மீன் பிடித்தும், மரக்கலம் உய்த்தும் தம் வாழ்க்கையை நடத்தினர்.

மேற்குறித்த இந் நால்வகை நிலங்களுள், முல்லை குறிஞ்சி என்னும் நிலங்களின் இடையே வளம் குன்றிய நிலப்பகுதியும் உளவாயின. இதனுள் பாலையென்னும் மரமொன்று வளர்ந்தமையால் இது பாலை யெனப்பட்டது. இதில் வாழும் மக்கள் வில்லும் அம்பும் கருவியாகக் கொண்டு வேட்டமாடி விலங்கு ஊன் மிசைந்து வாழ்ந்தனர்.

ஆகவே, பண்டைத் தமிழ்மக்கள் வாழ்ந்த நிலப்பகுதிகள் ஐந்தும், அங்கு வளரும் மரஞ்செடிகொடி வகைகளானே குறிஞ்சி முல்லை மருதம் நெய்தல் பாலை எனப் பெயர் பெறலாயின என்பது தெளிவாம்.

முன்னாளில் வான்றோய் மலையிடத்து ஆன்ற ஒரே குடி மக்களாய் இருந்த தமிழ்மக்கள், நாளடைவில், தாங்கள் வாழ்ந்த நிலப்பகுதியினால் அவர்கள் குன்றவர், ஆயர், உழவர், பரதவர், மறவர் என ஐந்து குழுவினராகப் பிரிவுண்டனர். இவர்களுள், முல்லை மருத மக்களிடையேதான் முதலில் சீரிய நாகரிகம் தோன்றியது என்னலாம். தண்ணளியாலும், அறிவாலும், ஆற்றலாலும், முயற்சித் திறத்தாலும் சிறந்தோரெல்லாம் முறையே அந்தணர், அறிவர், அரசர், வணிகர் எனப் பிற்காலத்துத் திணைமக்களினின்றும் பிரிந்து நகரங்களில் உறைந்து வாழ்வாராயினர்.



## ஐந்திணை வாழ்க்கை இலக்கணம்

நகரவாழ்க்கையினராகிய இவருள் ஒரு சிலர், புதுமைப் பித்தர்களாய் முதலில் ஆரிய நாகரிகத்தைத் தழுவ மூற்பட்டனர். இங்ஙனம் பன்னெடுங்காலம் தமிழ் கூறும் நல்லுலகத்தில் வாழ்க்கை புரிந்த மக்களது வாழ்க்கை நெறியினை வரையறை செய்யக் கருதிய சான்றோர், அவர்களது காதலும், வீரமும் ஆகிய அகம், புறம் என்னும் வாழ்க்கைகளுக்கு இலக்கணங்கள் வகுப்பாராயினர். களவு, கற்பு என்னும் அவர்களது இருவகை மணமுறைமையையும் வகுத்துக் கூறும் அகப்பொருள் இலக்கணத்துள், மக்கள் வாழும் குறிஞ்சி முதலாய நிலத்தையும், கூதிர்கால முதலாகிய காலவகைகளையும் முதற்பொருள் என்றும், அந் நிலங்களில் கருக்கொண்டு தோன்றும் இயங்கும் பொருள் இயங்காப் பொருள்களாகிய விலங்கு, பறவை, மரஞ்செடி முதலியவற்றைக் கருப்பொருளென்றும், மக்களது காதல் வாழ்க்கை ஒழுக்கங்களை உரிப்பொருளென்றும் அவ்வப் பொருள்களின் இயல்பிற்கேற்ப இயைபுடைய பெயர்களால் குறியீடுசெய்து இயம்பிவைத்தனர். பண்டைச் சான்றோர், தம் நூல்களுள் இம் முப்பொருளின் இயல்பினைப் பாகுபடுத்திக் கூறியிருக்கும் பான்மையினை ஆராயின், மண்ணியல், உயிரியல், மரவியல், உளவியல் முதலிய பல்கலைத் துறைகளிலும் அவர்கள் பெற்றிருந்த ஆன்ற அறிவின் திட்பம் எத்தகைய நுட்பமுடையதென இக் காலத்துக் கலைவல்லுநர்களும் பெரிதும் வியக்கத்தக்கதாயுளது. இவ்விலக்கணநெறி வழாதே பண்டைப் புலவரெல்லாம் காதற் பனுவல்களாம் அகப் பொருட் பாட்டுக்கள் பல பாடிப் புலனெறிவழக்கம் செய்துள்ளனர். தமிழ் மொழியிலுள்ள பழம் பாட்டுக்களை ஆராயின், புறப் பொருட் பாட்டுக்களினும் அகப்பொருட் பாட்டுக்களே எண்ணிக்கையில் மிக்குள்ளன என்பதை அறியலாம். இதுகொண்டே ஆசிரியர் நச்சினார்க்கினியர், "தமிழ் மொழியின் மிகப் பொலிவிற்கும் அகப்பொருள்"

தமது பொருளதிகார உரையில், விதந்துரைப்பாராயினர்: இதனால் பண்டைத் தமிழ் மக்கள், அன்பினில் விளையும்





காதல் இன்பவிளைவின் உயர்வினை ஓர்ந்து அதனை நுகர்ந்த திறன் இத்தகையதென்பது உணரப்படும்.

ஓர் அகப்பொருள் பாட்டினுள், முதல் கரு உரிப் பொருள் மூன்றும் அமைந்திருப்பது சிறப்புடையதாகும். இவற்றுள் முதலும் கருவும் இல்லாதிருப்பினும், மக்களது இன்ப ஒழுக்கமாகிய உரிப்பொருள் இருந்தே தீரவேண்டும். இன்றேல், அஃது அகப்பொருட் பாட்டாகாது பொருட் பயனின்றி முடியும். அகப்பொருட் பாட்டினில், இடமும் பொழுதுமாகிய முதற்பொருளும், மரம், செடி, கொடி விலங்கு, பறவை முதலிய கருப்பொருள்களும் வருவது, மக்களது இயற்கையோடியைந்த வாழ்வின் அழகினை விளக்குதற்கும் அமையத்துக்கேற்பக் காதற்றிற உணர்ச்சி களை மீப்படத் தூண்டி நாடகக் காட்சியாய் நன்கு புலப் படுதற்குமேயாம். (இவ்வியல்பெல்லாம் இக்கால வெள்ளித் திரைப்படக் காட்சிகளில் இலங்கி, மக்களை இன்புறுத்தி வருவது அனைவரும் கண்டறிந்ததே.)

இதனையே ஆசிரியர் தொல்காப்பியனர்,

"நாடக வழக்கினும் உலகியல் வழக்கினும்
.........................................................
பாடல் சான்ற புலனெறி வழக்கம்"

எனக் குறித்துப் போந்தனர்.

அகப்பொருள் பாட்டினுள் வரும் காதல்வாழ்க்கையாகிய உரிப்பொருள், ஒருவர்க்கே சிறப்பாக உரியதன்றி மக்கள் யாவருக்குமே உரிய பொதுப்பொருளாதலால், அப்பாட்டினுள் ஒரு தலைவன் இயற்பெயர் சுட்டுதல் கூடா. அங்ஙனம் பெயர் சுட்டின், அது மக்கள் யாவருக்குமுரிய அகப்பொருட் பாட்டாகாது; ஒவ்வொருவருக்கே சிறப்பாக உரியதாகிவரும் புறப்பொருளாகிவிடும். இது பற்றியே ஆசிரியர் தொல்காப்பியனார்,

> "மக்கள் நுதலிய அகனைந் திணையும்
> சுட்டி யொருவர் பெயர்கொளப் பெறாஅர்"

என்று தெளியக் கூறியுள்ளார். தொல்காப்பியம் முதலிய இலக்கணங்களையும், பண்டை இலக்கியங்களையும் ஆராய்

வழி, கைக்கிளை, பெருந்திணை, அன்பின் ஐந்திணை என்னும் மூன்றுவகையான மணமுறைகள் தமிழ்நாட்டில் நிகழ்ந்து வந்தன என்பது புலனும். கைக்கிளையாவது, காமஞ்சாலா இளம்பெண்ணை ஒருவன் விரும்பி மணப்பது. இது ஒரு தலைக்காமம் (ஒரு பக்கத்துக் காதல்) எனவும்படும். பெருந்திணையாவது, ஒரு ஆடவன் தனக்கு வயதில் முதிர்ந்தவளை மணப்பதும் விரும்பாத ஒரு பெண்ணை வலிதில் கவர்வதும் ஆம். இது பொருந்தாக் காமம் எனவும்படும். ஒரு தலைவி தன் தலைவன் பிரிவினை ஆற்றியிராது அவனை நாடித் தேடிச் செல்லுதலும் இத்திணையுள்ளேயே அடங்கும். இவ்வொழுக்கம் இழிசெயலில் பெரியது ஆதலால், பெருந்திணை எனப் பெயர் பெற்றது. அன்பின் ஐந்திணையாவது உருவாலும், திருவாலும், அறிவாலும், அன்பாலும் ஒத்த இளமையும் அழகும் தவமும் ஒரு தலைவனும் தலைவியும் தம்முள் எதிர்ப்பட்டஞான்று, ஒருவருள்ளத்து ஒருவர் புகுந்து ஊழ்வயத்தால் உள்ளங் கலந்து காதலால் களவு மணமாக ஒழுகுதலும் பின்னர்ச் சில திங்கள் கழிந்து தமர் புணர்த்தக் கற்பு நெறியில் நின்று ஒழுகுதலுமாம். இம் மூன்று விதமான மணமுறையில், கைக்கிளையும் பெருந்திணையும் ஒரு சில தாழ்ந்தோரிடையே நிகழ்வனவாதலால், அவற்றினைக் கடிந்து அன்பின் ஐந்திணை ஒழுக்கமே மக்கள் கடைப்பிடித்தற்குரியனவெனக் கருதுமாறு நல்லிசைப் புலவர்கள் தொல்காப்பியர் காலத்திற்கு முன்னரேயே புலனெறி வழக்கம் செய்து போற்றி வந்துள்ளனர்.

அன்பின் ஐந்திணை எனப்படுவது, களவு-கற்பு என்னும் இருவகை மணத்தினுள்ளும் அடங்கும் பகுதிகளாம். ஐந்திணைகளுள் குறிஞ்சித்திணை களவுக்கும், முல்லையும் மருதமும் கற்புக்கும், பாலையும் நெய்தலும் களவு, கற்பு என்னும் இரண்டற்கும் உரிய திணைகளாம்.

குறிஞ்சி என்பது, காதலால் இருவர் மனமொத்து மணப்பதாம். முல்லை, தலைவி இல்லற நிலையிலிருக்குங்கால் தலைவனது பிரிவினை ஆற்றி இருத்தலாம். பாலை, தலைவியைவிட்டுப் பொருளீட்டல் முதலிய வினைவயிற் பிரித



லாம். மருதம், தலைவி தலைவனுடன் சிறு காரணவகைகளால் ஊடுதலாம். நெய்தல், தலைவன் பிரிவாற்றாது இரங்குதலாம். மக்களது அகப்பொருள் வாழ்வில் இயல்பாக நிகழும் இத்திறங்களையெல்லாம் இங்ஙனம் வரன்முறையோடு பகுத்துக் குறியீடு செய்த பண்டையோர் நுண்மதித் திறனை என்னென்று வியப்பது!

மக்களது அகவொழுக்கமாகிய குறிஞ்சி முதலிய இவ்வைந்திற்கும் இங்ஙனம் பெயர் வந்தது, நிலத்தின் பெயரைக் கொண்டேயாம். திணை என்னும் பெயர் குடிமை, நிலம், ஒழுக்கம் முதலிய பலபொருள் குறிக்கும் ஒரு சொல்லாம். இந் நிலத்தின் பெயர்கள் அவ்வந் நிலத்து மக்கள் ஒழுக்கத்திற்கும் ஆனது ஆகுபெயரின் பாற்படும். இனிக், குறிஞ்சி முதலிய இத்திணைப் பெயர்கள் நிலத்தினடியாக ஆகுபெயராய் வந்ததென்று கொள்ளாது, இவ் வொழுக்கத்திற்கும் தனியாக உரித்து இப்பெயர் என்பர், நச்சினார்க்கினியர். அதற்கு அவர் "முல்லை சான்ற முல்லையம் புறவு," "மருதம் சான்ற மருதத் தண்பணை" முதலிய பண்டைப் பாட்டுக்களின் வழங்கும் வழக்குகளை எடுத்துக் காட்டுவர். (இவ்வடிகளில் வரும் முல்லையும், மருதமும் கொடியும் மரமுமேயாம்.) களவியல் உரைகாரர், இதனினும் வேறாய்க் குறிஞ்சி முதலிய ஒழுக்கத்தின் பெயரே நிலத்திற்கு ஆயிற்று என்பர். மணத்தலும், இருத்தலும், பிரிதலும், ஊடலும், இரங்கலுமாகிய இவ்வைந்திணை ஒழுக்கங்களை முறையே குறிஞ்சி முல்லை பாலை மருதம் நெய்தல் ஆகிய நிலங்களிலேயே நிகழ்வன எனக் குறியீடு செய்யின், இவை பிற நிலங்களுள் நிகழா என்பது பெறப்படும் அன்றே? இவை இங்ஙனம் குறித்த நிலங்களினன்றிப் பிற நிலங்களுள்ளும் நிகழ்தல் கண்கூடாமன்றே? இங்ஙனம் இருப்பவும், இவ்வரையறை பொருந்துமாறெங்ஙனம், எனின்? இவை பிற நிலங்களுள்ளும் நிகழாவென்பது ஆன்றோர் கருத்தன்று; அந்தந்த அகப்பொருள் ஒழுக்கங்களுக்குரிய சூழ்நிலைகளும், சுற்றுச்சார்புகளும் இங்குக் குறித்த குறிஞ்சி முதலிய நிலங்களில் இயற்கையாய்

ஏற்புடையதாகச் சிறந்து அமைந்திருத்தலின், நாடக வழக்காக இங்ஙனம் புலனெறி வழக்கம் செய்தன ரென்க.

இப் புலனெறி வழக்கிற்கு ஆசிரியர் தொல்காப்பியனார்,

"திணை மயக்குறுதலும் கடிநிலை இலவே"

எனப் புறனடை கூறி, மணத்தல் முதலிய அகப்பொருள் ஒழுக்கங்கள் ஒவ்வொன்றும் எல்லா நிலங்களுள்ளும் நிகழும் என உலகியல் புலப்படுத்தியிருத்தல் காண்க.

இச்சூத்திர உரையில், ஆசிரியர் நச்சினார்க்கினியர், ஐந்திணையும் எல்லா நிலங்களிலும் மயங்கி வருதற்கு எடுத்துக் காட்டாக இவ்வைங்குறு நூற்றுப் பாட்டுக்களையே எடுத்துக் காட்டி, "இவை ஐங்குறுநூறு" எனக் கூறியுள்ளார். இதனால், இந்நூல் நுண்ணிய இலக்கண விதிகட்கெல்லாம் இலக்கியமாகத் திகழ்வது என்பது புலனாம்.

## உள்ளுறை உவமம்

ஆசிரியர் தொல்காப்பியனார், செய்யுள்களின் கருத்தைத் தெளிவுறக் காட்டற்குரிய உவமத்தை உள்ளுறையுவமம், ஏனையுவமம் என இரண்டாகப் பகுத்துக் கூறுவர். ஏனையுவமம், அகம் புறமென்ற இருபொருளுக்கும் பொதுவானது; உள்ளத்தால் ஆய்ந்து உணர வேண்டாது, சொல்லியுள்ள சொல் துணையானே உணருந் தன்மையது; இது, செய்யுளில், பொருளினின்றும் தனியாக நிறுத்திக் கூறப்படும். உள்ளுறை யுவமமோ, அகப்பொருட் செய்யுட்கே சிறப்பாக உரியது. இதனாலேயே தொல்காப்பியனார், உவமவியலுள் இதன் இலக்கணம் கூறியதன்றி, அதற்கு முன்னதாக அகத்திணையியலுள்ளும் இவ்வுவமையை விரித்துணர்த்தியதும் என்க. உள்ளுறையுவமம், தெய்வமொழிந்த திணைக் கருப்பொருள்களின் இயல்பினை எடுத்துரைக்குமுகத்தான், தலைவி தோழி முதலியோர் தாம் உரைக்கும் கருத்துக்களை அவற்றுள் உள்ளுறுத்துக் குறிப்பாக அறிஞர்க்குப் புலப்படக் கூறலாம். இனி, "கரைசேர்



வேழம் கரும்பிற் பூக்கும் துறைகெழு ஊரன்" என்றாற் போலக் கருப்பொருளை ஏனையுவமம்போல் வைத்து உள்ளுறைப் பொருள்தர வைப்பதுமுண்டு. இங்ஙனம் வருவதாலேயே இதனை உவமப்போலி எனவும், இது ஐவகைப்படும் எனவும் ஆசிரியர் தொல்காப்பியனார் கூறுவர்.

"உவமப் போலி ஐந்தென மொழிப"

"தவலருஞ் சிறப்பினத் தன்மை நாடின்,
வினையினும் பயத்தினும் உறுப்பினும் உருவினும்
பிறப்பினும் வரூஉந் திறத்த வென்ப"

என்ற தொல்காப்பிய நூற்பாவினால் இதனை யறியலாம். இதனுள் உள்ளுறையைத் 'தவலருஞ் சிறப்பின்' என ஆசிரியர் சிறப்பித்தது, அகப்பொருளுக்கு அதன் இன்றியமையாமையை நன்கு புலப்படுத்தவே என்க.

தலைவி, தோழி இவர்கள், தலைவன் வரைவு நீட்டித்தவிடத்தும், பரத்தை வயத்தனான போதும் முனிந்து பேச நேர்ந்தழி, தலைவனது உள்ளத்தைச் சிறிதும் வருத்தாமலும், காதற் கருத்துக்களைப் பிறர் எளிதில் அறியாமலும் இருத்தற்கு இவ்வுவமம் நன்கு பயன்படுகின்றது. தலைவி உள்ளுறை அமைத்துப் பேசுதலென்பது, களவு கற்பு என்ற இருவகை ஒழுக்கத்துள் கற்பொழுக்கத்திலேயே பெரும்பாலும் நிகழ்வதாகும். தலைவன்மீது முனிவும் புலவியும் தோன்றியவிடத்துத் தலைவி உள்ளுறை அமைப்பது மருதம் நெய்தல் திணைகளின் கருப்பொருட்களைக் கொண்டே என்றும், தோழி, செவிலி உள்ளுறை அமைப்பது எல்லா நிலத்துக் கருப்பொருட்களையும் கொண்டென்றும் தொல்காப்பியனார் கூறுவர்.

ஐங்குறுநூற்றுப் பாட்டுக்கள் அடியளவிற் குறைந்து சிறிய பாட்டுகளாக இருக்கின்றமையின், வேண்டிய கருத்துக்களை நன்கு புலப்படுத்தற்கு இவ்வுள்ளுறையுவமம் இந்நூலிடத்துப் பல செய்யுள்களில் மேற்கொள்ளப்பட்டிருக்கிறது.

இந்நூல் முதற் பகுதியாகிய மருதத் திணையுள், முதற் பத்தாகிய வேட்கைப் பத்தில், முதற் பாட்டாகிய,

## 23

"வாழி ஆதன்; வாழி அவினி;
நெற்பல பொலிக; பொன்பெரிது சிறக்க;
எனவேட் டோளே யாயே; யாமே,
நனைய காஞ்சிச் சினைய சிறுமீன்
யாண ரூரன் வாழ்க;
பாணனும் வாழ்க எனவேட் டோமே."

என்னும் பாட்டில் அமைந்துள்ள உள்ளுறை உவமை நயத்தை முதலில் நோக்குவாம்.

இப்பாட்டு, பரத்தையர் வயத்தனாய்த் தலைவியைப் பிரிந்து அவர்கள் அகத்தில் நெடுநாள் வைகியிருந்து, பின்னர் இவ்வொழுக்கம் தகாதெனத் தன் உள்ளத்தில் தெளிந்த தலைவன், மீண்டு வந்து, தன் இல்லில் இல்லாளுடன் கூடியொழுகும் நாளில், ஒரு நாள் தோழியோடு உரையாடுகின்றவன், "தோழி, நான் புறத்தொழுக்கத்தனாயிருந்தபோது நீவிர் என்ன நினைந்தீர்கள்" என்ன வினவியதற்குத் தோழி கூறுவது:

"தலைவ! நீ எங்களைப் பிரிந்திருந்த காலத்தில், தலைவி, மடவார் கற்பு நிலைபெறும்பொருட்டு அரசன் செங்கோலாட்சி நிலைக்க என்றும், விருந்தாக வந்தோரைப் போற்றற்கு நெல்மிக விளைக என்றும், வறுமையால் வருந்தி வந்தோர்க்கு நல்கச் செல்வம் செழித்தோங்குக என்றும் விரும்பி, வாழ்த்தி, இல்லறமே நினைந்து ஒழுகினாள். அன்றியும், பூக்கள் நிறையப் பூத்த காஞ்சி மரங்களையும் சிறுமீன்களையும் உடைய ஊர்களுக்குத் தலைவனை நீயும் வாழ்க; உன் வாயிலாகிய பாணனும் வாழ்க என்றும் வாழ்த்தி வாழ்ந்தோம்," என்று கூறுகின்ற தோழி, "நனைய காஞ்சிச் சினைய சிறுமீன் யாணரூரன் வாழ்க" என்ற பகுதியில் உள்ளுறை அமைத்துத் தன் கருத்தினைக் குறிப்பாகப் புலப்படுத்தி யிருப்பது சால வியத்தற்குரியதாகும்.

"சிறந்த காஞ்சியின் பூவும் சினைகளையுடைய சிறுமீனும் ஒப்ப விளையும் ஊர்களையுடையவனன்றோ நீ; இவ்வூரின் இயல்புதானே உன்னிடமும் அமைந்திருக்கும்?

அதனாலன்றோ, கற்பிலும் காதலிலும் நற்பால் ஒழுக்கத்திலும் மெல்லியற் பொறையிலும் விருந்து புறந்தருதலிலும் சிறந்த என் தலைவியை, இக் குணங்களுக்கு எதிரான இழிதகைமையுடைய பொதுமகளுக்கு ஒப்ப நினைந்தொழுகினாய்?" என்று தலைவனை இடித்துரைக்கக் கருதிய தோழி அதனை வெளிப்படையில் கூறாது, கருப்பொருள்களின் இயல்பு புலப்படுத்துமாற்றான் குறிப்பிற் பெற வைத்த திறன் எத்துணைச் சிறப்புடையதாகும்!

ஒரு தலைவன் மகப்பேறுவாய்த்த தலைவியைப் பிரிந்து பரத்தை வயத்தனாய் இருந்து, தலைவி புனலாடிப் புனிறு தீர்ந்தமையை அறிந்து தன் பிரிவாற்றாமையே தனக்கு வாயிலாகக்கொண்டு தன் இல்லில் புகவும், தலைமகள் அவனைக் கண்டு வெகுண்டு கூறுவதாக உள்ள பாட்டு,

"கரும்புநடு பாத்தியிற் கலித்த தாமரை
சுரும்புபசி களையும் பெரும்புன லூர!
புதல்வனை யீன்றவெம் மேனி
முயங்கன்மோ தெய்யநின் மார்புசிதைப் பதுவே"

என்பது. இப்பாட்டில் தலைவி, 'தலைவ! இவ்வில்லம் எமக்காக அமைக்கப்பட்டதல்லவே; உமது காதற் பரத்தைக்கும் இற்பரத்தைக்கும் அமைக்கப்பட்டதல்லவோ இது? கரும்பு நடுவதற்கென்று அமைக்கப்பட்ட பாத்தியில் தாமரை முளைத்துத் தழைத்துத் தன் மலர்த் தேனினால் வண்டுகளின் பசிதீர்ப்பதுபோல, நான் இவ்வில்லில் இருந்து விருந்தோம்பி இல்லறம் புரிகின்றேன். ஒருத்தி இல்லில் ஒருத்தி உறைவது எவ்வளவு இழிதக்கது! சேய் பெற்றமையால், பேய்போல் இளமையும் அழகும் கெட்டு விளங்குகின்றேன் என்று என்னை இகழ்ந்து சென்ற நீ, இப்போது என்னை விரும்பி வந்து தழுவினால், பரத்தையினால் கோலஞ் செய்யப்பட்ட நின் அழகிய மார்பு பொலிவிழக்குமே! ஆதலால், என்னை முயங்கல் ஒல்லாது,'' என்றெல்லாம் தலைவி, தலைவனது ஊரின் கருப்பொருளால் உள்ளுறையமைத்துத் தன் வெறுப்புள்ளமும் துன்பமுந் தோன்றக் கூறியிருக்கும் இயல்பு கற்போர் உள்ளத்தை மிகவும் கவரும்



பான்மையது.

இன்னும் இவ்வுவமையின் இனிமையும் அழகும் அமைந்த பாடல்கள் எத்தனையோ உள்ளன.

## பாட்டின் பொருள்நயம்

தலைவியினது உள்ளங் கவர்ந்த கள்வன் ஒருவன் உளன் என்பதனைத் தோழியும் செவிலியும் அறத்தொடு நிற்கு மாற்றான் நற்றாய்க்கு உணர்த்தியும், பெற்றோர் அவனுக்கு மணம் நேராது, பிறனொருவனுக்குத் தலைவியை மணஞ் செய்ய முற்படுவதை அறிந்த தோழி, தலைவியாற் காதலிக் கப்பட்ட காதலனுடன் தலைவியை நள்ளிரவில் உடன் போக்காக உய்த்துவிடுகின்றாள். பொழுது புலர்ந்ததும் தாய், மகளை அகத்தில் காணாது அலமந்து மனம் நொந்து சேரியிலும் அயலிடத்திலும் தேடிவர ஆள் போக்கு கின்றாள். தேடிச்சென்றோர், தலைவியைக் காணாது வந்து சொல்லவும் தாய் பலவாறு அழுது புலம்புகின்றாள் என்று உரைக்கின்றது, தாயிரங்குபத்திலுள்ள,

"இதுவென் பாவை பாவை; இதுவென்
பூவைக்கு இனியசொற் பூவை; எனது
அலமரு நோக்கின் நலம்வரும் சுடர்நுதல்
பைங்கிளி எடுத்த பைங்கிளி என்றிவை
காண்டொறும் காண்டொறும் கலங்க
நீங்கின ளோவென் பூங்க ணோளே"

என்னும் இப்பாட்டு.

தலைவியைத் தேடிச் சென்றோர், அவளைக் காணவில்லை எனவும், தாய், அகத்தினுள் புக்கு, தன்மகள் விளையாடிப் பழகுமிடமெல்லாம் கூர்ந்து நோக்கிநோக்கி, மகள் கொஞ்சி விளையாடும் பாவை ஒன்றைக் கண்டெடுத்தாள்; "என் பாவை விளையாடும் பாவையன்றோ இது" எனப் புலம்பி அழுதாள். தன்மகள் அளியோடு வளர்க்கும் கிளியைக் கண்டாள்; "இது என் பைங்கிளி கையிலேந்தும் பைங்கிளியன்றோ" என்று மனமழிந்தாள். பூவைப் புள்ளினைக் கண்டாள். "என் பூவைக்கு நாவை அசைத்து இனிய சொல்லின்ப மளிக்கும் பூவையன்றோ இது"



என்று புலம்பினாள். "இவை யெல்லாங் கண்டு கண்டு யான் கண்கலங்க என்னை நீங்கினளே என் பூங் கண்ணாள்" என்று அகங்குழைந்து ஏங்குகின்றாள்.

ஒருவர், தம் அன்புக்குரியார் பிரிவோ பெரும் பிரிவோ உற்றபோது எல்லையில்லாப் பெருந்துன்பம் எய்துதலும், பின்னர் அவர்கள் வைத்தாண்ட பொருள்களைக் காணுந்தோறும் பிரிவுத் துன்பம் மீக்கூர்ந்து பெரும்படர் உறுவதும் உலகியல்பு; இவ்வியல்பு வழாது இப் பாட்டில் இங்ஙனம் மிகச் சுவைப்படச் சித்திரிக்கப்பெற்றுள்ளமை அறிஞர் உளங்கொண்டு வியக்கற்பாலதாம்.

முன்பு ஒருமுறை களவொழுக்கத்தில் தலைவன் பிரியேன், பிரியினும் தரியேன் எனப் பிரிவு என்பது ஒன்று உண்டு என்பதனைக் குறிப்பாக உணர்த்தியவன், தலைவியுடன் இல்லின்கண் இருந்து மனையறம் ஆற்றும்போது

'ஈதலும் துய்த்தலும் இல்லோர்க்கு இல்லை' என்னும் உண்மை உணர்ந்தும், 'வினையே ஆடவர்க்கு உயிர்நிலை' என ஆள்வினையின் உயர்வினை ஓர்ந்தும் பொருள் ஈட்டுதற்குப் பிரியக் கருதி, ஒருநாள் தலைவியுடன் அமர்ந்திருக்கும் தோழி முன்னிலையில், "நான் இப்போது உங்களை விட்டுப் பிரியினும், வேனிற் காலத்தே, உங்களுடன் சோலை விளையாட்டு விளையாடி மகிழ்தற்கு வந்துவிடுவேன்" என்று பருவங் குறித்துப் பிரிய முற்பட்டான். அதனைக் கேட்டதும் செலவழுங்குவிக்கும் தோழி, "பெரும! எங்கள் மெல்லியளாகிய தலைவி அதுவரை உயிரோடு இருப்பின், வேனிற் கால இன்ப விளையாட்டு எம்மோடு நுகருவீர்" என்று கூறுகின்றாள்.

"தண்பத வேனில் இன்ப நுகர்ச்சி
எம்மொடு கொண்மோ பெருமநின்
அம்மெல் லோதி அழிவிலள் எனினே"

என்னும் இச் செய்யுளடிகள் எவ்வளவு கருத்து நுண்மையும் இனிமையும் அமைந்து விளங்குகின்றன. இதனுள், தலைவன் பிரியின் பிரிவாற்றாது தலைவி உடனே இறந்துவிடு

வள் என்னும் கருத்தினை வெளிப்படுத்துதற்குத் தோழி மேற்கொண்ட சொற்சாதுரியம் மிகவும் போற்றற்பாலது. இவ்வடிகளுள் "செல்லாமை யுண்டேல் எமக்குரை, மற்று நின், வல்வரவு வாழ்வார்க் குரை" என்னும் இனிய திருக்குறட் கருத்து முழுதும் அமைந்து விளங்குவது அறிந்து இன்புறத்தக்கது. இன்னும் இந்நூலுள், குறிஞ்சித் திணையுள்,

"அன்னாய் வாழி"ப் பத்தில், இரண்டாவதாக விளங்கும் பாட்டு,

"அன்னாய் வாழிவேண் டன்னைநம் படப்பை
தேன் மயங்கு பாலினும் இனிய அவர் நாட்டு
உவலைக் கூவற் கீழ
மானுண் டெஞ்சிய கலிழி நீரே"

என்பது.

இஃது, இந்நூற் பாட்டுக்களின் அருமை பெருமைகளை அறிதற்கு ஒரு சிறந்த உரையாணியாகத் திகழ்கின்றது! உடன்போக்காகத் தலைவனுடன் போய் மணம்புரிந்து கொண்டு அவனோடு மீண்டு தாயகம் புக்க தலைமகளைத் தோழி கண்டு தழுவி, "அம்மையே! நீ சென்றிருந்த உன் தலைவரது நாட்டில் பருகும் நீர் இனிமையான தல்லவே; அங்ஙன மிருக்க, நீ எங்ஙனம் அதனைப் பருகினாய்?" என்று வினவியதற்குத் தலைவி கூறிய விடையே இப்பாட்டு.

"அன்னையே, நீ கூறியபடி என் தலைவரது ஊர்த் தண்ணீர் பிறர்க்கெல்லாம் குடிக்கத் தகாத நீர் தான்; தண்ணீர், இலையும் தழையும் விழுந்து அழுகி, மான் முதலிய விலங்குகள் இறங்கி நீருண்டலாலே கலங்கிக் கிடக்கின்ற சிறு கூவல் நீரேதான் அது; எனினும், அது எனக்கு நம் தோட்டத்துத்தேனுடன் கலந்த பாலினும் இன்சுவைத்தாக இருக்கின்றது" என்று கூறுகின்றாள் என்பதுதான் இப்பாட்டிற் பொதிந்த பொருளாகும். தலைவனது ஊரிலுள்ள நுகர்பொருள்களெல்லாம் எத்துணை இழிந்தனவாயினும், தலைவன்பாற் கொண்ட அன்பினால் அவையெல்லாம்



தனக்குத் தூய அமிழ்தமாகவே தோன்றுவதைத் தலைவி குறிப்பிடுவது, கற்புடை மகளிர், தாம் எத்துணைச் செல்வக் குடியில் பிறந்தவரே எனினும், தம் தலைவர்களது வறுமையை அரும்பெருஞ் செல்வமாகவே மதித்து வாழ்வர் என்னும் உண்மையைப் புலப்படுத்தி, மிக்க உவப்பையும் வியப்பையும் பயப்பதாக விளங்குகின்றது. எத்துணை இழிந்த உணவாயிருப்பினும், அது அன்போடு கலந்ததாக இருப்பின், அன்பினால் அது தூயதாக்கப்படுகின்றது. இதனாலன்றோ குகன், இராமனுக்கு மீனும் தேனும் உணவாக அளித்தபோது, அவன் அதனை இழிந்த உணவாகக் கருதாது 'பவித்திரம்' அதாவது மிகவும் தூய்மையானது என்று பாராட்டினான்.

'தாய் இரங்கு பத்'தில் தன் மகளைத் தலைமகன் தன் ஊருக்கு உடன்போக்காகக் கொண்டுபோய்விட்ட கொடுமையை நினைந்து பிரிவாற்றாது வருந்தும் நற்றாய், "நினையுந்தொறும் நான் அழும் இத்துயரம், அத்தலைவன் தாயும் படவேண்டும்" என்று கூறுவதாகவுள்ள செய்யுள் படிப்போர் உள்ளத்தை இரங்கச் செய்யும்.

உடன்போக்கில் வழியிடைக் கண்டோரை நோக்கித் தலைவி, "நான் என் ஆருயிர்த் தலைவனுடன் வழிவருத்தம் இன்றிச் செல்கின்றேன் என்பதை, என் இன்பத்தைக் கெடுத்து இற்செறித்து வைத்திருந்த அந்த என் அற னில்லாத கொடிய தாய்க்குச் சொல்லுங்கள்" என்று உரைப்பதாகவுள்ள கருத்து, "தாயிற் சிறந்த தமரில்லை" என்று எடுத்துக் கூறப்படும் தாயின் அன்பினையும் மறக்கச் செய்து, அவளைக் 'கொடியள்', 'அறனில்லாள்' எனக் கூறவுஞ் செய்த காதலின் வன்மை இத்தகையதோ என்று இறும்பூது கொள்ளத்தக்கதாக உள்ளது.

'கிள்ளைப்பத்தில்' தலைவி, தினைப்புனங் காவல் ஒழிந்த பின் வரைந்துகொள்வேன் என்ற தலைவனுக்குத் தோழி, "தலைவி புனங்காத்த லென்பது நாளையே நின்றுவிடும்; நீட்டிக்குழிமன்று நினையற்க; தினைக்கதிரைக் கவரும் கிளி களை யோட்டத் தலைவி ஒலிக்கும் 'ஆயோ' என்னுங் குரலைக்

கேட்டலும், அதனை ஒரு கிளியின் குரலாகவே கருதிக் கிளிகள் ஓடாமல் இருப்பதன்றி அயற்புனத்துக் கிளிகளும் பறந்து வந்து புனக்கதிரைக் கவருகின்றன. ஆதலால், நாளையே தலைவி புனங்காவல் செய்வது தவிர்ந்துவிடும்; இனி விரைந்து வரைந்து கொள் என்று தோழி உரைப்பதாக அமைந்த,

> "கொடிச்சி யின்குரல் கிளிசெத் தடுக்கத்துப்
> பைங்குர லேனற் படர்தருங் கிளியெனக்
> காவலுங் கடியுநர் போல்வர்,
> மால்வரை நாட, வரைந்தனை கொண்மோ"

என்னும் இப்பாட்டு, பன்முறை சுவைத்து இன்புறத்தக்கதாகும். தலைவியின் குரலுக்கும் கிளியின் குரலுக்கும் வேறுபாடே இல்லையென்ற கருத்தினைத் தோழி குறிப்பினால் உணர்த்தியிருக்குந் திறன் மிகவும் பாராட்டற்பாலது. இவ் வழகிய கருத்தினையே, "ஆயோ" எனுங் குரல் ஐயோ புனத்தை அழிக்கின்றதே" எனப் பின்னுள்ளோரும் தம் பாடலுள் போற்றிக் கொண்டுள்ளார்.

'மஞ்ஞைப்பத்'தில், தலைவி, தினைப்புனங் காவல் செய்யுங்கால் தோழி குறிப்பிட்ட பகற்குறியிடத்துப் புகுந்து தலைமகன் அமர்ந்திருக்கத், தலைவி பின்னுக மறைந்து வந்து தன் கண் பொத்தியபோது தலைவன், பொத்தியது யாரென வினவாது, "செங்காந்தள் பூப்போலும் மென்கையால் என் கண்ணைப் புதைத்தவளே! உன்னையன்றி என் நெஞ்சிடங் கொண்டோர் பிறரும் உளரோ? அங்ஙனம் உளராயினன்றோ, என்னை நீ சோதித்தறியக் கண் புதைக்கவேண்டும்; இங்ஙனமாகவும் நீ, என் கண் பொத்தியது ஏன்? உனது இச்செயல் பேதைமையானதன்றோ?" என்று நகையாடிக் கூறுகின்றான். தலைவனது இச் சொற்களில் இன்பக் காதல் கனிந்து மிளிர்கின்ற திறன்மிக்க களிப்பினையூட்டுகின்றது. இக்கருத்தின் ஒரு கூறினையே கல்வியிற் பெரிய கம்பரும்,

"காரன்ன கூந்தற் குயிலன்னவள் கண்புதைப்ப
ஆரென்ன லோடும், அழலென்ன அயிர்த்துரைத்தான்"

எனத் தம் இராமாயணச் செய்யுளில் பொதிந்து வைத்துள்ளார். ஆனால், ஐங்குறுநூற்றுப் பாட்டில் வருந்தலைவன், கண்புதைத்தது ஆரென்ன வினவித் தலைவியின் முனிவிற்கு ஆளாகாது தப்பித்துக் கொள்ளுகின்றான். கம்பர் குறிக்கும் தலைவனோ, கண்புதைத்தது ஆரென வினவித் தலைவியின் ஐயத்திற்கும் அழலன்ன கோபத்திற்கும் ஆளாகி விடுகின்றான். இங்குக் குறிப்பிட்ட ஐங்குறுநூற்றுப் பாட்டு, களவு மணத்திற்குரிய குறிஞ்சித்திணைப் பாட்டாதலால், அதனுள் வரும் தலைவன் தலைவியருக்குள் ஊடல் நிகழ்வது முறையன்றாதலின், அத்தலைவன் ஆரென வினவாது ஊடலுக்கு இடமின்றிச் செய்தனன் எனவும், கம்பர் பாடல், கற்பு மணத்திற்குரிய மருதத் திணையாகலின் புலவியும் ஊடலும் அதற்கு இன்பந் தருவதாதலின், இத்தலைவன் ஆரென வினவித் தலைவிக்கு ஊடல் உண்டாகச் செய்தனன் எனவும் படிப்போர் ஓர்ந்து கொள்ளுமாறு அகப்பொருள் கருத்தின் நுண்மைவழாது இவ்வாசிரியர்கள் இருவரும் குறித்து வைத்த கருத்தமைதி, பேரறிஞர் யாவராலும் மிகப் பாராட்டற் பாலதாம்.

"குரங்குப்பத்"தில் குரங்கின் தலைவனாய கடுவன், சிறு பிரப்பங்கோல் கொண்டு மழையின் நீர்க்குமிழிகளை அடித்துக் கொண்டிருக்கும் என்றும், மலையின்மேல் கடுவன் கறைக்கொடியினால் சூல்கொண்ட மேகத்தைப் புடைத்துக் கொண்டிருக்கும் என்றும் குரங்கின் குறும்புச் செயல் கூறப்பட்டிருப்பதும்; ஒரு பாட்டினில், ஆண்யானை மதமயக்கத்தால், திரண்டு நிற்கும் கரிய மலைப்பாறையைப் பிடியானை எனக்கருதித் தழுவுமென்று கூறப்பட்டிருப்பதும் மிகவும் நகைச்சுவை பயப்பதாகும்.

## உவமை நயம்

பண்டைத் தமிழ்ப்புலவர்களெல்லாம் உலகத்துக் காட்சிப் பொருள்களையும் கருத்துப் பொருள்களையும் முறையே தம் முகக்கண்ணாலும் அகக்கண்ணாலும் ஊன்றி நோக்கி, அவற்றின் நுண்ணிய இயற்கையையெல்லாம்

அகத்துள் அடக்கிவைத்து, வேண்டிய அமையத்துத் தங்கள் பாட்டுக்களாம் படாத்தில் சொல்வண்ணம் குழைத்துத் தீட்டிச் சீரிய பொருளோவியங்களை உருவாக்கிக் காட்டும் கண்ணுள் வினைஞராவார். இவர்கள், தம் பாட்டுக்களுள், கற்போர் பொருள் விளக்கம் பெறுதற்கு, எத்திற மாந்தர் உளத்தும் இயல்பாகச் சுரந்தெழும் சிறந்த உவமைகளையே எடுத்துக் கூறுவர். பிற்காலத்தில் வடமொழியினின்றும் தமிழின்கட் புகுந்து இளைத்த தற்குறிப்பேற்றம், உயர்வு நவிற்சி முதலிய அணிகளை இவர்தம் பாடலுள் காண்டலரிது.

இவ் வைங்குறுநூற்றுப் பாடலுள், ஆங்காங்குப் பல நயமிக்க உவமைகள் பொருளுக்கேற்றவாறு பொருத்த முற அமைந்து இனிமை பயப்பதாக உள்ளன. குரங்கு தன்மேலிருந்து பாய்வதால் வளைந்து உடனே நிமிரும் சிறிய மூங்கிற்கழை, மீனெறி தூண்டில்போல் நிவந்து தோன்றும் என்று கூறியிருக்கும் உவமை, கற்போர் உள்ளம் காமுறும் பொற்புடன் திகழ்கின்றது. "கான யானை கைவிடு பசுங் கழை, மீனெறி தூண்டிலின் நிவக்கும்" என்ற குறுந் தொகையுள் வரும் உவமை, இதனோடு ஒப்பிட்டு நோக்கி இன்புறற்பாலது. ஆலங்கனிக்குப் புது மண்கலத்தினை யும், அசோகின் தழைக்கு நெய்யோடு பிசைந்த உழுந்து மாவினையும், பகற்காலத்தில் ஒளி மழுங்கித் தோன்றும் ஆம்பற் பூக்களுக்குப் பகற்காலத்து எரியுந் தீயினையும், தினைக்கதிருக்குப் பொன்னரிணையும், அதனைக் கவரும் காட் டுப் பன்றிக்குத் கட்டளைக்கல்லையும், நண்டின் கண்ணுக்கு வேம்பின் அரும்பினையும் இந்நூற்பாடல்களுள் ஆங்காங்கு உவமையாகக் கூறியிருப்பதும் மிகவும் இனிமை தருவதாம்.

அவரைக்காயை நிரம்பத் தின்ற மந்தி, பண்ட வாணிகர் பைபோலத் தோன்றும் என்று கூறியிருப்பது நகைப்பை விளைக்கும். பூக்கள் மலர்ந்த வேங்கைமரத்தில் சாயல் தவழ அமர்ந்திருக்கும் மயில், அணிகலன் அணிந்து விளங்கும் மெல்லிய மகளிர்போலத் தோன்றுமென்றும், தினைத்தாள்களில் இருந்த குருவிகள் பறந்து எழுவதும்



விழுவதும் ஆகக் கலாபம் விரித்து ஆடிச்செல்லும் மயிலானது, பந்தாடும் மகளிர்போலத் தோன்றும் என்றும் கூறியிருப்பது, உள்ளுதோறுள்ளுதோறும் உவரா இன்பம் பயக்கும்.

எல்லையில்லா இன்பக்கடலாக அமைந்த இந் நூற்பாக்களின் நயமாக யானிங்கு எடுத்துக்காட்டியது அக் கடலினுள் துளியே போல்வதாம். இப்பாட்டுக்களின் தெவிட்டா அமிழ்தன்ன அரும்பொருள்களை உங்கள் உளம் நுகர்ந்து இன்புறுமாறு எடுத்தளிக்க, ஐவர் இங்கு அமர்ந்திருக்கின்றனர். இந் நற்செயலுக்கு இடையூறாக இரா[illegible]ன் சொல்லினை இவ்வளவோடு நிறுத்திக்கொள்கின்றேன்.

இவ் வைங்குறுநூற்று மாநாட்டிற் கலந்துகொண்ட தமிழ்ப் பெருமக்களாகிய நீங்கள், தமிழ்மொழி ஆக்கத்தில் ஊக்கங்கொண்டு, எல்லாவகையானும் அதனைப் பண்டுபோல் நன்னிலையில் நிறுவி, அதன் வாயிலாக நீங்களும் நன்னிலை அடையவேண்டும்; இதுவே எனது வேண்டுகோள்.

தமிழ் வாழ்க !



பண்டித வித்துவான்,

திருவாளர்,

தி. சங்குப் புலவர்



வித்துவான்,

திருவாளர்,

மு. அருணாசலம் பிள்ளை

திருவாளர்,

சுப. இராமநாதன்,

எம். ஏ.





திருவாளர்,

அ. கி. பரந்தாமனார்

எம். ஏ.

# மருதம்

[திரு. பண்டித வித்துவான், தி. சங்குப் புலவர் அவர்கள்]

## பெயர்ப் பொருள்

ஐந்து + குறுமை + நூறு = ஐங்குறு நூறு. இஃது ஐந்து பிரிவாகிய குறுமையாகிய நூறு பாக்களையுடைய நூல் என விரியும். ஐந்து பிரிவாகிய நூறு எனவும், குறுமையாகிய நூறு எனவும் கூட்டுக. குறுகிய அடிகளைக் கொண்ட பாவால் அமைந்தது என்றும், ஐந்நூறு பாக்களைக் கொண்டது என்றும் அறிக. ஐந்து பிரிவு என்பது, குறிஞ்சி, பாலை, முல்லை, மருதம், நெய்தல் ஆகிய ஐந்திணைகளையும் உணர்த்தும். ஐந்திணை யொழுக்கமாகிய அகப்பொருட்கு இலக்கியமாயமைந்தது இந்நூல். அகம் என்பது, ஒத்த அன்புடைய ஒருவனும் ஒருத்தியும் தம்முட் கூடுகின்ற காலத்துப் பிறந்து, அக்கூட்டத்தின் பின்னர் அவ்விருவராலும் ஒருவர்க்கொருவர் தத்தமக்குப் புலனாக இவ்வாறிருந்ததெனக் கூறப்படாததாய், எஞ்ஞான்றும் உள்ளத் துணர்வாலேயே நுகரப்படும் இன்பமாகும். இன்பம் பற்றி அகத்தே நிகழும் ஒழுக்கத்தைத்தான் அகம் எனக் கூறினர் தொல்லாசிரியர்.

இந்நூல், முதலிற் கடவுள் வாழ்த்துப்பா ஒன்றும் அடுத்து மருதம், நெய்தல், குறிஞ்சி, பாலை, முல்லை என்ற முறையில் ஒவ்வொரு திணைக்கும் உரிய ஒவ்வொரு நூறு பாக்களும் கூடி, ஐந்நூற்றொரு செய்யுளால் அமைந்திருக்கின்றது.

இந்நூலில் உள்ள பாக்கள் அனைத்தும் நேரிசையகவற்பாக்களே. மூன்றடிச் சிறுமை ஆறடிப் பெருமை





யுடையவை. ஆறடியின் மிக்க அடிப்பாக்கள் ஒன்றும் இன்று. குறு நூறு எனப் பெயரிட்டிருப்பதே இதன் குறுமையை விளக்கும்.

## ஆசிரியர் பெயர்

கடவுள் வாழ்த்து, பாரதம் பாடிய பெருந்தேவனாராலும், மருதம், ஓரம்போகியாராலும், நெய்தல், அம்மூவனாராலும், குறிஞ்சி, கபிலராலும், பாலை, ஓதலாந்தையாராலும், முல்லை, பேயனாராலும் பாடப்பட்டது என அறிகின்றோம். அதனை அடியில்வரும் வெண்பா உணர்த்தும்.

மருதம்ஓ ரம்போகி; நெய்தல் அம் மூவன்;
கருதுங் குறிஞ்சி கபிலன்;—பெருகிய
பாலைஓத லாந்தை; பனிமுல்லை பேயனே
நூலையோ தைங்குறு நூறு.

இவ்வெண்பாவில் உள்ள முறையே இந்நூலில் திணை கோத்திருக்கும் முறையாகத் தெரிகிறது. மருதத் திணையை முன் வைத்ததும், அதன்பின் நெய்தற்றிணையை வைத்திருப்பதும் ஆராய்தற்கு உரியதே. அகப்பொருளிலக்கண நூலாசிரியரும் இலக்கிய நூலாசிரியரும் இத்திணைகளை ஒருமுறையாகக் கோவாமல் பலவாறு மாறுபடக் கோத்திருப்பதும் ஆராய்தற்பாலது.

## முறைவைப்பு ஆராய்ச்சி

அகப்பொருளிலக்கணத்திற் களவு, கற்பு என இரு கைகோள் நிகழும். முதன்மையுடையது களவே. தலைவன் தலைவியை முதலிற் காண்பது காட்சி; அடுத்து ஐயம் நிகழும். பின் துணிவு நிகழ்ந்து, குறிப்பறிவு நிகழ்ந்த பின், புணர்ச்சி நிகழும். புணர்ச்சிக்குப்பின், பாங்கற் கூட்டம், பாங்கியிற் கூட்டம், பகற்குறி, இரவுக்குறி என்பன முறையே நிகழும். இத்துறைப் பகுதிகள் யாவும் புணர்ச்சியும், புணர்ச்சி நிமித்தமும் ஆம். புணர்ச்சியும் புணர்ச்சி நிமித்தமும் ஆகிய பொருள்வருந் துறைகள்



குறிஞ்சித் திணைக்குரியன. ஆதலின், ஐந்திணைகளினும் குறிஞ்சியே முதன்மையுடையது.

களவுக்கு அடுத்தது கற்பு என்னும் கைகோள் ஆகும். தலைவன், தலைவியை உடன்கொண்டுபோய்த் தன்னூரில் மணப்பான்; அல்லது மீண்டுவந்து தலைவியின் மனையில் மணப்பான்; குரவர் முதலியோர் கொடுப்பவும் மணப்பான்; கொடாமையும் மணப்பான்; எங்ஙனம் ஆயினும், மணம் நிகழும். நிகழ்ந்தபின், தலைவனும் தலைவியும் இல்லறம் நடத்துவர். இல்லறம் நடத்தி வாழ்வதுதான் இல்லிருத்தல் என்பது. இது முல்லைக்குரிய ஒழுக்கமாகக் கருதப்பட்டு, இத்துறைப் பகுதிகள் யாவும் முல்லையிற் புணர்க்கப்படுகின்றன. ஆதலால், குறிஞ்சிக்குப்பின் முல்லையை வைப்பதுவே பொருத்தம் ஆம்.

தலைவன் தலைவியாகிய இருவரும் இல்லறம் நிகழ்த்தி இன்பந் துய்த்துவருங்கால், ஊடல் நிகழ்வது இயற்கை. "ஊடுதல் காமத்திற் கின்பம்; அதற்கின்பம் கூடி முயங்கப் பெறின்" என்ற வள்ளுவர் வாக்கின்படி, புலவியும் கலவியும் மாறிமாறி நிகழ்ந்து பேரின்பத்தைக் காதலர்க்கு விளைக்கும். ஊடலாற் கூடல் சிறந்த இன்பத்தைத் தரும் என்பது பண்டைத் தமிழர் கண்ட உண்மை. எனவே, கூடலுக்கு அடுத்தது ஊடல். ஊடலும் ஊடனிமித்தமும் ஆகிய துறைகள் மருதத்திற்குரிமையுடையன. ஆதலால், முல்லைக்குப்பின் மருதத்தை நிறுத்துவதே தகுதி.

இங்ஙனம் ஊடலும் கூடலும் கண்டு இன்பந்துய்த்த தலைவன், இல்லறத்திற்கு வேண்டிய பொருளீட்டல் முதலிய பல தொழில் கருதித் தலைவியைப் பிரிந்து, அண்மையிலும் சேய்மையிலும் உள்ள சேரி, ஊர், நாடு சென்று தங்குவான். அப்பிரிவு காரணமாகத் தலைவி ஆற்றாமை மிகுந்து வருந்துவாள். அதுதான் இரங்கல் ஆம். இரங்கலும் இரங்கனிமித்தமும் ஆகிய துறைகள் நெய்தற்குரியவை. ஆதலால், மருதத்தின் பின் நெய்தல் நிற்பது முறையாம். இது நிற்க.



பாலைத்திணையை எங்கே வைப்பது? எக்காரணத்தால்? என்ற வினவிற்குப் பல விடை கூறுவதன்றி ஒரு விடை கூற ஒருவராலும் இயலாது. ஆசிரியர் தொல்காப்பியனார் "முல்லை, குறிஞ்சி, மருதம், நெய்தலெனச் சொல்லிய முறையாற் சொல்லவும் படுமே" எனச் சூத்திரஞ் செய்து நிலம் நான்கே கொண்டனர் எனினும், "நடுவணைந்திணை" என்ற சூத்திரத்தால் பாலையை நடுவணது எனக் குறித்து "நடுவு நிலைத்திணையே" என்ற சூத்திரத்தாற் பாலைக்குப் பெரும்பொழுதும் சிறுபொழுதுங் கூறினார். பின்னும் "புணர்தலும் பிரிதலும்" என்ற சூத்திரத்தாற் பிரிவு என்ற ஒழுக்கத்தையுங் கூட்டி ஐவகையொழுக்கமும் பகுத்தார். ஆதலின், அவர் கருத்தும் ஐவகைத்திணையும் கோடல் வேண்டும் என்பதுதான் என நன்கு விளங்குகிறது.

"முல்லையுங் குறிஞ்சியு முறைமையிற் றிரிந்து, நல்லியல் பழிந்து நடுங்குதுய ருறத்துப், பாலை யென்பதோர் படிவங் கொள்ளும்" என்று கூறியபடி, முல்லை, குறிஞ்சி என்ற நிலங்களின் திரிபே பாலை நிலம்; தனியே ஒரு நிலமன்று. அதுபோலவே, அத்திணைகட்குரிய ஒழுக்கங்களாகிய புணர்ச்சி, இல்லிருத்தல் என்பவற்றின் திரிபே பாலை யொழுக்கமும். பாலைக்கெனத் தனியொழுக்கம் ஒன்று மின்று. எங்ஙனமெனிற் கூறுதும்:

குறிஞ்சித்திணைக்குரிய வொழுக்கமாகப் பகுத்தது களவுப் புணர்ச்சியே. களவிற் பல நாட்கள் வந்து வந்து தலைவன் தலைவியைப் புணர்ந்து இன்புற்றுச் செல்லுங்காற் சில இடையூறு நேரும்; அவற்றைப் பொறுத்துத் துன்பத்துடன் இன்பம் நுகர்வான் தலைவன்; பொறுக்கமுடியாத நிலையில், வரைந்து கோடலே தகவெனக் கருதுவான்; வரைதல் நிமித்தம் பொருளீட்டக் கருதிப் பிரிவான்; அங்ஙனம் பிரிவதே 'வரைபொருட் பிரிவு' எனப் பெயர் பெறும். "எத்துணைப் பொருள் கொணர்ந்து கொடுப்பினும் தலைவியைக் குரவர் தனக்குக் கொடார்; அயலார்க்கு மணமுடிக்கக் கருதுகின்றனர்" எனக் குறிப்புணர்ந்தானாயின் தலைவியைத் தலைவன் களவாக வந்து உடன்கூட்டிச்



செல்வன். இஃது "உடன்போக்கு" எனப் பெயர் பெறும். தொல்காப்பியர் இதனை "கொண்டுதலைக்கழிதல்" எனக்

கூறுவர். ஈண்டுக் குறித்த வரைபொருட் பிரிவும் உடன் போக்கும் குறிஞ்சியொழுக்கமாகிய களவுப் புணர்ச்சியின் திரிபேயாகும்.

முல்லைத்திணைக்குரிய ஒழுக்கமாகப் பகுத்தது கற்புக்குரிய வொழுக்கமாகிய "இல்லிருத்தல்" என்பதே. தலைவன் தலைவியை மணமுடித்து வாழுங்கால், இடையே பரத்தையிடஞ்சேர்வது என்ற புறத்தொழுக்கம் நிகழ்தல் உண்டு. அது "பரத்தையிற் பிரிவு" எனப்பெயர் பெறும். இல்லறம் நிகழ்த்துதற்கு இன்றியமையாத பொருளீட்டக் கருதியும், கல்வியைப் பெருக்கக் கருதியும், நாடுகாக்கக் கருதியும், நண்புடைய மன்னர்க்குத் தூதுசெல்லக் கருதியும், படைத்துணையாகச் செல்வது கருதியும் பிரிவான், தலைவன். அவைகள், பொருள்வயிற் பிரிவு, ஓதற்பிரிவு, காவற்பிரிவு, தூதிற்பிரிவு, துணைவயிற் பிரிவு எனப் பெயர் பெறும். இப்பிரிவுகள் அனைத்தும் முல்லை யொழுக்கத்தின் திரிபேயாகும். எனவே, குறிஞ்சியொழுக்கத்திற் சிறிது வேறுபட்ட வரைபொருட்பிரிவும், உடன்போக்கும், முல்லையொழுக்கத்திற் சிறிது வேறுபட்ட பரத்தையிற் பிரிவு முதலிய அறுவகைப் பிரிவும் பாலைக்குரிய வொழுக்கமாகும்.

"போக்கெல்லாம் பாலை" என்றபடி, பிரிவனைத்தும் பாலையாகக் கோடல் வேண்டும்; உடன்போக்கும் அதனுட் பட்டதே. உடன்போக்கைப் பிரிவோடு சேர்த்து ஒருங்கு எண்ணியதற்குக் காரணம் இருத்தல்வேண்டும். உடன் போக்கைப் பாலையிற் புணர்த்தது ஆராய்தற்குரியது. தலைவன் தலைவியை உடன்கொண்டு செல்வது பாலை நிலத்து வழியாதலாலும், அவ்விருவரும் தத்தம் மனையை விட்டுப் பிரிந்து செல்வதாலும், அருஞ்சுரத்தே இருவரும் கூடித் தனிச் செல்வதால் ஆறலை கள்வர், கொடிய விலங்குகள் வருமென அஞ்சி விரைந்து செல்வர்; ஆகலான், ஆங்குப் புணர்ச்சி நிகழ்தற்கு இடமில்லை. எனவே, இது பிரிவு எனக் கருதப்பட்டது போலும்.

இனி, பாலைத்திணை என்பது ஒரு நிலம் அன்று. எல்லா நிலத்திற்கும் நடுவாக (பொதுவாக) நிற்பது. ஆசிரியர் தொல்காப்பியனார் அதனை "நடுவணது" எனக் குறியிட்டார். ஆதலின், பாலைத்திணை மற்றை நிலங்கட்கு முன்னும் நிற்கலாம்; பின்னும் நிற்கலாம். குறிஞ்சியின் திரிபு ஆதலாற், குறிஞ்சியின் பின்னும் நிறுத்தலாம்; முல்லையின் திரிபு ஆதலான், முல்லையின் பின்னும் நிறுத்தலாம். முல்லையொழுக்கம் கூடல்; மருதவொழுக்கம் ஊடல்; கூடலும் ஊடலும் அடுத்தடுத்து நிகழும் நிகழ்ச்சி; ஊடலின்றிக் கூடல் இன்பம் பயவாது; கூடலின்றி ஊடலும் இன்பம் பயவாது. ஆதலான், முல்லையும் மருதமும் ஓரொழுக்கமாமென்பது ஒருதலை; ஆதலான், மருதத்தின் பின்னும் நிறுத்தலாம். பாலைத்திணையை இன்னவிடத்தில் தான் வைக்கவேண்டும் என்று துணிந்து கூறுவதற்கு வழியின்று. ஆயினும், குறிஞ்சிக்குப் பின்னும் முல்லைக்கு முன்னும் பாலையை நிறுத்துவதுதான் சிறந்த முறை.

பாலை எங்கேனும் நிற்கலாம். மற்றைத் திணைகளைக் கோப்பதில், குறிஞ்சி, முல்லை, மருதம், நெய்தல் எனக் கோப்பதுவே இயற்கை முறை. இயற்கைக்கு மாறாகப் பல இலக்கணங்களிலும், பல இலக்கியங்களிலும் கோத்திருப்பதற்கு ஏதேனும் காரணம் இருத்தல் வேண்டும். அவ்வந் நூலாசிரியர் கூறினால், நமக்கு நன்கு விளங்கும். நாமே ஆராய்ந்துணர்தல் எளிதன்று. இது நிற்க.

இந்நூலைத் தொகுத்தவர் "புலத்துறை முற்றிய கூடலூர் கிழார்" என்றும், தொகுப்பித்தவர் "யானைக்கட் சேய் மாந்தரஞ்சேர லிரும்பொறை" என்றும் இந்நூலின் இறுதியிலுள்ள சொற்றொடரால் நாம் அறிகின்றோம். தொகுத்தவர், மருததிணையை முதலாக வைத்துத் தொகுத்ததற்கு ஒரு காரணமுங் கூறாது விடுத்தனர்.

இந்நூலை முதலிற் பதிப்பித்த டாக்டர். உ. வே. சாமிநாதையரவர்கள், தமது முகவுரையில், "இந்நூலைத் தொகுத்தாரும் தொகுப்பித்தாரும் மலைநாட்டரசரும் மலைநாட்டுப் புலவரும் ஆதலால், ஆதனவினியென்னும்



சேரநாட்டரசனைத் தலைவனாகப்பெற்ற முதற்பத்தை யுடைய மருதம் முதலிலும், தொண்டிப்பத்தையுடைய நெய்தல் மருதத்தின் பின்னும், மலைநாட்டரசர்களைப்பாடி மலைநாட்டிற் பெரும்பாலும் வதிந்து மலைவளம் பாடுதலிற் புகழ்பெற்ற கபிலர் பாடிய குறிஞ்சி நெய்தலின் பின்னும் கோக்கப்பெற்றனவென்று இம் மூன்றற்கும் ஒருவாறு முறை கூறலாமாயினும், பாலையும் முல்லையும் அவற்றின் பின்னர் முறையே அமைக்கப்பெற்றதற்குக் காரணம் ஒருவாற்றானும் விளங்கவில்லை" எனக்கூறினர்.

இங்ஙனம் கூறிய உ. வே. சாமிநாதையர் அவர்கள் கூற்று, மருதம், நெய்தல் என்ற இருதிணைகளுக்கும் பொருந்தும் எனக்கொண்டு, அதன் பின்னர்க் குறிஞ்சி, பாலை, முல்லை என இயற்கை முறைப்படி கோத்தனர் எனக்கொள்வதுதான் மிகவும் பொருத்தமானது எனத் துணிகின்றேன். இதுபோலவே ஒரு நூலில் ஒரு காரணம் பற்றி ஒருதிணையை அல்லது இருதிணையை முதலிற் கோத்திருப்பர் ஆசிரியர். அதனால், இம்முறை வைப்புப் பல நூல்களினும் மாறுபட்டிருக்கக் காண்கின்றோம்.

ஆசிரியர் தொல்காப்பியரும் முல்லையை முதலாக வைத்தனர் எனினும், மற்றோரிடத்தில் "புணர்தலும் பிரிதலும்" எனச் சூத்திரஞ்செய்து, புணர்தல் முற்பட்டது என்பதனை நன்கு விளக்கினர். கற்புச் சிறந்தது என்பது கருதிக் கற்பிற்குரிய திணையாகிய முல்லையை முதலில் வைத்தனர் என்றும், மற்றைத்திணைகளை இயற்கை முறைப்படியே கோத்தனர் என்றும் கொள்ளலாம். பாலையை அவர் ஒரு திணையாகக் கொண்டிலர் ஆதலின், அப்பாலையை நீக்கி எண்ணின், முல்லை, குறிஞ்சி, மருதம், நெய்தல் எனச் சொல்லியமுறை பொருந்துமாறு அறிக.

திணை மொழியைம்பது, கைந்நிலை, மாறனகப் பொருள், இலக்கண விளக்கம், நம்பியகப்பொருள் ஆகிய இந்நூல்களில் மட்டும் இம்முறை வைப்புப் பொருத்த முடையதாக இருக்கக் காண்கின்றோம்; மற்றை நூல் களிற் பலவாறு மாறுபட்டிருக்கக் காண்கின்றோம்.

இங்ஙனம் முறை வைப்பு மாறுபட்டிருப்பதற்குப் பாலைத் திணையை முன், பின், நடு ஆகிய இடங்களில் வைப்பதுவே காரணமாகும். பாலைத்திணையை எங்கேனும் நிறுத்தலாம். பாலை பொதுத்திணை; பாலைக்குரிய ஒழுக்கமும் பொது ஒழுக்கம். இதற்குச் சான்றாக அகநானூற்றிற் பாலையை அடுத்தடுத்து அமைத்திருப்பதையறிக.

இதுகாறும் கூறியவாற்றால், குறிஞ்சி, பாலை, முல்லை, மருதம், நெய்தல் எனக் கோப்பதுவே தலைசிறந்த முறை என்றும்; குறிஞ்சி, முல்லை, மருதம், பாலை, நெய்தல் எனக் கோப்பது நடுவாகிய முறை என்றும்; பாலையை முன், பின், நடு ஆகிய எவ்விடத்தேனும் நிறுத்திக் குறிஞ்சி, முல்லை, மருதம், நெய்தல் எனக் கோப்பது கடையாகிய முறை என்றும்; இம்முறைக்கு மாறாகக் கோத்திருந்தால் அது ஏதேனும் ஒரு காரணம்பற்றித்தான் அமைந்திருக்க வேண்டும் என்றும்; அம்முறைவைப்பை அவ்வந் நூலாசிரியர் கூறினலன்றி நமக்கு விளங்காது என்றும்; இந் நூலில் மருதத்திணையை முன்வைத்து நெய்தலை அதன் பின் வைத்த காரணத்தைத் தொகுத்த ஆசிரியர் கூறாது விடுத்ததனல் ஆராயவேண்டிய நிலைமை ஏற்பட்டது என்றும்; ஆராய்ச்சியால் தொகுத்தவரும், தொகுப்பித்தவரும் மலைநாட்டுப் புலவரும் மலைநாட்டரசரும் ஆதலால் "ஆதனவினி" என்ற சேரவரசனை வாழ்த்தும் பொருளமைந்த மருதத்திணையை முதலில் வைத்து, சேரவரசனுடைய துறைமுகமாகிய தொண்டியைக் கூறும் தொண்டிப் பதத்தையுள்ளடக்கிய நெய்தல் திணையை அதன் பின் வைத்து, பின்னர் இயற்கை முறைப்படி குறிஞ்சி, பாலை, முல்லை என முறையே வைத்திருக்கின்றனர் என்றும் ஒருவாறு துணிந்தோம். முறைவைப்பின் ஆராய்ச்சி முற்றிற்று.

## கடவுள் வாழ்த்து

கடவுள் வாழ்த்து இயற்றியவர், பாரதம் பாடிய பெருந்தேவனார் எனத் தோன்றுகிறது. இவர் ஏன்ன

மதத்தினர் என ஆராய்தற்கு வழி ஒன்றுமில்லை. நற்றிணையில் கடவுள் வாழ்த்து, திருமால் துதியாகவும்; குறுந்தொகையில் முருகன் துதியாகவும்; பாரதத்தில் விநாயகர் துதியாகவும்; அகநானூறு, புறநானூறு, ஐங்குறுநூறு இம்மூன்றிலும் சிவபெருமான் துதியாகவும் இவர் இயற்றிய செய்யுட்கள் அமைந்திருக்கின்றன.

"நீல மேனி வாலிழை பாகத்
தொருவ னிருதாள் நிழற்கீழ்
மூவகை யுலகும் முகிழ்த்தன முறையே"

என்பது இந்நூலிற்கு அமைந்துள்ள கடவுள் வாழ்த்துப்பா. இதில் சொல்லும் பொருளும் சுவைபட நின்று இன்பத்தை விளக்கின்றன. "நீலமேனி வாலிழை" என முரணுகவும் "ஒருவன் இருதாள்" என முரணுகவும் அமைந்து சொல்லின்பந் தோற்றுவிப்பதை நோக்குங்கள். குறுகிய அடிகளை யுடைய அகவற்பாவால் அமைந்த இந்நூலுக்கு இவரும் குறுகிய மூன்றடிகளையுடைய அகவற் பாவையே அமைத்தது எத்துணைப் பொருத்தமென்பது கூறவும் வேண்டுமோ? காதலன் காதலியோடு கலந்து இன்பந் துய்த்துவரும் அகத்திணை நூலுக்குக் காப்பாகச் சத்தியும் சிவமும் ஒன்றாகக் கலந்து உயிர்கட்கு இன்பமளிக்கும் ஓருருவத்தைக் கூறியது வியப்பினும் வியப்பன்றோ? நீலநிறம் காட்சிக்கு இன்பம் பயக்கும் ஆதலின் "நீலமேனி" என முதலிற் கூறி, தூய இயற்கையணிகலன்களையுடையாள் எனப் பொருள்படுமாறு "வாலிழை" எனச் சுட்டினார். "பாகத்தொருவன்" எனவே மன்னுயிர்கள் அனைத்தும் ஈருடல் ஓருயிராய்க் கலந்து இன்பந்துய்த்தற்குக் காரணமானவன் என்பதை நன்கு விளக்கியவாறாயிற்று. கோடை வெயிலில் அலைந்து களைத்துச் சோர்ந்தவர்க்குக் குளிர்ந்த மரத்து நிழல் இன்பந்தருவதுபோலப் பிறவித்துன்பத்தில் உழன்று வருந்தியவர்க்கு இறைவனது திருவடி பேரின்பத்தைத் தருவதால், அவனது தாளை நிழல் எனக் குறித்தார். மூன்றுலகமும், அவற்றிலுள்ள பலவகையுயிர்களும் அவ்விறைவன் ஆணையாற்றோன்றின என்பதைக் காட்ட

"கீழ்க்கீழ் மூவகையுலகும் முகிழ்த்தன முறையே" என்றார். அங்ஙனந் தோன்றிய உயிர்களுள் நாம் பகுத்தறிவுடையோம் ஆதலின், அவனுடைய தாளை வணங்க வேண்டியது நமது கடமை யென்னும் பொருள் தானே தோன்ற வைத்தார். இவ்வாறு சுருங்கச் சொல்லி விளங்க வைத்த பெருமை சங்கப் புலவர்களிடையே பெரும்பாலும் காணலாம். இனி நூலினை ஆராய்வாம்.

## மருதத்திணை

இந்நூலின் மருதத்திணை முன்னிற்கிறது என்பதை முன்னரே கண்டோம். மருதம்பற்றி வரும் பாடல்கள் நூறு. அவை பப்பத்தாகப் பகுக்கப்பட்டுள்ளன. ஒவ்வொரு பத்துக்கும் ஒவ்வொரு பெயரிட்டுள்ளார் அத்திணை பாடிய ஆசிரியர். (1) வேட்கைப்பத்து (2) வேழப்பத்து (3) கள்வன்பத்து (4) தோழிக்குரைத்த பத்து (5) புலவிப் பத்து (6) தோழிகூற்றுப்பத்து (7) கிழத்திகூற்றுப்பத்து (8) புனலாட்டுப்பத்து (9) புலவிவிராயபத்து (10) எருமைப்பத்து என்பன அவற்றின் பெயர்கள். இப்பெயர்கள் காரணத்தால் அமைந்தன என்பதைப் பின் விளக்குவாம்.

## துறையமைவு

மருதம்பற்றிவரும் பாடல்கள் அனைத்தும் ஊடலும் ஊடனிமித்தமும் ஆகிய துறைகள்பற்றி அமையவேண்டும். அவ்விலக்கணப்படியே அமைந்திருக்கின்றன. அதற்கு மாறாகக் கள்வன்பத்தின் இறுதியிலுள்ள மூன்று பாக்களும், தோழி கூற்றுப்பத்தின் இறுதியிலுள்ள ஒருபாவும், எருமைப்பத்தின் முதல் நான்கு பாக்களும் ஆகிய எட்டுப் பாக்களும் குறிஞ்சித்திணைக்குரிய புணர்தலும், புணர்தல் நிமித்தமும் ஆகிய துறைப்பொருள்பற்றி அமைந்திருக்கக் காண்கின்றோம். பழையவுரையாசிரியரும் அங்ஙனமே துறை வரைந்திருக்கின்றார். வேறு துறையமைத்துப் பொருள் கூறுவதற்கும் பொருந்தா எனத் தோன்றுகின்றன அப்பாக்கள். அவ்வெட்டும் "திணை மயக்கம்" என்பது தெற்றென விளங்கும்.

மருதம் 43 திணைமயக்கம்

புணர்தலும் புணர்தனிமித்தமும் ஆகிய ஒழுக்கம் குறிஞ்சிக்குரியது. பிரிதலும் பிரிதனிமித்தமும் ஆகிய ஒழுக்கம் பாலைக்குரியது. இருத்தலும் இருத்தனிமித்தமும் ஆகிய ஒழுக்கம் முல்லைக்குரியது. ஊடலும் ஊடனிமித்தமும் ஆகிய ஒழுக்கம் மருதத்திற்குரியது. இரங்கலும் இரங்கனிமித்தமும் ஆகிய ஒழுக்கம் நெய்தலுக்குரியது. எனவே, இவ்வொழுக்கங்கள் அவ்வந்நிலத்தில் நிகழ வேண்டும். அது மாறி நிகழ்ந்தால் "திணைமயக்கம்" ஆகும். ஆசிரியர் தொல்காப்பியர் "திணைமயக்குறுதலுங் கடிநிலையிலவே, நிலனொருங்கு மயங்குதலின்றென மொழிப, புலனன் குணர்ந்த புலமையோரே" எனச் சூத்திரஞ் செய்தனர். அதற்கு உரை வரைந்த நச்சினார்க்கினியர், ஒரு நிலத்துக்குரிய ஒழுக்கம் மயங்கியும் வரும் எனக்கூறி, மேற்காட்டிய பாக்களில் நான்கை மருதத்திற் குறிஞ்சி நிகழ்ந்ததற்கு மேற்கோளாகக் காட்டினர். கள்வன்பத்தின் இறுதிக்கவி மூன்றிலும் "கள்வன்" என்ற மருதக்கருப்பொருள் வந்து புணர்தனிமித்தமாகிய ஒழுக்கம் வந்தமையாலும், தோழிகூற்றுப்பத்தில் "பழனக்கம்புள்" என்ற கருப்பொருள் வந்து புணர்தனிமித்தமாகிய ஒழுக்கம் வந்தமையாலும், "எருமைப்பத்தின் முன்னுள்ள நான்கிலும் "எருமை" என்ற கருப்பொருள் வந்து புணர்தனிமித்தமாகிய ஒழுக்கம் வந்தமையாலும், இவற்றைத் 'திணைமயக்கம்' எனக் கொண்டனர்போலும். மருதத்திணைக்குரிய கருப்பொருளும் குறிஞ்சித்திணைக்குரிய உரிப்பொருளும் மயங்கியவாறு காண்க.

## (1) வேட்கைப்பத்து

வேட்கைப்பத்து என்பது, வேட்கையைப்பற்றிக்கூறிய பத்து என விரியும். இதில் தோழி தலைவனுக்குத் தனது வேட்கையையும் தலைவியின் வேட்கையையும் கூறுகின்றாள் ஆதலின், இது இப்பெயர் பெற்று நின்றது. (வேட்கை—விருப்பம்).



வேட்கைப்பத்திலுள்ள பாக்களெல்லாம் தோழிகூற்றாகவே தோன்றுகின்றன எனினும், முன் ஐந்து பாக்களின் துறை வேறாகவும், பின் ஐந்து பாக்களின் துறை வேறாகவும் அமைந்திருக்கக் காண்கின்றோம். ஆதலால், முன் ஐந்தையும் தொகுத்துப் பொருள் விளக்கிப் பின் ஐந்தையும் தொகுத்துப் பொருள் விளக்குவோம்.

## முன் ஐந்து பாக்களின் கருத்து விளக்கம்

தலைமகன் தலைமகளை முதலிற் களவிற் புணர்ந்தான்; பின்பு ஒருவழித் தணந்தான்; வரைதற்கு வேண்டும் பொருளீட்டி வந்து, நன்முறையின் மணந்தான்; இல்லற வாழ்க்கை இன்புற நிகழ்ந்தது; இடையே பரத்தையிற் பிரிவு நேர்ந்தது; அப் புறத்தொழுக்கத்தில் நீண்ட நாள் மயங்கி யலைந்தான்; இவ்வொழுக்கந் தகவன்று என வுணர்ந்தான்; மீண்டும் தலைமகளிடம் வேட்கையுடன் வந்து புணர்ந்தான்; ஊடலுடன் கூடனிகழ்ந்தது; ஊடியும்

கூடியும் இன்பம் நுகர்ந்து வருங்கால் ஓரமையம் முறைபட்ட தனது புறத்தொழுக்கம் நினைவிற்கு வந்தது. தோழி அரு கில் நின்றாள். அத்தோழியை நோக்கி, "தோழி! தோழி! யான், சில நாட்களுக்கு முன், பரத்தையரை நாடிப் புறத் தொழுக்கத்து நெடுநாள் நும்மைப் பிரிந்து திரிந்தேனல் லவா? அஞ்ஞான்று நீவிர் எங்ஙனம் என்னைப் பழித்தும் இழித்தும் பலபடக்கூறிப் பரிவுற்று என் பிரிவிற்கு வருந் தினீர்களோ? யானறியேன்; உண்மையை ஒளியாமற் கூறுக" என வினவினன்.

அங்ஙனம் வினவிய தலைமகற்குத் தோழி கூறு கின்றாள். "எம் தலைவனாகிய ஊர! யாம் நின்னைப் பழித் தும் இழித்தும் பலபடக் கூறி வருந்துவதற்கு அத் துணைப் பேதைமை யுடையேமோ? நன்மதி யுடையோம் நாம். எம் அன்னை போன்ற தலைவி, நினது புறத் தொழுக்கத்தைக் குறித்துப் புலவி சிறிதும் மனத்துட் கொண்டிலள். "மாதவர் நோன்பும் மடவார் கற்பும், காவலன் காவல் இன்றெனி னின்றால்" என்று கூறியதை

நினைந்து, மங்கையர் கற்பைக் காப்பவன் அந்நாட்டு மன்னனே எனத் தெளிந்து, தனது கற்பைக் காத்தற் பொருட்டு நந்நாட்டு மன்னனாகிய ஆதனவினியை "வாழி ஆதன் வாழி அவினி" என நாடோறும் வாழ்த்தி, இல்லத்தில் இனிது வதிந்தாள். அன்றியும், "நம்மனையில் வரும் விருந்தோம்புதற் பொருட்டு வயலிற் செந்நெல் விளைந்து செழித்துப் பெருகுக; பொன் பெருகிப் பொலிவு தருக; எமது மனைக்கு இரவலர் எஞ்ஞான்றும் வருக; பசுவும் எருமையும் பல்கிப் பால்மிக ஊறுக; உழுவதற்குரிய எருமைக் கடாக்கள் கொழுத்து வளர்க; பகைவர்கள் நமது நாட்டுக்குள் வராமல் புல்லைத் தின்று புறத்தே திரிக; மறையோர், தமக்குரிய தொழிலாகிய நால் வேதங்களையும் ஓதியுணர்ந்து வாழ்க; நமது நாட்டில் வாழும் குடிமக்கள் யாவரும் பசியும் பிணியும் இன்றிப் பல்லாண்டு நல் வாழ்வு வாழ்க" என்று கூறித் தெய்வத்தை வாழ்த்தி வணங்கியிருந்தாள்.

எம் தலைவி, அங்ஙனம் இருப்ப, அன்னவட்கு ஆருயிர்ப் பாங்கியராய் அருகமர்ந்துறையும் என் போன்றவர் யாவரும், "நினது புறத்தொழுக்கத்தைக் குறித்தும் நீ தலைவியை முதலிற் களவாகப் புணர்ந்த காலத்து" "நின்னிற் பிரியேன், பிரியினும் தரியேன்" எனவுரைத்த சூள் பொய்த்தது குறித்தும் நினக்குத் தீங்குவருமோ? என அஞ்சினேம். அன்றியும், நினது புறத்தொழுக்கத்திற்குத் துணையாய் நின்னுடன் திரியும் பாணனுக்கும் தீங்கு வருமோ? என அஞ்சினேம். ஆதலால், "ஊரன் வாழ்க, பாணன் வாழ்க" என நும்மிருவரையும் வாழ்த்துவதே எமது செயலாக இருந்தது. அன்றியும், நினது கேண்மையும், நீ எம்மோடு உடனுறையும் வாழ்க்கையும் கிடைத்து நாம் பெருமை யுடையவேண்டும் என்றும், நினது மார்பு பரத்தையர் பலர்க்கும் பொதுவாகாது எம் தலைமகட்கே யுரித்தாகவேண்டும் என்றும், நினது தேர் பரத்தையர் வாயில்தோறும் பலகாலும் சென்று நில்லாமல் எம் தலைவி வாயின்முன்னரேயே என்றும் நிற்கவேண்டும் என்றும்



சிந்தித்து ஒவ்வொரு நாளும் தெய்வத்தை வாழ்த்தி யிருந்தோம். எம் தலைவியின் வேட்கையும் எமது வேட்கையும் இதுதான். பிறிது ஒன்றும் மனத்துட் கருதிலோம்," எனக் கூறி முடித்தாள். தலைவன் மனமகிழ்ந்து தலைவியுடன் கூடி வாழ்ந்தான்.

பின் ஐந்து பாக்களின் கருத்துவிளக்கம்

அறிவும் பெருமையும் அமைந்த தலைமகன் தலைமகளைத் தனியிடத்துக் கண்டான்; அச்சமும் நாணும் அணியாக் கொண்ட தலைமகளுங் கண்டாள்; கண்ணொடு கண்ணிணை கவ்வி ஒன்றை ஒன்று உண்ணவும் உணர்கிலாது, உயிரும் ஒய்வுற,நீண்ட நேரம் நின்றனர்; உள்ளப் புணர்ச்சி உரித்தாயிற்று; பின் கள்ளப் புணர்ச்சி கலந்து காதலின் பந் துய்த்தனர்; களவொழுக்கம் நீட்டித்தது; இவ்வொழுக்கம் இனிமேல் தகாது என உணர்ந்தான்; வரைந்து கோடலே தகவென மதித்தான்; வரைதற்குரிய பொருளீட்டக் கருதி ஒருவரிடத்துங் கூறாமலே, தலைவியைவிட்டுப் பிரிந்தான்; பொருளீட்டி வந்து, தலைவியைக் சூரவர் கொடுப்ப மணந்தான்; இல்லறம் நடத்தி இன்புற்று வாழ்ந்தான், அங்ஙனம் வாழுங்கால், முன் பிரிந்திருந்த நினைவு வந்தது, "பிரியேன்" எனச் சூள் உரைத்ததும் மனத்தில் தோன்றியது. நமது பிரிவு குறித்துத் தலைவியும் பாங்கியும் சால வருந்தி யிருப்பர் என மனத்துட் கொண்டான், தலைவன். தோழியை நோக்கி, "தோழீ! நான் நும்மைத் தனியே விட்டு வரைபொருளீட்டக் கருதி ஒருவரிடத்தும் கூறாமலே பிரிந்து பல நாளிருந்தேன் அல்லவா? அஞ்ஞான்று நீவிர் என்ன நினைத்தீர்கள்? எங்ஙனம் பழித்தீர்கள்? உண்மையை ஒளியாமல் உரைப்பாய்," என வினவினான்.

தோழி, தலைவனை நோக்கி, "தலைவ! எம் அன்னையாகிய தலைவி, நின்னைக் குறித்து வேறு ஒன்றும் நினைத்திலள். சூளுரை பொய்யாது எனத் துணிந்தே யிருந்தாள். தனது கற்பைக் காத்தற் பொருட்டு, நன்னாட்டு மன்னனாகிய

ஆதனவினி நெடிதுநாள் வாழவேண்டும் என்னும் கருத்தினால் நாடோறும் ஆதனவினியை வாழ்த்தி யிருந்தாள். அன்றியும், நின்னை மணந்து பின்னர் இல்லறம் நிகழ்த்துதற்குஇடமாகத் திகழ்வது இந்நாடாதலால், இந்நாட்டில் மன்னனுக்குப் பகைவர் இல்லாது ஒழிக; பல வகையான அறங்களும் பெருகுக; பாவங்கள் யாவும் தொலைக; யாகங்களை மறையோர் முறைப்படி புரிக; களவுத் தொழில் இல்லாமற் கழிந்து உழவுத் தொழில், வணிகத் தொழில் முதலிய தொழில்கள் சிறக்க; நன்மை பயந்து நாடு உயர்க: தீமைதேய்ந்து சிறிதுமில்லாமல் மறைக; மழைவளஞ் சுரந்துவிளைவு மல்குக; இந்நாட்டுக்கு எந்நாடும் இணையில்லை யென்று பலரும் கூறும்படி பலன் தந்து வளம் பெருகி நமது நாடு விளங்குக" என்று தெய்வத்தைச் சிந்தித்து வந்தித்திருந்தாள். எம் தலைவியின் வேட்கை இதுவே.

அவளது அருமைப் பாங்கியராகிய யாமோ, "எம் தலைவியை ஊரன் வரைக; எம் தந்தை, எம் தலைவியை ஊரனுக்கே மணமுடித்துக் கொடுக்க; சுற்றத்தார் கொடுத்திலரெனில், ஊரன், தலைவியை உடன்கொண்டு செல்க; ஊரனுரைத்த சூள் உண்மையாக வாய்க்க: ஊரனது கேண்மை பழிச்சொற்கிடமின்றி வளர்க" என்று மனத்துட்கொண்டு, வேட்கையுடன் இருந்தோம்; வேறுபாடாகக் கருதிலோம் எனக் கூறி முடித்தாள்.

## (2) வேழப் பத்து

"வேழம் என்னும் சொல்லை யமைத்துப் பாடிய பத்துப் பாக்கள் என விரியும். வேழம் என்பது பல பொருள் தரும் ஒரு சொல்லாயினும், இங்கு மருத நிலத்தின் கருப்பொருளாகிய "கொறுக்கைச்சி" என்னும் செடியைக் குறித்தே வந்தது. வேழம் என்னும் சொல்லைக் கவிதோறும் அமைத்துப் பாடி, இதற்கு "வேழப்பத்து" எனப் பெயரிட்டனர் என அறிக.



இப்பத்துக் கவிகளிலும் "கழறிய பாங்கிக்குத் தலைவி கூறியது" என்ற துறைப்பொருள் அமைந்துள்ளது. தலைவன் விடுத்த பாணன் முதலிய வாயில்களுக்குத் தலைவி கூறியதாகவும் கொள்ளலாம்.

### கருத்து விளக்கம்

தலைமகன், பரத்தையர் சேரியிற் புறத்தொழுக்க முடையவனாய்ச் சின்னாள் அலைந்து திரிந்தான்; பின், அவ்வொழுக்கத்தை வெறுத்தான்; தலைவியிடம் வந்தான்; தலைவி பிணங்கி யுணங்கி யிணங்கிலளாய் முகமலர்ச்சியின்றி நின்றாள்; பாணன் முதலிய வாயில்களை விடுத்து, ஊடலைத் தணிக்க முயன்றான், தலைமகன்; ஊடல் தணியாதது கண்ட தலைமகன், பாங்கியையே வாயிலாக விடுத்தான். பாங்கி சென்று தலைவியை நோக்கி, "ஆருயிர் அன்னாய்! தலைவன் செய்த கொடுமைகளை நீ கூறலாமா? நின்னால் அவன் கொடுமை வெளிப்படலாமா? இது கற்புடைய மங்கையர்க்கழகா? எனக் கழறினள். அது கேட்ட தலைவி, தோழியை நோக்கி, "ஆருயிர்ப்பாங்கி நீ கூறுவது நன்று; தலைவன் கொடுமையை நாம் வெளிப்படுத்தல் தகாததுதான். அது குறித்து நாம் அஞ்சுகின்றோம், நல்லவனென்று நாம் சொல்லுகின்றோம். என் தோள்கள் நாளுக்கு நாள் மெலிந்து நல்லவன் அல்லன் தலைவன் என்பதைப் பிறர்க்குக் காட்டுகின்றனவே! நான் என் செய்வேன். அவன் செய்த கொடுமைகளை மறைக்க வேண்டியது நமது கடமை என்றாலும், என் தோள்கள் அவன் பிரிவிற்காக மெலிவது இயற்கைதானே! மெலியாமல் முன்னிருந்தபடியே பருத்திருக்கச் செய்வது உன்னால் இயலுமா? என்னால் இயலுமா? ஒருவராலும் இயலாதே! அதனால் அவன் கொடுமை வெளிப்படுவதும் இயற்கைதானே! அவனுக்குரிய பரத்தையர், ஊர் துஞ்சும் நள்ளிரவிலும் உறங்காது, அவனைத்தேடி அலைகின்றனரே! இனி அவன் நம்பால் வந்து கூடியிருப்பதற்கு வழியேது? அவனது மார்பு எனக்குக் குளிர்ந்த துயிலைக் கொடுக்கும் இனிய மென்மையுடையது. அதனை நினைத்து நினைத்து

நான் வருந்துகின்றேன். அவன் கொடியவன்தான்; அவன் மார்பு அத்தகையது அன்று; அவன் என்னுடன் கூடிக்கலந்திருக்கும்போதும், பரத்தையரை நாடுகின்றான். ஆதலால், நான் அவனைத் தலைவன் அல்லன் எனவே கருதுகின்றேன். என் குவளை மலர்போன்ற கண்கள், நான் நெஞ்சில் அவனை நினைக்க நினைக்கப் பொன்போன்ற பசலை நிறத்தை யடைந்தன. புதிய புதிய பரத்தையர்களையே அவன் புணர்ந்து திரிவதால், என் பேதை நெஞ்சம் பாழாகி வருந்துகின்றது. "பிரியேன்; பிரியினும் தரியேன்" என முதலிற் சூள் உரைத்தான்; இந்நாளில் என் கண்கள் கலுழும்படி பிரிந்தான். இதனைச் சிந்திக்கும்போதெல்லாம், என் கண்கள் பனிபோலத் துளி சிந்துகின்றன. கை வளையல்களும் கழன்று விழுகின்றன! என் செய்வேன்! இனி அவனோடு கூடுவது நலமன்று" என மறுத்துரைத்தாள். இங்ஙனம் தலைவி ஊடல் நீடவாடியிருந்த திறம், வேழப்பத்தில் வெளிப்படுகின்றது.

## (3) கள்வன் பத்து

"கள்வன் பத்து" என்பது, "கள்வன்" என்னும் சொல் அமைந்த பத்துப்பாக்கள் என விரியும். "கள்வன்" என்பது நீர் வாழும் உயிர்ப்பொருளாகிய நான்கறிவுடைய நண்டினை யுணர்த்தும். இப்பத்தில் நண்டின் இயலும் செயலும் எடுத்துரைக்கின்றார் ஆசிரிய..

## கருத்து விளக்கம்

தலைவன், ஊடல் நீட வாடியிருந்த தலைவியைத் தெளிவிக்கும் பொருட்டு அருகில் வந்து நின்று, "இனி நான் புறத்தொழுக்கம் புரியேன்; பரத்தையர் வாயிலையும் பாரேன்; ஒருநாளும் உன்னைவிட்டுப் பிரியேன்; ஊடலை மனத்துட் கொள்ளாதே" என்றான். பின்னும் தலைவி ஐயத்துடன் மாறுபட்டு நின்றாள். அண்மையில் நின்ற தோழி தலைவியை நோக்கி, "நின் தலைவன் நினக்குத் தெளிவாகக் கூறியும் ஏன் தெளிந்திலை நீ? மையுண்ட





கண்கள் பசலையடைய வாடிநிற்கின்றனையே! வளையல் கழலும்படி உடல்வலிகுன்றி மெலிகின்றனையே! வருந்தாதே" எனத் தேற்றினள். அங்ஙனம் தேற்றிய தோழியை நோக்கித் தலைவி கூறுகின்றாள் :

"தோழீ! நம் தலைவன், முன்பு நன்மொழிகள் கூறி மணந்து, 'இனி எஞ்ஞான்றும் நும்மைவிட்டுப் பிரியேன்' எனச் சூளுரைத்தது என்ன பயன் தந்தது? எத்துணைத் தெளிவுண்டாக்கி நம்மைச் சேர்ந்தான் அஞ்ஞான்று? இஞ்ஞான்று தீண்டி வருத்தும் தெய்வமாகவன்றோ திகழ்கின்றான், இவன். நம் கைவளையல்கள் கலகலவென்று ஒலித்துத் துலங்க முன்னர் நலம் தந்தான்; இன்று, நமது நலமுழுவதையும் கவர்ந்து செல்கின்றான். இவன் மார்பு என்போன்ற காதலுற்ற மகளிர்க்கெல்லாம், கைவளையலும் பலகலன்களும் கழலும்படி உடல் மெலியும் துன்பம் செய்யும் அன்றோ? நமக்குந் தெரியாமல் அவன் காதற் பரத்தையர்க்கும் தெரியாமல் வேறு சில பரத்தையர்களைப் புணர்ந்து, இழிவு கருதாது இத்தன்மையனாய் இவன் திரிவது என்னை? இவன் உரையை நம்பி வருந்தாதிருக்கக் கூடுமா? எங்ஙனம் நம்பி வாழ்வது?" என்று தலைவி யூடி நின்றாள்.

"இக்கள்வன்பத்தில், 8, 9, 10 ஆகிய மூன்று பாக்களிற் குறிஞ்சிக்குரிய ஒழுக்கமாகிய புணர்தனிமித்தமாகிய பொருளமைந்திருக்கிறது" என முன்னர்க் கூறினன். ஆதலின், அவற்றின் கருத்தை இங்குக் கூறாது விடுத்தேன்.

## (4) தோழிக்குரைத்த பத்து

தோழிக்குரைத்தபத்தில், தலைமகள், தலைமகனது கொடுமையைத் தன் தோழிக்கு உரைப்பதும், பரத்தையர், தலைமகன கொடுமையைத் தம் தோழிக்கு உரைப்பதும் என்ற இருவகையாகிய பொருளமைந்திருக்கிறது. தோழிக்கு உரைத்ததனால் இது இப்பெயர் பெற்றது.

## கருத்து விளக்கம்

தலைவன், புறத்தொழுக்கம் காரணமாகப் பலநாள் தலைவியைப் பிரிந்து திரிந்தான். தலைவி பிரிவாற்றாமையால் வருந்தினள்; தோழியை நோக்கிக் கூறுகின்றாள்; "தோழீ! நம்மூரில் முதிர்ந்து வளர்ந்து நிற்கும் மருத மரஞ் செறிந்த பெருந்துறையில், முன்னொருநாள் என்னுடன் கூடி நீராடுங்கால் நம் தலைவன், மகளிர் கூட்டத்தின் மத்தியி னின்று 'நான் ஒருநாளும் பிரியேன்; புறத்தொழுக்கம் புரியேன்,' எனச் சூளுரைத்தானன்றோ? அதனை மறந்து இப்போது பரத்தையுடன் கூடிப் புதுப்புனலாடத் தொடங்குகின்றான் எனப் பலர் கூறக்கேட்டுணர்ந்தேன். நம் மகிழ்நன் அச்சூள் பொய்யாமற் காப்பது தனக்குக் கடமையல்லவென்று கருதினன் போலும்! ஒருநாள் நமது மனைக்குத் தலைவன் வந்தது குறித்து, அவன் காதற் பரத்தையர், ஏழுநாள் அழுதனர் என்று அயலார் கூறினர். மருதத்துறையில் அவன் காதற் பெண்டிருடன் கலந்து, மலர்மாலை புனைந்த மார்பு பொருந்தும்படி தழுவிப் புனலாடினன் எனவும் பலர் புகல்வர். இதனால், நம் தலைவன் நமக்குப் பகைவனாகவே யிருக்கின்றான். அவனை நினைத்து நினைத்து என் கண்கள் பசலைபூத்து, அல்லிமலர்ப் பூந்தாது போல நிறங்கொண்டன. எனது சாயலின் எழிலும்,

நாருரித்த அல்லித் தண்டுபோல அழகழிந்து தோன்று கிறது; நான் என்செய்வேன்" என்று புலம்பினாள்.

பின் ஒருநாள், தலைவன், தன் மனைக்கு வரக்கருதினான்; பாணன் முதலிய பல வாயில்களை விடுத்தான்; பாங்கி வாயினேராது மறுத்துரைக்கத் தொடங்கினள்; தலைவி வாயினேருங் குறிப்பினளாயிருப்பதைத் தோழியறிந்திலள். தலைவி, தன் கருத்தினை வெளிப்படுத்தித், தலைவனை வரவேற்க விழைந்தாள். தோழியை நோக்கி, "தோழீ! நம் தலைவன் நம்மை மறந்து திரிகின்றான்; நாமும் அவனை மறந்துவிடுவதுதான் கடமை எனக் கருதுகின்றேன். கயல்மீனையொத்த மையுண்ட என் கண்கள் பசலைபூத்துச் சோர்கின்றன. இங்ஙனம் என் கண்கள் பசலையால்



வருந்தாதிருந்தால், மறந்துவிடுவது எளிதாகும். எனக்கு மறக்கமுடியாத நிலை ஏற்பட்டது குறித்துப் பெரிதும் வருந்துகின்றேன்" எனத் தன் கருத்தைப் புலப்படுத்தினள். தோழி வாயினேர்ந்தாள். தலைவனும் வந்துகூடி மகிழ்ந்து இன்பம் நுகர்ந்திருந்தான்.

இச்செய்தியைப் பலர் வாயிலாகக் கேட்டறிந்தாள், பரத்தை. தன் தோழியை நோக்கி, "தோழீ! நம் மகிழ்நன் பொய்கூறுவதில் மிகவும் வல்லவன்போலும்! நம்மைப் பிரியேன் என்று நம்மிடம் புணர்ந்திருந்தபோது சூளுரைத்தான். இப்போது, அவன் மனைவியிடம் போய்ப் புணர்ந்தபோதும், அவ்வாறே சூளுரைக்கின்றான். அவனைப் பிரிந்து நாம் வருந்துவதுபோலவே, மங்கையர் அவனைக்
கிறது.

காதலித்தால் வருந்நேரிடும் எனத் தோன்று கண்களில் நீர்த்துளி சிந்தி அழும்வண்ணம் பெண் களைப் பிரிவது அவன் இயற்கைபோலும்! சூளுரைப்ப தால் தனக்குத் தீங்கு வருமெனக் கனவிலும் கருதான் போலும். அவன் கூற்றை நாம் நம்பினோம். நம்பிய நம்மைப் பிரிந்தான். நாம் அழுது
அவன் நம்மை இனிக் கருதி இங்கு

வருந்துகின்றோம்.
வாரான்போலும்.
நமது நலம் துய்த்து இன்புற்றான்; இன்று, திருத்தமான
அணிகலன்கள் பூண்ட மூங்கில்போலும் தோள் மெலியும் படி நம்மைப் பிரிந்துவிட்டான். ஆயினும், யான் அவனைப்

பிரிந்தவனாகக் கருதிலேன். எனது கண்ணினும் மனத் தினும் கலந்து பிரியாதுறைகின்றான். தலைவியிடத்தே

நிலையாகத் தங்கினன் ; இனி இங்கு வாரான் என்று பலர் கூறுகின்றார். ஆயினும், அதுகுறித்து யான் வருந்திலேன்" என்று கூறி ஆற்றாமையைப் புலப்படுத்தினள்.

### (5) புலவிப் பத்து

"புலவிப்பத்து" என்பது புலவியைப்பற்றிக் கூறும் பத்து என விரியும். மருதத்தில் வரும் பாக்கள் அத்தனையும் புலவியைப்பற்றினவே எனினும், தலைவியும் தோழியும் தலைவன் முன்னிலையிற் புலந்து கூறியது மட்டும்



இங்குக் கூறப்படுவதால், இது "புலவிப் பத்து" எனப்பெயர் பெற்றது. இதில், முதற்கவி மட்டும் தலைவன் சிறைப்புறத்தானாக அவன் வாயில்களுக்குத் தலைவி கூறியதாகத் தோன்றுகிறது.

### கருத்து விளக்கம்

தலைவியின் ஊடல் தணிக்கும்பொருட்டுப் பாணன் முதலிய வாயில்களை விடுத்தான், தலைவன். வாயில்கள் கழறித் தெருட்டினர், தலைவியை. அப்போது, தலைவி, வாயில்களை நோக்கிக் கூறுகின்றாள். தலைவன் சிறைப் புறத்தனாய் நின்று செவிசாய்க்கின்றான். தலைவன் செவி யிலும் நுழைகின்றன, தலைவி கூறுஞ் சொற்கள். "எம் தலைவன் ஊர் வெண்மையான புதிய புதிய மலர்களை யுடைய பொய்கை சூழ்ந்தது. பொய்கையில் தனது குட்டியைத் தானே தின்னும் அன்பில்லாத முதலைகள் பல வாழ்கின்றன. அத்தகைய ஊரில் வாழ்பவன் எங்ஙனம் அன்புடையவனாக இருப்பான்? அறிவில்லாத பலர் வாழும் ஊர் அது. ஊரின் இயல்பு நம் தலைவனுக்கும் பொருந்தியிருக்கும் அன்றோ? புதிய புதிய பரத்தையர் வாழும் சேரியில் தங்குகின்றான். தன்னோடு கூடிவாழும் காதல் அன்புவாய்ந்த தலைவியாகிய என்னையும் கொல்லத் துணிகின்றான். அவன் சொல்லை உண்மையென நம்பினேன். என்னைவிட்டுப் பிரிந்தான். என் பொன்போன்ற மேனியிற் பசலைபூத்தது. யானும் இறக்கும் நிலைமையில் இருக்கின்றேன். இனி அவன் இங்கு ஏன் வரவேண்டும்? வருவதற்குக் காரணம் ஒன்றுமில்லையே!" என்று மறுத்துரைத்தாள். தலைவி சொற்கேட்ட தலைவன் எதிர்வந்தான். வந்தவனை முகம் நோக்கிப் பின்னும் கூறுகின்றாள்."

"ஊர! நின்னுடன் கூடியொழுகும் பரத்தை, ஒருநாள் நீ வேறு பரத்தையைப் புணர்ந்துவந்தமை யுணர்ந்து, நின்னைக்கடிந்து நின் மார்பை வெறுத்து, 'இங்கு வாரற்க' என விலக்கினள் அன்றோ? அங்ஙனம் விலக்கப்பட்ட நீ, வேறு புகலிடமின்றி இங்கு வந்தனைபோலும்; நீ ஏன்

இங்கு வந்தாய்? நின்னைப் பார்க்கிலும் நின் பாணன் பல பொய் கூறுவான்போலும்; பல சூளும் கூறுவான் போலும்; நீ பல பொய் கூறுவை என்பது முன்னரே எம் ஆயத்தார் அனைவரும் அறிந்த செய்தி; நான் கூறவேண்டு வதின்று; பரத்தையரை ஆங்கே புணர்ந்துவந்தாய் என்ப தற்குத் தக்க குறிகள் பல நின்பாற் காணப்படுகின்றன; இக்குறிகளோடு நீ வருவதை யாம் சிறிதும் வேண்டிலம்; இதுகாறும் நின் பாணன் எனது நலத்தைக் கெடுக்கப் பல பொய் கூறினன்; இனிமேல் அவன் யார் நலத்தைக் கெடுக்கப் பொய் கூறுவானோ? யான் அறியேன்" என மறுத்துரைத்தாள்.

அருகிருந்த தோழி, தலைவனை நோக்கி, "ஊர! தாய் முகம் நோக்கி ஆமைக்குட்டி வளர்வதுபோல, நாம், உனது மார்பையே நோக்கி வாழ்கின்றோம். அதனையுணர்ந்து நீ தக்கவாறு ஒழுகுக. நின் ஊரையடுத்த ஆற்றுநீர், வேனிற் காலத்துத் தெளியும்: கூதிர்காலத்துக் கலங்கும். அது போலவாவது நின் தலைவி ஒரு காலத்தின் மனங்கலங்கி, ஒரு காலத்தின் மனந்தெளிவடைகின்றாளா? இல்லையே! எப்போதும் கண் பசலைபூத்துக் கலங்கியேயிருக்கின்றாள். நின் மார்பை விழைந்த பரத்தையுடன் கூடிக் குறிப்பின் வழியொழுகி ஆங்கு வதிந்திருப்பதே எமக்கும் இனிது. இடையிடையே இங்கு வருவதுதான் மிகுந்த வருத்தத் தைத் தருகின்றது. வருவதினும் வாராமையே நன்று. வந்துபோவதிற் பயன் யாது? நின் மனத்தால் விரும்பப்

பட்ட இவள் என்றும் அழுது பொழுது கழிக்கும்படி அருள்புரிந்தாய். இவள், உனது தஞ்சம் அன்றோ? இனி யாவது நல்ல அருள்செய்க" என்று வன்மொழியும் இன்மொழியுங் கலந்து கூறினாள்.

### (6) தோழிகூற்றுப் பத்து

தோழி கூற்றுப்பத்து என்பது, தோழி கூற்றாகவே பத்துக் கவிகளும் அமைந்திருக்கின்றன என்பதையுணர்த்தும் பெயர்க் காரணங்கூறுமலே விளங்கும்.



தோழி தலைவனை நோக்கி, "ஊர! நினது பரந்த மார்பு, எம் தலைவியின் காமநோய்க்கு மருந்தாக முன்னிருந்தது. இனிமேலும் அவ்வாறேயிருக்கும் எனக் கருதுகின்றாய். புளியங்காய் தின்னும்போது புளிப்பிறைப் பற்கூச்சம் உண்டாகி மக்கள் வெறுத்தாலும், பின்னும் அதைக்கண்டவுடனே வாயூறிக் காமுறுவது இயற்கையே. அதுபோலத் தலைவியும் நின்னைக் கண்டவுடனே காமுறுவள் எனக் கருதினை போலும்! நின் கருத்து நன்றன்று. நெருநல், நினதுதேர், பரத்தையர் வாயிலிற்போய் நின்றதே! எம் தலைவியின் மனம் எங்ஙனம் வருந்தாதிருக்கும்? இன்று இங்கு வந்து இன்மொழி கூறி நிற்கின்றாய். எத்துணையோ பிழைகளைப் பொறுத்து நின்னுடன் புனலாட வந்தாள், எம் தலைவி. புனலாடும்போது, அவள், "நம் தலைவன் பரத்தையருடன் கூடி நீராடிய துறையல்லவா இது?" என்று நினைத்தாள். சினத்தாற் கண் சிவப்பும் உடல்

மெலிவும் தோன்ற, அதனைப் பிறர் அறியாது மறைத்து மனைக்கு வந்தாள். அக்குறிப்பு நினக்குந் தெரியும். அறிந்தும் அறியாதவனைப்போல எம் தலைவியை நோக்கி, "தெய்வங்கள் உறையும் துறையில் நீராடியதால் உடல் மெலிவும் கண்சிவப்பும் உடன் தோன்றியதோ?" என வினவிச் சினம் எழுப்புகின்றாய். இஃது எத்துணைச் சூழ்ச்சியான செயல்? நீ தான் எம்மை வருத்துகின்றாய்; நாம் தாம் வருந்துகின்றோம். நீர்த்துறையும் அதிலுறையும் தெய்வங்களும் எம்மை வருத்துமா? நீ உரைத்த சூள்தானே எம்மை வருத்துகின்றது. எம் தலைவியுடல் மெலிந்து வளையல்கள் நெகிழ்ந்து வருந்தப் பரத்தையரைப் பல்காலும் புணர்ந்து வருகின்றாய். அப்பரத்தையர்க்கு யான் அஞ்சி யொடுங்கி யிருக்கின்றேன். இம்முறையாக நீ இங்கு வருவது தவறு. அடிக்கடி பிரிவதால், எம் தலைவியின் நெற்றி பசந்து துன்புறுகின்றாள். நீ முற்காலத்தில் எம்மைத் தேற்றிய சூளுரை, இக்காலத்தில் அளித்தது? ஒரு பயனும் அளித்திலதே!

என்ன பயன்
இவள் நலம்

தொலைந்து புலம்பவிட்டுப் பிரிவதற்கு நின் காதற் பரத்தை இவளினும் சிறந்த பெருநலமுடையவளோ? இல்லையே! இவளைப் புணர்ந்துபின் பிரிந்ததுபோலவே, நின் காதற் பரத்தையையும் ஒருகாலத்தில் விட்டுப்பிரிவாயன்றோ? வேண்டியபோது புணர்ந்து வேண்டாதபோது பிரியும் இயல்புடைய நினது தொடர்பு, எமக்கு இனி வேண்டாம். இது துன்பம் விளைக்கும் எக்காலத்திலும். நின் காதல் நோய்க்கு யான் மருந்தாக இருந்து, எம் தலைவியை நின்பாற் புணர்த்து நன்றி புரிந்தேன். அந்நன்றியை மறந்து, இந்நாட் பிரிந்தனை. இப்போது, எம் தலைவி காதல் நோய்க்கு நான் மருந்துபோல இருந்து தீர்த்தற்கு முடியாத நிலைமை குறித்து வருந்துகின்றேன்," என்று இடித்துரைத்தாள்.

இத் தோழிகூற்றுப் பத்தில், இறுதிக்கவி மருதத் திணைப் பொருள் குறித்ததன்று ஆதலின், அதன் கருத்தை இங்கு விளக்கிலேன்.

## (7) கிழத்தி கூற்றுப்பத்து

"கிழத்தி கூற்றுப் பத்து" என்பது, கிழத்தியினது கூற்றாகிய பத்துக்கவிகளையுடையது எனப் பொருள்படும். (கிழத்தி—தலைவி.)

## கருத்து விளக்கம்

தலைவன், தலைவியைப் பிரிந்து சென்று, முதலில் ஒரு பரத்தையை மணந்தான். பின்னர்ச் சிலநாட் கழித்து, மற்றொரு பரத்தையை மணந்தான். தலைவன் இங்ஙனம் புறத்தொழுக்கம் புரிந்து திரியும் செயல்களைப் பல நாளாகப் பலர் வாயிலாகக் கேட்டுணர்ந்தாள், தலைவி.

தலைவன் ஒருநாள் வந்து தலைவி மனைக்குட் புகுந்தான். தலைவி, தானறிந்த செயல்கள் யாவுங் கூறிப் புலந்தாள். இனி, இத்தகைய இழிசெயல்கள் என்பால் நிகழா என்றான் தலைவன். தலைவி, தலைவனை நோக்கி, "மகிழ்ந! நீ பரத்தையர் சேரியில் நல்ல நல்ல மங்கையர்களை நாடி,



நாளும் நாளும் கூடி, இன்பந்துய்த்துப் பயின்றனை. இனி நீ இத்தொழிலை எங்ஙனம் மறக்கமுடியும்? முடியாது. இச்சேரிப் பரத்தையர் அனைவரையும் ஒருங்கு மணந்தனை போலும். புதுப்பரத்தையரை நாடிப் புணர்வதற்கு நினது தேர் எவ்வூர்க்குச் செல்லுமோ? யான் அறியேன். எனது நலமுழுதும் தொலைந்தாலும், பரத்தையரைத் தோய்ந்த நின் மார்பைத் தீண்ட நான் விழையேன். நின்னைக் கலந்த காரிகையர் ஒருவரா? இருவரா? எண்ணிறந்தவரன்றோ? எனக்குத் தெரியாதெனமறைத்துப் பொய் கூற வேண்டாம். மைந்தனைப் பயந்து வனப் பழிந்த மேனி என் மேனி. இதனைத் தோய்ந்தால் நின் மார்பு நலம் கெடும் அன்றோ? என் மேனியை நீ தீண்டற்க. நீ நின் தளர்நடைப் புதல்வனைக் காண விரைந்து, தனித்துத் தேரேறி, நின்மனைக்கு வரும்போது, வழியிடை மறித்துத் தழுவிக்கொண்டாள் ஒருத்தி என அறிந்தேன். அவள் யார்? அவளது பெயர் கூறுக. அது குறித்து யான் ஊடேன். நீ இப்போது புதிதாகப் புணர்ந்திருக்கும் பரத்தை மிகவும் பேதைபோலும். தன்னெழில் சிறந்ததென்று தருக்கிக்கொண்டு என்னுடன் புகைக்கின்றாள் எனப் பலருரைக்கக் கேட்டேன். புது மலர் தோறும் போய் வாய்வைத்து, மதுமகிழ்ந்துண்டு, வண்டு

பறந்திடல்போல் புதுப்பரத்தையரைப் புணர்ந்து புணர்ந்து நீ விரைவிற் பிரிவதை யறியாள்போலும், நின் காதற் பரத்தை. யான் நின்னை யடக்கி வைத்திருக்க அறியாமல் வாழ்கின்றேன்" எனப் பழித்துப் புறங் கூறுகின்றாள்; அவள், அடங்காமல் திரிகின்றதை அறிந்தால், இவ்வாறு கூறிப் பழித்துரையாள். "நின் பெண்டினை யான் அறிவேன். அவள் ஒருநாள் பலரும் நீராடுந்துறையில் வந்து நின்றாள். புதுப்புனல் பூவோடு வண்டல் மண்ணையும் வாரிக்கொண்டு வந்ததைக் கண்டாள். இந்த வெள்ளத்தில் எவ்வாறு நீராடுவதென்று மையுண்ட கண்கள் சிவக்கும்படி கண்ணீர் சிந்தி அழுது நின்றாள். அவள்தான் இளமைப்பருவமுடையவள். அன்றியும் பலர் உளர். நின் பெண்டிர் யாவரும் தூய்மையுடையவர்;



மக்கட்பேறு இல்லாதவர்; நல்லவர்; யானோ மக்களைப் பெற்றேன். வனப்பு இழந்தேன். நின் கண்ணுக்குப் பேய்போலத் தோன்றுகின்றேன்; பெண் போலத் தோன்றிலன்" என்று பலவாறு மனம் வெறுத்தவள் போல மறுத்துரைத்தாள்.

## (8) புனலாட்டுப் பத்து

"புனலாட்டுப்பத்து" என்பது, புனலாடுதலைக் கூறிய பத்து என விரியும். ஒவ்வொரு பாவிலும் புனலாடல் வந்திருப்பதால் இது இப்பெயர் பெற்றது. இப்பத்தில் முதல், இறுதி நிற்கும் இரண்டு பாவும் தலைவி கூற்றாகவும், இரண்டு, மூன்று, நான்கு ஆகிய மூன்று பாக்களும் தலைவன் கூற்றாகவும், ஐந்தும் ஆறும் தோழி கூற்றாகவும், மற்றுமுள்ள பாக்கள் பரத்தையர் கூற்றாகவும் அமைந்துள்ளன. இவற்றை முறையாகத் தொகுத்து ஒவ்வொருவர் கூற்றையும் விளக்குவோம்.

## கருத்து விளக்கம் (தலைவி கூற்று)

"மகிழ்ந! நின் காதற்பரத்தையைக் கைகளால் அணைத்து நெருநல் நீ புனலாடினையெனப் பலர் அலர் கூறப் பாவி யான் கேட்டேன். வருசெங்கதிர் ஒளியை மறைக்கமுடியுமா? அலரை மறைக்க யாரால் இயலும்? நீ புனலாடிய செய்தியும் நிலத்தில் மறைக்க முடியாத வண்ணம் பழியாய்ப் படர்ந்தது. இன்றும் நீ நின் வனப்புத் தக்க மகளிரொடு கூடித், தோளுக்கியைந்த துணையாய் நின்று, பெருகி வந்த புதுப்புனலில் ஆடியதால், நின் கண்கள் சிவந்து புனலாடிய காட்சியைப் பொருந்தக் காட்டுகின்றன. உண்மையைக் கூறுக: ஊடல் கொள்ளேன்," என்றாள்.

## தலைவன் கூற்று

தலைவன் தோழியை நோக்கி, "தோழீ! நின் தலைவி ஏன் இங்ஙனம் புலந்து பல கூறுகின்றாள். முன் ஒரு காலத்தில் கலங்கலாகப் புதுப் புனல் கரைகடந்து பெருகி

வந்தது. 'நீராட நீ வா' என்று யான் அழைத்தேன்;
அழைத்தவுடன் தோளுக்கிசைந்த துணையாக வந்தாள். நீரிற்பாய்ந்து நெடிது நேரம் விளையாடினள். நீலமலர் போன்ற இவள் கண்கள் நீரிற் படிந்ததால், அத்துறை நறுமணமும் குளிர்ச்சியும் பெற்றது. ஆற்றங்கரையின் அருகே வளர்ந்திருந்த மருத மரத்தில் ஏறித், தங்கப் பணிகள் தகதக வென்று ஒளி வீசத் தண்ணீரிற் பாய்ந்தாள். அங்ஙனம் பாய்ந்தபோது, வானின்றிழிந்த மயில்போலத் தோன்றியது, தலைவியின் கூந்தலின் சாயல். களவுக் காலத்திலும் அங்ஙனம் எனக்குத் துணையாக வந்து புனலாடியவள், இன்று ஏன் புலந்து நிற்கின்றாள்? புலவியை நீக்கிப் புனலாட வருமாறு கூறுக," என்று இன்மொழி பகர்ந்தான்.

தோழி கூற்று

தலைவன் கூறியது கேட்ட தோழி தலைமகனை நோக்கி, "மகிழ்ந! நீ இவண் வாழும் பல ஆடவர்களைப்போல வாழ்கின்றாயா? ஊர் முழுவதும் அலர் கூறத்தொடங்குகின்றது. பழமையான பூத்த மலர்களையுடைய மருத மரங்கள் நிற்கும் பெருந்துறையிற் பரத்தையுடன் கூடிப் புனலாடிய செய்தி வெளிப்பட்டது. பஞ்சாய்க் கோரை போன்ற கூந்தலையும், படர்ந்த தேமலையும் உடைய அப் பரத்தை, நின்னுடன் கூடிப் புனலாடியதால், தெய்வ மங்கையர்க்கெல்லாம் தெய்வமெனத் திகழத் தன்னலம்

மேம்பட்டுத் தருக்கி வாழ்கின்றாள். எம் தலைவி இச் செயல் குறித்துச் சாலவருந்தித் தன்னலம் அழிந்து மெலி கின்றாள். இங்ஙனம் பரத்தையரோடு புதுப் புனலாடிப் பழிமொழியேற்று விழைவுடன் திரிவது நினக்குத் தக வன்று" எனக் கடுமொழி கூறிக்கழறினள்.

பரத்தை கூற்று

பரத்தையுடன் கூடிப் பலநாளும் புனலாடினன் தலை வன். ஒருநாள் மட்டும் தலைவியை உடன் அழைத்துக் கொண்டு சென்று புனலாடினன், தலைவன். அச்செயல் அறிந்தாள், அப்பரத்தை. இனிமேல் இவனுடன் கூடிப் .

புனலாடப்போவது பயனின்று எனவெறுத்தாள். மற்றை நாள் தலைவன் பரத்தையிடம் வந்து 'புனலாடப் போவோம் வா' என அழைத்தான். அவளுக்குச் சினம் மூண்டது. தலைவனை நோக்கினள். 'நான் ஒன்று சொல்வேன் கேள்; உன்னோடு நான் கூடிக் கூடிப் புனலாடி ஊர் முழுவதும் பேர் பெற்றேன்; இன்னவள் இன்னவனுடன் சேர்ந்து திரிகின்றாள் எனப் பலர் அறிய அலர் பரவியது. அலர் பரந்தாலும், நான், அதனை ஏற்றுக்கொள்கிறேன். நின்னோடு கூடிப் புனலாடவும் வருகின்றேன். நீராடியபின் நீ என்னைவிட்டுப் பிரியாதே; நின்மனை செல்லாதே; என் மனைக்கே என்னுடன் கூடிவா. உடன்பாடின்றேல், என் உறவை விட்டுவிடு' என்று கழறினள். தலைவன் உடன்பட்டான். புதுப் புனலாடச் சென்றனர் இருவரும். 'கோட்டையைக் கொம்பாலிடிக்கும் கடுங்கண் யானையைப் போலப் புதுப் புனல் வெள்ளம் கரையை யிடித்துக் கடுகி வருகின்றது; என்தோள் மரக்கலம் போன்றது; அதனை ஒரு கரத்தாற் பற்றிக்கொள்; மரக்கலத்தையும் ஒரு கரத்தாற் பற்றிக்கொள். எனது தோள் இணையும் புணையும் புனலாடுவதற்குத் துணையாகும்,' என்று பரத்தை கூறப் புதுப் புனலாடி மகிழ்ந்திருந்தனர். பின்னர் ஒரு நாள், பரத்தையுடன் கூடாது தனித்துச் சென்று, தலைவன் புனலாடினன். அப்பரத்தையும் அங்ஙனமே ஆடினள். அவளது ஊடற் குறிப்பறிந்த தலைவன், அதனையுணர்த்தக் கருதினன். நீர்க்குள் மூழ்கி விளையாடி மேல் எழுபவன் போல அவள் அருகில் வந்து, அறியாதவன் போல் அவள் கையைப் பற்றி, 'நீயார் மகள்' என்று நகைத்து முகம் நோக்கினன். அவள் சினந்து, 'நான் யார் மகள் ஆயினும் என்ன? நீ ஏன் எனது கரம் பற்றினை? நீ யார் மகன் எனது கையைப் பற்ற? விட்டு விடு'' என்று கடிந்தாள்.

இவ்வாறு புனலாடி மனைக்குச் சென்றனர் இருவரும்.

## (9) புலவி விராயபத்து

"புலவி விராயபத்து" என்பது, தலைவி, தோழி,

பரத்தை ஆகிய மூவர் புலவியும் விரவிய பத்துப் பாக்களை

மருதம்

61

யுடையது. இப்பத்தில் இரண்டும், மூன்றும், ஐந்தும் தலைவியின் புலவிக் கூற்றாகவும்; நான்கு மட்டும் தோழியின் புலவிக் கூற்றாகவும்; மற்றவை காதற் பரத்தையின் புலவிக் கூற்றாகவும் அமைந்துள்ளன. இவற்றை முறையே தொகுத்துக் கருத்தை விளக்குவோம்.

### தலைவி கூற்று

தலைவி, தன் மனைக்குத் தலைவன் வருவதைக் கண்டாள். பாணன் வாயிலாக முன் வந்து நிற்பதையும் கண்டாள். ஒன்றும் உரையாமல் ஊடலால் வாடியிருந்தாள். ஊடலையுணர்த்தப் பாணன் பல இனிய மொழி கூறினன். உடனே தலைவி, பாணனை விளித்துத், தலைவனுக்கும் கேட்குமாறு சாற்றத் தொடங்கினள். "பாண! நும் தலைவியாகிய பரத்தை, எம் தலைவன் என் மனைக்கு

ஒருநாள் வந்தபோது, அவன் மார்பிற் புனைந்த மலர் மாலையில் மகரந்தமுண்ட வண்டு ஒன்று என் பூங்குழலில் ஏறியிருப்பதை அறிந்தாளாம். அது குறித்துத் தலைவனைச் சினந்து, தன் மனைக்கு வருவது தகாது எனப் புலந்தனளாம். இப்பண்பினைப் பலர் கூறக்கேட்டறிந்தேன் யான். அத்தகைய பரத்தை வசப்பட்டலைபவன் எங்ஙனம் என்னோடு கூடிவாழ்வான்?'' என்று சினந்து கூறினள். தலைவனும் வருந்திச் சென்றான். பின்னர் ஒருநாள், தலைவன் தனித்து வந்தான். பரத்தையர் மனையிலிருந்து வருவதை யறிந்தாள், தலைவி. ''எம்பெரும! பரத்தையர் இல்லம் பரிந்து செல்வதும், மீண்டுமென் மனைக்கு விரைந்து வருவதும் தீது நன்றறியாச் சிறியோர் செயல் போலன்றோ தோன்றுகிறது? கண்டோர் நகைக்குங் கருமம் அன்றோ இது. குலத்தொழுக்கிற்குக் குறைவு நேருமே! இவ் விழி செயலை இனியேனும் விட்டொழிப்பாய்,'' எனக் கூறித் தழுவித் தலைவி மகிழ்ந்திருந்தாள்.

### தோழி கூற்று

தலைமகன், பரத்தையரைத்
குறியுடன் வந்து, தோழியை

தோய்ந்த புணர்ச்சிக்
வாயில் வேண்டினன்.

அப்போது தோழி, "ஊர! நின் மனைக்கிழத்தியின் பண்பு நீ அறிவாய். அயல் ஒரு பெண்டிர் பெயர் சொலக் கேட்பினும் சொல்லுக்கடங்காச் சுடுசினங் கொள்வாள். நறு மலர் புனைந்த கூந்தல் மகளிர் கூடித் தைத்திங்களில் நீராடிய போது கலங்கிய பொய்கையைப்போல நின் மார்பு பரத்தையரை யணைந்த பல் சுவடுபட்டுக் கலங்கித் தோன்றுகிறது. இங்ஙனம் மாறுபாடடைந்த மார்பினைக் கண்டால்
எத்தகைய
அவளுக்கு

கடுஞ்சினங் கொள்வளோ? யான் அறியேன்.
வாயிலாக யான் போய் என்ன செய்வேன்?
அவளை நின்னுடன் கூட்டுவிப்பது எப்படி? இது என்னால் இயலாத செயல்" என்று இனிய மொழிகளால் இசையக் கூறினள்.

பரத்தை கூற்று

இல்லக்கிழத்தியை விட்டுப்பிரிந்து

காதற் பரத்தை
யைக் கலந்து பல நாள் இருந்தான், தலைவன். அங்ஙனமிருக்குங்கால், அவளை நோக்கி, "என்னுயிர்க் காதலி! நின்

மேல் மிகுந்த காதல் உடையேன்; நின்னையே
நின் மனை புகுந்தேன்; என் மனைக்கிழத்தியை

விழைந்து

என் றும்
நான் விழையேன்,'' என்று கனிந்த மொழி யுரைத்தான், தலைவன். அம் மொழி கேட்ட காதற்பரத்தை, "ஊர! என்னையே விழைந்தேன் என்று நீ கூறிய இவ்வுரை வெவ்வுரை. மனையாள் கேட்கின் வருந்துவள் அன்றோ? நின் மனையாள் யாரைக் கண்டாலும் தன் தலைவனைப் புணர்ந்த மகளிர் என்றே கருதிப் புலக்கின்றாள். என்னைக் கண்டால் எங்ஙனம் பகை கொள்ளாமலிருப்பாள்? யானே நின்னை யென் மனைக்கு வரும்படி அழைத்தேன் என்ன அவள் பலரிடத்திலும் கூறுகின்றாளாம். நான் அக் கருத்துடையவள் அல்லள். என் தமக்கை எண்ணுவதுபோல இனி நான் நின்னை வரவழைக்கின்றேன்; வருவது வருக. என்ன தான் செய்வாள் என்று பார்க்கின்றேன்,'' எனச் செருக்குடன் சில மொழி பகர்ந்தாள்.

பின்னர்ச் சில நாட் கழிந்தன. தலைவன், தன் மனைக்கிழத்தியுடன் போய்க் கலந்து வாழ்ந்தான். தலைவன்,

தலைவியைப் போற்றி வாழ்கின்றான் என்று பலர் கூறக் கேட்டாள், காதற் பரத்தை. பாணனும் வந்து பக்கம் நின்றான். அவனும் அடுத்துள்ளாரும் கேட்ப, அவள் கூறுகின்றாள்: "பாண! நம் தலைவன், தன் மனைக்கிழத்தியைப் போற்றுவது எழிலும் இயலும் குறித்தன்று. பெண்மைக்கும் பண்புக்கும் பெரிதும் போற்றுகின்றான்," என்றாள். பின்னும் அவள், "நம் தலைவனுக்கு ஒரு மைந்தன் பிறந்தனன். அவனைப் பெற்ற தாய் ஒருத்தி ஆங்கு இருக்கின்றாள். அவள் என்னை வெறுக்கின்றாள். தலைவனைத் தன் மனைக்குச் செல்லவிடாமல் என் மனையில் இருக்க இடமளித்தேன் என்பது அவள் கருத்து. நான் அவ்வாறு செய்ய நினைந்திலேன். அவள் தலைவன் செயல் அவ்வாறு இருக்கிறது. மலர்தோறுஞ் சென்று வண்டுகள் படிந்து மதுவுண்டு களிப்பதுபோல அவள் தலைவனும் அளவிறந்த காதற் பரத்தையரைத் தோய்ந்து காமவின்பம் நுகர்கின்றான். வண்டுகளின் பண்பு கண்டு இவன் பயின்றனனோ? இவன் பண்பு கண்டு வண்டுகள் இவனிடம் பயின்றனவோ? என ஐயுறும்படி அவன் செயல் இருக்கின்றது. நான்தான் காரணம் எனக் கருதுகின்றாள். என்னோடு பிணங்குகின்றாள். என்ன செய்வேன் நான். என்னையும் ஒரு காலத்தில் விட்டுப் பிரிந்து போகின்றான் அவள் தலைவன்" என்று பரிவுடன் கூறுவாள்போலப் பகர்ந்தாள்.

## (10) எருமைப் பத்து

"எருமைப் பத்து" என்பது, எருமை என்னும் சொல்லையுடைய பத்துப் பாக்களையுடையது என விரியும். எருமை என்னும் சொல் ஒவ்வொரு பாவிலும் இருப்பதால் இது இப் பெயர் பெற்றது.

முதலில் உள்ள நான்கு பாக்கள் மருதத்திற் குறிஞ்சி மயங்கி வந்தவை. ஐந்தாவது பா, தலைமகள் கூற்றாகவும், ஆறு, பாணன் முதலிய வாயில்கள் கூற்றாகவும், ஏழும் ஒன்பதும் தலைமகன் கூற்றாகவும், எட்டும், பத்தும் தோழி கூற்றாகவும் அமைந்துள்ளன. திணை மயக்கம் ஆகிய முதல்



நான்கையும் விடுத்து மற்றைப் பாக்களின் கருத்தை முறையே விளக்குவோம்.

## தலைமகள் கூற்று

தலைமகன், முதலிற் சின்னாள் பரத்தையர் மனைக்குப் போவதும் தன் மனைக்கு வருவதும் ஆக இருந்தான். பின், பரத்தையர் மனையில் இராப்போது கழித்துப் பகற்போது தன் மனைக்கு வந்தான். பகலிலும் ஒருவேளை வருவதும் ஒருவேளை வாராதிருப்பதுமாக அவன் வரவு சுருங்கிற்று. பகலும் அவனைப் பார்ப்பது அரிதாயிற்று. உண்டபின் உண்ணும் பயிற்சியுடையவள், தலைவி.

கணவன்

காதலன்

எப்போது வருவான் என்று காத்துநிற்பதே வேலையாயிற்று. வந்த காதலன் உண்டபின் உண்பதும், வந்திலன் எனில் வழிபார்த்து நின்று ஏங்குவதும், உண்ணுதும் உறங்காதும் பொழுது கழிப்பதுமாக வருந்தியிருந்தாள். தலைவிக்குத் தன் வரவை யறிவிக்கப் பாணன் முதலிய வாயில்களை விடுத்தான். வாயில்கள் வந்து, "தலைவன் இன்று வருவான்; பிணக்கம் வேண்டாம்; இணக்கமுடன் இனிது மகிழ்ந்திரு," என்றனர். அவ் வாயில்களை நோக்கி, "ஊரன் புரிந்த கொடுமையை உரைக்க முடியுமா? இரவுமட்டும் வாராமல் இருந்தானு? பகலிலும் வாராது பரத்தையர் இல்லம் தங்கினுன். வருவான் வருவான் என்று வாயில் காத்து நின்றேன். துன்பம் விளைத்தது சொல்லமுடியுமா? இன்பம் விளைப்பான் இனிமேல் எனக்கு அவன் என்று எங்ஙனம் எண்ணுவேன்? போதும் அவன் உறவு; வரவை விழைந்திலேன்," என்று சினந்துரைத்தாள். வாயில்கள் ஒன்றுங் கூறுது நின்றனர்.

## வாயில்கள் கூற்று

வாயில்கள் அங்ஙனம் நிற்க, தலைவியும் வருந்தி ஒருபுறம் நிற்கத், தனித்து மனைக்குள் தலைவன் புகுந்தான். தலைவியும் பின்சென்ருள். குற்றேவல் செய்து குணமுடன் நின்ருள். இருவரும் கூடிமகிழ்ந்து இன்பமுற்றனர். வாயிலாய் வந்து நின்றவர், ஒருவரையொருவர் உற்று நோக்கினர்,

"மாண்பு மிக்க மருதநிலத் தலைவன் புதல்வி யிவளன்றோ? நற்குடிப் பிறந்த கற்புடைக் காரிகை யிவளே! நம் தலைவனுக்கு இரவிற் பாயலுக்கு இனிய துணையாவாள்; இன்பமும் தருவாள்போலும்," என உரையாடி வெளிச் சென்றனர்.

## தலைமகன் கூற்று

புறத்தொழுக்கம் புரியாது தலைவன் மகிழ்ந்து இருந்தான். ஒருநாள் தலைவி ஊடினாள்; ஊடல் தோன்றக் காரணம் என்ன? என ஆய்ந்தான். தனது தோளில் புனைந்த மலர்மாலையை மாறுபடக் கருதியதுதான் எனத் துணிந்தான். உண்மையுணர்த்தி ஊடலை யுணர்த்தினான்; கலந்து மகிழ்ந்தான்; அவளது சீரிய பண்பும் செயலும் வியந்தான், "இவளே உயர்ந்த மருதநில முதல்வன் புதல்வி; பொய்கையின் மலர்ந்த பூப்போற் குளிர்ந்த பண்பும் அன்பும் என்பால் உடையவள்; காமநோய்க்குக் கடுமருந்து ஆகிய பணைத்தோளுடையவள்; இன்பந் தந்து என்பால் இருந்தாள். இவள்போல் மங்கையர் எவரும் இருப்பரோ?" எனத் தனக்குள் எண்ணித் தானே மகிழ்ந்தான்.

## தோழி கூற்று

பின் ஒருநாள், தலைவி, தலைவனைக் கடுமையாகப் பேசிச் சினந்தாள். தலைவன், தோழியிடம், உற்றதை உரைத்தான். தோழி, தலைவனை நோக்கி, "ஊர! தலைவி சினந்து பேசுவது குறித்து வருந்துகின்றாய். இளமையில் நின்னை இடித்தும் அடித்தும் தாயும் தந்தையும் சாலவும் வருத்தினரன்றோ? எது குறித்து? நல்வழிப்படுத்துவதற்காகத் தானே? அக்காலத்தில் அதனையும் கொடுஞ்செயலென்று

குறித்திருப்பாய்; இக்காலத்தில் எண்ணிப்பார். இவள் செயலும் அது போன்றதே. புறத்தொழுக்கத்தை நீ போக்கவேண்டும் என்பதுதான் அவள் கருத்து. தாய் தந்தையரினும் தனி உரிமையுடையவள் தலைவிதானே; இவளினும் உரியவர் எவரேனும் உளரோ நினக்கு. நின்





னலங்குறித்தே அங்ஙனம் புலந்து கூறுகின்றாள்"—எனக் கூறித் தலைவனைத் தேற்றினள்.

இதுகாறும் ஒருவாறு பப்பத்தாகப் பகுத்திருக்கும் பாக்களின் கருத்தை விளக்கி வரைந்தேன். இம் மருதத்தில், தலைவி, தலைவன், தோழி, பாணன் முதலிய வாயில்கள், பரத்தையர் இவர்களே கூற்று நிகழ்த்துவதற் குரியவர் என அறிந்தோம். தோழி, தனது வேட்கையையும் தலைவி வேட்கையையும் கூறுவதும், தலைவி பாங்கிக்கும் பாணன் முதலிய வாயில்களுக்கும் தலைமகன் கொடுமையைக் கூறுவதும, பரத்தையர் தமக்குத் தலைவன் புரியும் கொடுமையைக் கூறுவதும், தலைவன் முன்னிலையிற் பாங்கியும் தலைவியும் புலந்து கூறுவதும், தோழி தலைவியைத் தேற்றுவதும், தலைவன் தலைவியைப் புகழ்வதும், தலைவியை வாயில்கள் கண்டு புகழ்வதும் ஆகிய இவைகள் எல்லாம் பொருள்களாக அமைந்திருக்கின்றன.

## கருப்பொருள்கள்

இம் மருதத்தில் வந்துள்ள கருப்பொருள்கள் இந்திர விழா, மகிழ்நன், ஊரன், பாணன், பாண்மகன், உழவர், குருகு, நாரை, வண்டு, நீர்க்கோழி, சம்பங்கோழி, கயல், கெண்டை, வாளை, வரால், கெடிறு, நண்டு, முதலை, எருமை, நீர்நாய், பசு, கரும்பு, செங்நெல், வெண்ணெல், இலஞ்சி, தாமரை, நீலம், நெய்தல், குவளை, பகன்றை, ஆம்பல், முள்ளி, வள்ளை, கரந்தை, வயலை, வேழம், செருந்தி, இருஞ்சாய், பஞ்சாய், காஞ்சி, மருதம், மா, பாகல், பெரும்பயறு, வண்டல், பொய்கை, பெருந்துறை புதுப்புனலாடல், சின்மீன் சொரிந்து பன்னெற்பெறுதல் ஆகிய இவைகளே.

## கருப்பொருள் விளக்கம்

### வேழம்

வேழம் என்பது கொறுக்கைச்சி, கொறுக்காந்தண்டு எனப் பெயர்பெற்ற ஒரு செடி. இது மருதநிலத்தில்

உற்பத்தியாவது எனவும், உயரமாக வளர்ந்து பசலைக் கொடி படர்வதற்குக் கொழுகொம்பாய் நிற்கும் எனவும், கரும்புப் பூப்போலவும் உளைபோலவும் பூக்கும் எனவும், இப் பூவைப் பறித்து மகளிர் சிலர் விற்பர் எனவும், அதன் தண்டினைப் புணையாகப்பற்றிப் புனலாடுவார் அந்நிலத்து மகளிர் எனவும், அத்தண்டு மூங்கில்போலத் துளையுடையது எனவும், அத்துளையில் மகளிர் தம் கண்ணுக்கிடும் மையைப் பெய்து வைப்பர் எனவும் இந் நூலால் அறிகின்றோம். வேழப்பத்தில், இச்செடியின் இயல்பு கூறப்பட்டுள்ளது.

கள்வன்

கள்வன் என்பது நண்டு. இது நீர்வாழ் உயிர்ப் பொருள்களில் ஒன்று. முள்ளிச்செடிகள் நீண்டு வளர்ந்திருக்கும் நீர் பெருகிய வரம்பில், அச்செடிகளின் வேரடியில் வளைதோண்டி உள்ளிருக்கும். இதன் கண்கள் வேப்பம்பூவரும்புபோற் சிறிய உருண்டை உருவமாய் இருக்கும். தாய் சாவச் சேய் பிறக்கும். வள்ளைக்கொடி, அல்லிக்கொடி, பசலைக்கொடி, நெல்—மூளை இவற்றைப் பிளவுபட்ட தன் கால்களாற் கத்தரித்துக்கொண்டு செல்லும். சேற்றில் திரியும். நெற்பூக்களையும், நெற்கதிர்களையும் அறுத்துக் கொண்டுபோய்த் தன் அளைநிறைய வைத்திருக்கும்; சேற்றில் வரிவரியாகத் தன் கால்களாற் கோடிழுக்கும். அதன் வளை குளிர்ந்த இடமுள்ளது. ஆசிரியர் அதற்குத "தண்ணக மண்ணளை" என்று பெயர் இட்டனர். கள்வன் பத்தில், நண்டின் இயலும் செயலும் புலவரும் வியக்கும் வண்ணம் புதுமையாகப் புனைந்து கூறப்பட்டுள்ளன.

எருமை

எருமைகள், ஆம்பல் முதலிய பூக்கள் மலர்ந்திருக்கும் பொய்கையிற்சென்று, காலாலுழக்கிக் கலக்கி நீர் குடிக்கும். பெண்ணும், ஆணும் பேணிக்கலந்து, மரத்து நிழலில் வந்து கண்ணுறங்கும். மேய்ப்பாரின்றி, விடியற்காலையில், கயிற்றாற்கட்டிய கட்டையறுத்துக் கழனியிற் சென்று, நெற்கதிர்



பயிர் மேய்ந்துவரும். பகன்றை மலரைத் தம் கொம்பாற் குத்திக் கொடியுமலரும் கொம்பிலிருக்க, மனைக்கு வரும். தண்ணீரில் நீந்தித் தனித்தனி சென்று தங்கிப் பின்வரும். நிரைநிரையாக நீரில் நீந்தும்போது, ஒவ்வொன்றும் ஒவ்வோர் ஓடம்போல் தோன்றும். முதிர் பலாமரத்தில் முயிற்றுக்கூட்டைத் தம் கொம்புகளால் தாக்கியெடுத்து, நெற்கதிர் தின்ன நினைவோடு வந்து, நெல்லும் முயிறும் கலக்கச்செய்யும். நெறிமருப்பு, தடங்கோடு, கருங்கோடு எனக் கூறும்படி சுருண்டு சுருண்டு, அகன்று கருப்பாகத் தோன்றும் அவற்றின் கொம்புகள். பொய்கையில் நீராடும்போது, மகளிர் மணலிற் பதித்துவைத்த மணிநகைகளைக் காலால் எற்றி மேலே தோன்றும்படி செய்யும் என எருமையின் இயற்கைப் பண்பை இந்நூலாசிரியர் எத்துணை நுணுக்கமாகக் கூறியுள்ளார். ஆய்ந்துநோக்கின், அறிஞர்க்குப் புலவிருந்தாகும் இது.

யாமை, முதலை

மரக்கால்போல் யாமைகள் வடிவந்தோன்றும் எனவும், யாமை இளம்பார்ப்புச் செம்புபோலச் சிவந்து தோன்றும் எனவும், அப்பார்ப்புக்கள் தம் தாய் நோக்கும் நோக்கத்தால் வளர்ச்சியுறும் எனவும், தாய் முதுகில் ஏறித் தாமே யுறங்கும் எனவும், குருகுகள் யாமையைக் கொத்தி அதன் மேல் ஓட்டையுடைத்து உள்ளுறும் தசையைத் தின்னும் எனவும், அவை தின்ற மிச்சிலைக் கறியாகப் பறைத்தொழிலாளர் தம் உணவிற்குக் கூட்டுவார் எனவும் அறிகின்றோம்.

முதலைகள் தம் குட்டிகளைத் தாமே தின்னும் எனவும், பெரிய முழு மீன்களையும் அது தின்னும் எனவும் அறிகின்றோம். இனிக் கருப்பொருள் விளக்கத்தை விடுத்து உள்ளுறை யுவமைகளை ஒரு சிறிது காண்போம்.

## உள்ளுறை யுவமை

இந்நூலில் அமைந்துள்ள உள்ளுறை போல வேறு எந்நூலிலும் அமைந்திருக்கக் காண்கிலம். ஈரடியிலும்

யுள்ளுறை, ஓரடியிலும் உள்ளுறை. மிகச் சுருங்கிய வளவிற் பெருகிய பொருளை உள்ளடக்கி நிற்கின்றன. நுண்மாணுழைபுலம் உடையார்க்கே அவற்றின் அருமை பெருமை விளங்கும். என்போன்றார் அவ்வுள்ளுறைகளை விளக்குவது எளிதன்று. சில சொற்கள் நின்று பலவகையான பொருளைக் காட்டுகின்றன. கண்ணாடி பேருருவங்களைத் தனக்குள் அடக்கிக் காட்டுவது போலப் பெரும் பொருளை யடக்கிக் காட்டுகின்றன. திட்பமாகவும் நுட்பமாகவும் அமைந்திருக்கின்றன. நன்னூலார், "சில்வகை யெழுத்திற் பல்வகைப் பொருளைச், செவ்வ னாடியிற் செறித்தினிது விளக்கித், திட்பம் நுட்பம் சிறந்தன சூத்திரம்" எனக் கூறிய சூத்திர விலக்கணம் இவ்வுள்ளுறைகட்கே யுரிய இலக்கணமாகக் கூறலாம். ஒருபாவில் அமைந்த துறைப் பொருளை விளக்குவதற்கு உள்ளுறை கருவியாகவும், உள்ளுறையை விரிப்பதற்கு இத்துறைப் பொருள் கருவியாகவும் ஒன்றோடொன்றியைந்து நிற்கின்றன. ஒருவன் துறையை யறியாது உள்ளுறை பொருளை யுணரமுடியாது. உள்ளுறையை யுணராமல் துறையை யறிய முடியாது. இரண்டையும் ஒருங்கே சிறிது ஆய்ந்து இன்னது எனத்துணிந்த பின்னர்த்தான் ஒவ்வொன்றையும் விளக்க முடியும். இந்நூற் பழைய வுரையாசிரியர், துறையையும் உள்ளுறையையும் குறிப்பாகச் சிறிது விளக்கி யிருக்கின்றார். அவர் குறிப்புரை யின்றெனில், எவரும் பொருளையும் உவமையையும் எளிதில் உணர முடியாமல், குன்று முட்டிய குரீஇ போலவும், குறிச்சிபுக்க மான்போலவும், வழியறியாது திகைத்து இடர்ப்படுவர். சில உள்ளுறை விளக்கம் காண்போம்.

## முதற் பத்து

முதற்பாவில், "நனைய காஞ்சிச் சினைய சிறுமீன் யாணர் ஊரன்" என்பது உள்ளுறை. அரும்புகளையுடைய காஞ்சி மரத்தின் கிளைகளிற் சிறிய மீன்கள் தங்கியிருக்கும் புதுமை வாய்ந்த மருதநிலத் தலைவன் என்பது பொருள். ஆற்றங்கரையடுத்துக் காஞ்சிமரம் வளர்ந்து நீரிற் படிந்



திருக்கும், மலர் பல கொம்புகளிற் பூத்து நறுமணம் கமழும். அக்கொம்புகளிற் சிறு மீன்கள் துள்ளிவிழுந்து தங்கிப் பின் நீரில் விழும். அதனாற் பூவின் மணமும் மீன் புலால் மணமும் ஒருங்கே கமழும். இத்தகைய சிறப்புடையது மருதநிலம். அதுபோல அந்நிலத் தலைவனும் பரத்தையர் சேரியையடுத்து வாழ்க்கைத் துணையுடன் புகழ் பரவ வாழ்கின்றான். இல்லறம் இனிது நடக்கிறது. பரத்தையர் இடையிடையே தலைவனைப்பற்றி வசப்படுத்திப் பின் பிரிகின்றனர். அதனால் பழியும் புகழும் கலந்து ஊரிற் பரவுகின்றது என்பது விளக்கம். எனவே, தோழி, தலைவனை முன்னிலைப் புறமொழியாக "இங்ஙனம் பரத்தையர் சேர்க்கையாற் பழியுடைய வாழ்க்கையை யொழித்துப் புகழ் பொருந்த வாழ்க" எனத் தலைவனுக்குக் குறிப்பிற் கூறுவதாயிற்று.

நான்காவது செய்யுளில், "பூத்த கரும்பிற் காய்த்த நெல்லிற் கழனியூரன்" என்பது உள்ளுறை. பூப்பூத்து நிற்கும் கரும்பினையும் கதிர்காய்த்து நிற்கும் நெல்லினையும் ஒருங்கே உடைய வயல்களையுடைய தலைவன் என்பது பொருள். கரும்பு சிறப்பாய்த் தோன்றும்; கண்ணுக்கு அழகாகவும் இருக்கும். இனிய சுவையுடையது, பூத்து நிற்கும். பூத்தபின், காயாகிய பயன் விளையாது. நெல் அத்துணைச் சிறப்புடையதன்று. கண்ணுக்கு அழகாகவும் தோன்றாது. இனிய சுவையுடையதும் அன்று. பூத்த மட்டில் நில்லாமல் காய்க்கும் இயல்புடையது. எக்காலமும் உணவுக்குப் பயன்படும். கரும்புபோலப் பரத்தை சிறப்பாகத் தோன்றுவள். கண்ணுக்கு அழகாகவும் இருப்பள். காமவின்பந் துய்ப்பதற்குத் தக்கவள். பூத்தபின் மகப்பேறாகிய பயனைத் தலைவனுக்குத் தரும் உரிமையில்லாதவள். சிலவேளை யின்பந் தருவதற்குமட்டும் தகுதியுடையவள். நெற்போலத் தலைவி அத்துணைச் சிறப்புடையவளல்லள்; கண்ணுக்கு அழகான தோற்றமுடையவளும் அல்லள்; இனிமையாகப் பேசி இன்பந்தரத் தக்கவளும் அல்லள். பூத்தபின் மகப்பேறாகிய பயனைத் தருதற்கு உரிமை யுடையவள். என்றும் இல்லத்திருந்து இன்பந்

தருவாள். இங்ஙனம் மாறுபட்ட பண்புடைய பரத்தையை யும் குலமகளையும் ஒப்பாகக் கொண்டு வாழ்கின்றான் என் பது கருத்து. தோழி தலைமகனை நேரிற் பழித்துக்கூறாது இவ்வுள்ளுறையாற் பழிப்பு அவனுக்குப் புலப்படும்படி கூறி முன்னிலைப் புறமொழியாக அறிவுறுத்தியது இது என வறிக.

## இரண்டாம் பத்து

ஒன்பதாவது செய்யுளில் "எக்கர் மாஅத்துப் புதுப் பூம் பெருஞ்சினை புணர்ந்தோர் மெய்ம்மணங் கமழுந்தண் பொழில் வேழவெண்பூ வெள்ளுளை சீக்கும் ஊரன்" என்பது உள்ளுறை. வண்டலின் நிற்கும் மாமரத்தின் புதிய பூ மலர்ந்த பெருங்கிளைகளால் மணமகளிர் உடல்போல் மணங்கமழும் குளிர்ந்த சோலையின் அரும்பைக் கொறுக் காந்தண்டின் வெள்ளைப் பூவாகிய வெள்ளிய உளைகள் துடைத்துக் கெடுக்கின்ற மருத நிலத் தலைவன் என்பது பொருள். வண்டல் வந்தவுடன் மாமரம் பூத்ததுபோலச் சேணிடைப் பிரிந்த தலைவன் வந்தவுடன் தலைவி இன்பம் நுகர்ந்து வனப்புடன் வாழ்ந்தாள் என்றும், பொழிலிற் பூத்த அரும்புகளைக் கொறுக்கைச்சிப்பூ அருகில் இருந்து உராய்ந்து உதிர்த்துவிட்டதுபோலப் பரத்தையர் தலைவனை நெருங்கி வசப்படுத்தித் தலைவியின் இன்பவாழ்வைக் கெடுத்தனர் என்றும் கொள்க. மாமரத்தில் உள்ள மலரரும்பைத் துடைத்து வனப்பழித்து வறிதாய் நிற்கச் செய்யும் கொறுக்கைச்சிப் பூக்களை மருதநிலங் கொண்டிருப்பது போல், அந்நிலத் தலைவனும் தன் மனைக்கிழத்தியின் மகிழ்ச்சியையும் வனப்பையும் கெடுத்து வறிதே வாடி நிற்கச் செய்யும் பரத்தையர்களைக் கொண்டவன் ஆதலால், நான் இங்ஙனம் வருந்தி நிற்கின்றேன் எனத் தலைவி தோழிக்குக் கூறினள் எனக் காண்க.

## மூன்றாம் பத்து

முதற் கவியில் "முள்ளி நீடிய முதுநீ ரடைகரைப், புள்ளிக் கள்வன் ஆம்ப லறுக்கும், தண்டுறை யூரன்"

என்பது உள்ளுறை. புள்ளிகளோடு கூடிய நண்டு, முள்ளிச் செடிகள் நீண்டுவளர்ந்திருக்கும் பழமையான நீர் பெருகிய வரம்புகளின் பக்கத்திலுள்ள அல்லிக்கொடிகளை யறுக்கும் குளிர்ந்த துறையையுடையவன் என்பது பொருள். நண்டு, தன் வளையில் இருப்பதுபோலத், தலைவனும், தனது மனையில் வாழ்ந்தான். வளையை யடுத்து முள்ளிச்செடி நீண்டு வளர்ந்திருப்பதுபோலப், பாணன் முதலிய பலதியோர்கள், அம்மனையை யடுத்துப் பரத்தையர் சேரியில் வாழ்கின்றனர். வரம்பை யடுத்து வளை யிருப்பதுபோல இல்லமும் சேரியும் இயைந்திருக்கிறது. அவ்வரம்பு பழமையான நீர்ப்பெருக்குடையதுபோல, அச் சேரியும். வழி வழியாக வந்த பரத்தையர்களைக் கொண்டது. ஆம்பல்கள் அடுத்து நெருங்கி வளர்ந்து வருவதுபோலப் பரத்தையரும் தலைவனுடன் நெருங்கி இன்பங்கொள்ள வருகின்றனர். அவ்வாம்பலை அந்நண்டு அறுத்து விடுவதுபோல இத்தலைவனும் இனி அப்பரத்தையர் தொடர்ச்சியை யறுத்துப் பக்கத்தே தங்குவான் என உள்ளுறையை விரித்துணர்க. தோழி தலைவிக்கு நம் தலைவன் இனிப் பரத்தையர் தொடர்ச்சியை யறுத்து நம்பக்கத்திலே தங்குவான் என்பதைக் குறிப்புரல் உணர்த்தினள் எனக் கொள்க.

## நான்காம் பத்து

பத்தாவது கவியில், "கெண்டை பாய்தர வவிழ்ந்த வண்டு பிணி யாம்பல் நாடுகிழ வோனே." கெண்டை மீன்கள் பாய்ந்தபோது மலர்ந்த வண்டுகள் மொய்த்துக் கொண்டிருக்கும் அல்லி மலர்களையுடைய நாட்டிற்குரிய வன் என்பது பொருள். கெண்டை மீன் இயற்கையாகத் துள்ளிவிழ, மலரும் பருவத்தில் அடுத்திருந்த அல்லி யரும்பு மலர, அவ்வாறு மலர்ந்த மலரிலுள்ள தேனைக் குடிப்பதற்காக வண்டுகள் மொய்த்துக் கொண்டன. எனவே, தலைவி இயற்கையாகத் தனித்து நிற்க, மணப் பருவம் வாய்ந்த தலைவன் அவளைக் கண்டு காதலித்துக் கலந்து இன்பம் நுகர்ந்து மகிழ்ந்திருக்க, அங்ஙனம் இன்புற்றிருக்



கும் தலைமகன் பொருளைக் கவர்வதற்காகப் பரத்தையர் பலர் சூழ்ந்துகொண்டனர் என்பது உள்ளுறையாம். இவ்வுள்ளுறையாற் காதற் பரத்தை தனது கருத்தைக் குறிப்பால் விளக்கினள் எனத் தெரிகிறது. தலைவன், தலைவியின் மனைக்கட் சென்று பிரியாது வாழ்வதுதான் நலம் என்பதும், அயற் பரத்தையர் அது குறித்து வருந்துவது தகாது என்பதும், தலைவிதான் முதலில் தலைவனை மகிழ்ந்து இன்பம் நுகர்ந்தவள் என்பதும், அயற் பரத்தையர் பொருள் கருதி அவனை மொய்த்தனர் என்பதும், தனக்கு அவன் பிரிவு குறித்துச் சிறிதும் வருத்தமின்று என்பதும் புலப்படுத்தியவாறாயிற்று.

## ஐந்தாம் பத்து

ஒன்பதாஞ்செய்யுளில் "சின் மீன் சொரிந்து பன்னெற் பெறூஉம் யாணரூர!" என்பது உள்ளுறை. சிலவாகிய மீன்களைக் கொண்டுபோய்க் கொடுத்துப் பலவாகிய நெற் களை வாங்கிக்கொண்டு வருகின்ற புது வருவாயையுடைய ஊர! என்பது பொருள். நின் பாணன் இழிவாகிய சில

சொற்களைப் பரத்தையரிடத்து வழங்கிப் பல வாய்ந்த அப்பரத்தையரை நின்பாற் கொண்டுவந்து

எழில் இன்றான் எனத் தனது கருத்தைத் புணர்க் குறிப்பாற் கூறியவாறாயிற்று.

தலைவி, தலைவனுக்குக்

## ஆறும் பத்து

ஐந்தாவது கவியில், "கரும்பின் எந்திரம் களிற்றெதிர் பிளிற்றும் தேர்வண் கோமான் தேனூர்" என்பது உள்ளுறை. கரும்புகளையரைத்துச் சாறு பிழியும் பொறியின் ஒலியானது யானையின் பிளிறுகின்ற ஒலிக்கு எதிராக ஒலிக்கும் தேனூர் என்பது பொருள். இவ்வுள்ளுறையால், கரும்பு ஆலை ஒலிப்பதுபோல நீ வந்து என்னை வாயில் வேண்டி "யான் இவள் காதலால் உடல் மெலிந்தேன். அன்புடன் என்னைக் கலந்து இன்பமுடன் வாழுமாறு செய்" எனப் பெருங்குரலுடன் புலம்புகின்றாய். நின்

தலைவியோ, நின் குரலுக்கும் மேலாக, "என் காதலன் என்னைக் கருதாமல் விட்டுப் பிரிந்தான். அப்பிரிவினால் எனது நெற்றி பலரும் அறியப் பசந்தது. அவன் இங்கு வருதல் தகாது. அவன் உறவு இனி எனக்கு வேண்டுவ தின்று" என வெறுத்துப் புலம்புகின்றாள். யான் எங்ஙனம் நினக்கு வாயிலாய்ச் சென்று தலைவியை யாற்றி நின்னுடன் கூட்டுவேன், என்று தோழி தலைவனுக்குக் குறிப்பாற் கூறித் தெருட்டினள் என உணர்க.

## ஏழாம் பத்து

பத்தாம் பாவில், "பழனப் பன்மீன் அருந்த நாரை, கழனி மருதின் சென்னிச் சேக்கும், மாநீர்ப் பொய்கை யாணர் ஊர' என்பது உள்ளுறை. நாரையானது வயலி லுள்ள பல மீன்களைக் கொத்தித்

தின்பதற்காகச் செவ்வி

பார்க்கும் நோக்கமுடன் வயலையடுத்துள்ள

மருதமரத்தின்

உச்சியில் தங்கியிருக்கும் பெரிய வளம்

வாய்த்த பொய்

கைகள் சூழ்ந்த புதுமையான நாடு உடையாய்! என்பது பொருள். இவ்வுள்ளுறையால் தலைவனுக்குத் தலைவி தன் உள்ளத்திலுள்ள ஊடலைக் குறிப்பாற் காட்டினள் எனக் கோடல் வேண்டும். நினது நாட்டில் வயலிற் பல மீன்கள் திரியும். அவற்றை ஒவ்வொன்றாகக் கொத்தித் தின்று இன்பமுடன் வாழ நாரை என்னும் பறவை விருப்புற் றிருக்கும். அம் மீன்கள் வெளிவரும் அமையம் அறிவ தற்காக அந் நாரை அவ் வயலையடுத்துள்ள மருத மரத் தின் உச்சியில் அமர்ந்திருக்கும். நினது நாட்டின் இயற்கை இது. அதுபோலச் சேரியிற் பல பரத்தையர் திரிகின்றனர். அவரை ஒவ்வொருவராகக் கலந்து இன்பம் நுகர்ந்து வாழ

நீ விரும்புகின்றாய். அப்பரத்தையர் அமையம் பார்த்துச் செல்வதற்காகவே இங்கு எனது பெரிய உயர்ந்த மனைக்கு வந்து தங்கி யிருக்கின்றாய் நீயும். நினது நாட்டின் இயற்கை போலவே நின் இயற்கைக் குணமும் அமைந் திருக்கிறது. என்மீது காதலுடன் வந்து தங்கி யிருக் கின்றாய் என யான் கருதுவதற்கு இடமில்லை எனக் குறிப்பிற் கூறியவாறு காண்க.



## ஒன்பதாம் பத்து

முதற் கவியில், "குருகுடைத் துண்ட வெள்ளகட் டியாமை, யரிப்பறை வினைஞ ரல்குமிசைக் கூட்டும், மலரணி வாயிற் பொய்கை யூர!" என்பது உள்ளுறை. பறவை யினங்கள் பற்றியிழுத்து ஒட்டையுடைத்து உள்ளிருக்கும் ஊனையுண்டு கழித்த வெள்ளையான ஓடுபொருந்திய ஆமை யின் எஞ்சிய தசையை ஒலிக்கின்ற பறையடிக்கும் தொழி லாளர் தாம் உண்ணும் உணவுக்குக் கறியாகக் கூட்டியுண் கின்ற மலரழகு வாய்ந்த துறையையுடைய பொய்கை சூழ்ந்த மருதநிலத் தலைவ! என்பது பொருள். இதனால், பறவையினங்கள் பற்றியிழுத்து ஒட்டையுடைத்து ஊனைத் தின்றதுபோல, பரத்தையராகிய நாங்கள் தலைவனைக் கவர்ந்து மார்பிற் புண்படும்படி புணர்ந்து முதலில் இன்பம் நுகர்ந்தோம் என்றும், ஊன் கழிந்த ஓடு கிடந்ததுபோலத் தலைவனுடைய மார்பும் அழகழிந்து கிடந்தது என்றும், எஞ்சியிருந்த ஊனை உணவிற்குக் கறியாகப் பறைத்தொழி லாளர் கூட்டுவதுபோல நாங்கள் இன்பம் நுகர்ந்து கழித்த எச்சிலாகிய மார்பைத் தழுவித் தலைவி இந்நாளில் இன்பம் நுகர்கின்றாள் என்றும், பரத்தை தலைவியை அவட்குப் பாங்காயினார் அறியப் பழித்துரைத்தனள் எனக் கோடல் வேண்டும்.

## பத்தாம் பத்து

ஐந்தாவது செய்யுளில், "கருங்கோட் டெருமை கயிறு பரிந்தசைஇ, நெடுங்கதிர் நெல்லின் நாண்மேய லாரும் புனன் முற்றூரன்," என்பது உள்ளுறை. கரிய கொம்பு களையுடைய எருமை, கட்டிய கயிற்றை அறுத்துக்கொண்டு சென்று நீண்ட கதிர்களையுடைய நெல்லில் விடியற் காலத்தே புல் மேயும் வளம்பொருந்திய மருதநிலத் தலைவ! என்பது பொருள். இதனால், தலைவி, வாயில் வந்தார்க்குத் தலைவனது புறத்தொழுக்கத்தைத் குறிப்பாற் புலப்படுத்து கின்றாள். கருங்கோட் டெருமை எனவே, புறத்தொழுக்க முடைய தலைவன் எனவும், கட்டிய கயிற்றை அறுத்துக் கொண்டு செல்லும் எனவே அறிஞர் கூறும் அறவுரை



சொற்பொழிவுகள்

களைக் கேட்டும் அடங்காது புறத்தே செல்கின்றான் எனவும், விடியற்காலத்தில் நெல்வயலிற் புல் மேயும் எனவே பரத்தையர் சேரியிற் சிற்றின்பம் நுகர்கின்றான் எனவும் குறிப்பாற் கூறித் தனக்கு விளைத்த துன்பத்தைப் பின் வெளிப்படையாகவும் கூறியவாறு காண்க. உள்ளுறை விளக்கம் ஒருவாறு முடிந்தது.

முற்றுரை

உலகத்தே உதித்த மக்கள் யாவரும் இம்மையில் அடையும் இன்பங்களிற் சிறந்தது காமவின்பமே. இவ் வின்பத்தைக் குறிக்கோளாகக் கொண்டே மக்கள் வாழ்வை நடத்துவது கண்டோம். எத்துணையோ இடர்ப்பாடு நேரினும், அவற்றைப் பொறுத்து, இல்லறத்தை நல்லறமாக நடத்தி வருவதற்கு இவ் வின்பமே துணைபுரிகின்றது. மெய், வாய், மூக்கு, கண், செவி என்னும் ஐம்பொறி களால் ஊறு, சுவை, நாற்றம், ஒளி, ஒலி என்னும் புலன் களை நுகர்வதே மக்கள் உயிர்க்கு இன்பம் பயப்பதாம். ஓரிடத்தில் ஒரு காலத்தில் ஒரு பொறியால் ஒரு புலனை நுகர்ந்து இன்பமுறும் உயிர்க்கு, ஐம்பொறியாலும் ஐம் புலனையும் நுகர்ந்து ஒருங்கே இன்பம் காணின், அது பேரின்பம் எனப் பேணப்படும் அன்றோ? ஐம்புல நுகர்ச் சிக்கும் இன்பப்பொருளா யமைந்தவர் மங்கையரே. அவர்பாற் கூடிக் கலப்பதுவே பேரின்பமாம். தமிழ் மறை தந்த வள்ளுவரும் "கண்டுகேட் டுண்டுயிர்த் துற்றறியு மைம்புலனும், ஒண்டொடி கண்ணே யுள" என வுரைத் தார்.

இனி, மெய்யுணர்வுடையார், இங்ஙனம் மங்கையரோடு கூடி மகிழும் இன்பம் சிற்றின்பம் எனவும், இறைவனோடு கூடி இரண்டறக் கலந்து இன்புறுதலே பேரின்பம் எனவும் பேசுகின்றனர். ஆயினும், அப் பேரின்பத்தைத் துய்த்து இன்னவாறு இருந்ததென இங்கு வந்து கூறியவர் எவரும் இலர். அறிஞர் பல அளவைகளால் ஆய்ந்து கண்ட முடிவு அது. "கண்டவர் விண்டிலர்," "விண்டவர் கண்டிலர்."

மருதம்

என்னுங் கூற்றளவில் நிற்பதும் அது. சிந்தையும் மொழியும் செல்லா நிலைமைத்து எனக் கூறுது விடுத்தனர் வள்ளுவர் எனக் குறிப்பாக உணரப்படுவதும் அது. கண்கூடாக நாம் காணும் இன்பம் காமவின்பமே. இதனினும் சிறந்த இன்பம் ஒன்று இவ் வுலகில் இல்லையாதலின், இதனையே பேரின்பமெனப் பேசுவதும் பொருந்தும். ஓரறிவுயிர் முதல் ஐயறிவுயிர்வரையுள்ள அஃறிணையுயிர்கள் யாவும் ஆணும் பெண்ணும் ஒன்றுகூடி இன்பம் நுகர்கின்றன. ஆறறிவுயிராகிய மக்களும் அங்ஙனமே இன்பம் நுகர்கின்றனர். உயர்திணையுயிரும் அஃறிணையுயிரும் அடையும் இன்பம் ஒரு தன்மையுடையதாக இருக்குமோ? இராது. உயர்திணையுயிர் அடையும் இன்பம் உயர்வுடையதாயிருக்கும் என்பது ஒருதலை. மனிதன், அறிவு வளர வளரப் புதிய பொருள்களைக் கண்டுபிடித்துத் தன் வாழ்க்கைக்குப் பயன்படுத்துவதுபோல, இன்பத்தைப் பெருக்கவும் எண்ணங்கொண்டான். அதற்குரிய வழிகள், பொருள்கள் செயல்கள் கண்டான். அவற்றுள் ஒன்ருக ஊடலையும் கொண்டார் உயர்ந்த தமிழ்மக்கள்.

காமவின்பத்தை வளர்ப்பதற்கு ஊடல் ஒரு கருவியா யுள்ளது எனக் கற்பித்தனர், தமிழ்மொழிப் புலவர். ஆடவர் — மகளிர் என்ற இரு பாலாரிடத்தினும் ஊடல் தோன்றும் எனினும், முதலில் மகளிர்மாட்டுத் தோன்று வதே வழக்காம். மங்கையர் முதலிற் சில மொழிகள் கூறிப் பிணங்குவதும், அப்பிணக்கத்தை நீக்கக் கருதி ஆடவர் வணங்குவதும், அதனை யறிந்து அன்புடன் இணங்குவதும் கூடி யின்புறுவதும் இயற்கையாகும். ஊடலின்றிக் கூடல் சிறந்த இன்பம் பயவாது; கூடலின்றேற் சிறந்த வின்பம் பயவாது ஊடலும். "ஊடுதல் காமத்திற் கின்ப மதற் கின்பங், கூடி முயங்கப் பெறின்," என்பது வள்ளுவர் வாய்மொழி. "புலவி," "புலவி நுணுக்கம்," என்ற அதிகாரங் களை வகுத்துப் புலவியின் சிறப்புக் கூறி, "ஊடலுவகை," என்ற அதிகாரத்திற் புலவியாற் கல்வி சிறப்படைவதைக் காட்டினார், வள்ளுவர். தொல்காப்பியரும், "புல்லுதன்



மயக்கும் புலவிக் கண்ணும்," "எந்தையர்க் குரைஇன விரத்தற் கண்ணும்," எனச் சூத்திரம் செய்திருப்பது புலவி யின் தொன்மையைப் புலப்படுத்துகின்றது. இது நிற்க.

இனி மகளிர் உள்ளத்தில் முதலிற் புலவி தோன்றக் காரணம் யாது? ஏன் தோன்றியது? எக்காலத்தில் தோன்றியது? என்பதை ஆராய்வோம். நமது தமிழ் நாட்டிற் பரத்தையர் பலர் வாழ்ந்தனர். அவர், தமது ஆடல் பாடல், உடை, நடை, அணி, பணி, எழில், தொழில் முதலியவற்றாற் பொருளுடையவரை மயக்கிப் பொருள் கவர்ந்து கூடிக்கலந்து செல்வ வாழ்விற் செருக்கி யிருந்தனர். செல்வச் செருக்குடைய ஆடவர் பலர், அப் பரத்தையரைக்கண்டு காதலித்து, வேண்டும் பொருள் கொடுத்துப் புணர்ந்துகூடி இன்புற்று இருந்தனர். மனைக் கிழத்தியை மறந்து அகத்தில் வாழாது புறத்தே சென்று பரத்தையருடன் கூடியொழுகுவதால், அது புறத் தொழுக்கம் எனப் பெயர் பெற்றது. தொல்காப்பியர் காலத்துக்கும் முன்னரே புறத்தொழுக்கம் பரவியிருந்தது. ஆதலால், அவ்வொழுக்கம் அறியாத நற்பண்புடைய ஆட வரையும் ஐயுற்றுக் கற்புடைய மகளிர் ஊடுவது இயற்கை யாயிற்று.

தொல்காப்பியத்தில், "தம்மூறு விழுமம் பரத்தையர் கூறினும்," "பரத்தை வாயி லெல்வர்க்கு முரித்தே," "பரத்தையிற் பிரிந்த காலை யான", "மாயப்பரத்தை யுள்ளிய வழியும்," "பரத்தையி னகற்சியிற் பரிந்தோட் குறுகி" எனப் பரத்தையரைப் பல சூத்திரங்களிற் கூறியிருப்பதும் அவர் தொன்மையை விளக்கும். வள்ளுவர், திருக்குறளில், "வரைவின் மகளிர்" என அதிகாரம் வகுத்துக் கூறியிருப்பதும் தக்க சான்றாகும். இன்பத்தை விளக்கும் நூல்களாகிய அகப்பொருளிலக்கணங்களிலும், இலக்கியங்களிலும் பரத்தையர் பெயர் பயின்றுவரக் காணலாம். பரத்தையர் சேரி, பரத்தையர் மறுகு எனச் சிறப்பித்துக் கூறும் வண்ணம் அவர் வாழ்க்கையிருந்தது.

கல்வி, கேள்வி, அறிவு, ஒழுக்கம் உடைய சான்றோரும் மயங்கி, அவர்வலையில் அகப்பட்டுப் பின்னர்த் தெளிந்து சீர்பெற்று வாழ்ந்த வரலாறும் பலவுள. ஆதலின், மகளிர் உள்ளத்திற் புலவி தோன்றியது புறத்தொழுக்கத்தால் எனவும், புறத்தொழுக்கம் நிகழ்வதற்குக் காரணமாக இருந்தவர் பரத்தையர் எனவும், இவ்வொழுக்கம் தொல்காப்பியர் காலத்திற்கு முன்னரே வந்து புகுந்தது எனவும் துணிந்து கூறலாம். வாய்மை சிறக்கப் பொய்ம்மையும், வள்ளன்மை சிறக்கப் பற்றுள்ளமும், உண்மை சிறக்க இன்மையும், பொறுமை சிறக்க வெகுளியும், இன்பம் சிறக்கத் துன்பமும் ஒன்றற்கு ஒன்று மாறாகி இருத்தல் போலக், கற்புடைய மகளிர் சிறக்கக் காரணமாயினர், பரத்தையர். அறிவிற் சிறந்த ஆண்மக்களும் தம் மனைக்கிழத்தி மகப்பேறு பெற்று இன்பவாழ்வுக்கிடமில்லாதபோது புறத்தொழுக்கம் விழைவர் எனவும், அவ்வொழுக்கத்தை வெறுத்துத் தம்பால் வந்துகூடி மகிழும் பொருட்டுக் கற்புடைய மகளிர் கடிந்துரைப்பர் எனவும், கணவன்மேற் பிழையில்லை எனினும் காதல் மிகுதி தோன்றவும் புலந்து கூறுவர் எனவும் அறிகின்றோம். "தாயர் நறியர் நின்பெண்டிர்; பேயனையம் யாம்; சேய்பயந்தனமே" என இந்நூலிற் கூறியிருப்பதும், "நல்லோர்க் கொத்தனிர் நீயிர்; இஃதோ செல்வற் கொத்தனம் யாம்" என அகநானூற்றில் வந்திருப்பதும் பாலனைப் பயந்தபின் புறத்தொழுக்கம் விழைந்ததைக் காட்டும். "எந்நலந் தொலைவதாயினும் துன்னலம் பெருந் பிறர்த்தோய்ந்த மார்பே" என்பதுபோல வரும்பகுதி கடிந்துரைத்துத் திருத்துவதாகும். "பெண்ணியலா ரெல்லாருங் கண்ணிற் பொதுவுண்பர், நண்ணேன் பரத்தநின் மார்பு" என்பதுபோல வரும் பகுதிகள் காதல் மிகுதி தோன்றப் புலந்ததைக் காட்டும்.

தலைவி புலந்தபோது தலைவன் அவள் அடிகளில் வீழ்ந்து வணங்கிப் பிழைபொறுக்கும்படி வேண்டுவது குறைவன்றோ? ஆண்மகன் சிறந்த அறிவுடையவன்; வீர



முடையவன்; பெண் பேதைமையுடையவள்; வீரமில்லாதவள். அங்ஙனமிருந்தும், ஆண்மகன் பணிவு தகுமா? எக்காலத்தில் இவ்வழக்கம் புகுந்தது? இதனாற் பயன் யாது? என வினா எழுதல் இயல்பு. இவ்வினாக்களுக்கும் விடை காண்பாம். ஒத்த கிழவனும் கிழத்தியும் ஆதலானும், வேறுபாடின்றி ஈருடல் ஓருயிராகக் கலந்துவாழ்வதற்கு உரியவர் ஆதலானும், ஒருவரையொருவர் வணங்குவதில் உயர்வு தாழ்வு கருதார் ஆதலானும், பெண்மகளும் ஆண்மகனைத் தெய்வமெனக் கருதிச் சிலவேளை வணங்குவள் ஆதலானும், ஆண்மகனும் புலவி மிகுந்தபோது சிலவேளை வணங்குவதும் பொருத்தமாயிற்று.

தொல்காப்பியர், "கொடுமை யொழுக்கங் கோடல் வேண்டி, யடிமேல் வீழ்ந்த கிழவனை நெருங்கி" எனவும், "தங்கிய வொழுக்கத்துக் கிழவனை வணங்கி, யெங்கையர்க் குரை யென விரத்தற் கண்ணும்" எனவும் சூத்திரஞ் செய்திருப்பதை நோக்குமிடத்துத், தலைவன் பணிவும் தலைவி பணிவும் அவர் காலத்திற்கு முன்னரே பயின்றுவந்த மக்கள் ஒழுக்கமாக இருந்ததுதான் எனக் கண்டோம். அன்று முதல் இன்றுவரையுள்ள இலக்கியங்களிலும் இது இடம்பெற்று நிற்கிறது. இஃது பெருமையெனக் கருதியே புலவர் பெருமக்கள் இதனைப் போற்றிவருகின்றனர் போலும்.

காமவின்பம் கண்டறியாது துறவியாக வாழ்ந்த சிவப்பிரகாசரும் "ஆதிபகவன் றனதூடறணிப் பான்பணிய" என்ற கவியில் சிவபெருமான் உமையின் ஊடல் தணிக்கப் பணிவார் என்றும், அவர் பாதத்தில் விழுவதற்கும் முடியிலுள்ள மற்றைப் பொருள்கள் விழுவதற்கும் அவள் மனமகிழாது மாற்றவளாகிய கங்கை தன் காலில் விழுந்தது கண்டு மகிழ்வாள் என்றும் கற்பித்திருப்பது வியப்பை விளைப்பதாம். இரணியன் முன்னர்த் தூணிலிருந்து நரசிங்கமாக நாராயணன் தோன்றியபோது, பிரகலாதன், இரணியனை நோக்கி, "இவ்வுருவத்தை வணங்கு" என்று கூறினன். இரணியன், "வாளினைத் தொழுவ தல்லால் வணங்குதல் மகளி ரூடல், நாளினும் உளதோ என்று

அண்டங்கள் நடுங்க நக்கான்" என்று கம்பன் கூறுவது மகளிர் ஊடற்காலத்து யாவரும் வணங்குவர் என்ற உண்மையைப் புலப்படுத்துகின்றது. அன்றியும், அவர் "வஞ்சி போன் மருங்கு லார்மாட் டியாவரே வணங்க லாதார்" என்ற பொதுப்பொருள் கொண்டு, மகளிர் கையால் வளைத்தபோது பூங்கொம்புகள் அம்மகளிர் பாதத்தில் மலரைச் சொரிந்து வணங்கின என்ற சிறப்புப்பொருளை முடித்து, உலகியல்பு இதுவென வுணர்த்தினர். மதுரைத் தலபுராணம் ஆகிய திருவிளையாடல் பாடிய பரஞ்சோதி முனிவரும் "இம்பர்வீ டளிக்குந் தெய்வ மகளிரே யென்பார் கூற்றம், வம்பல மெய்யே போலும் வளைக்கையார் வளைப்பத் தாழ்ந்து, கம்பமுற் றடிப்பூச் சிந்தி மலர்முகங் கண்ணீர் சோரக், கொம்பருந் தாழ்ந்த தென்று லுலகியல் கூறற் பாற்றோ" என இவ்வுலகத்தில் முத்தியைத் தரும் தெய்வமென மகளிரைச் சிலர் கூறுகின்றனர் என்றும், அவர் கூறுவது பொய்யல்ல வாய்மையே என்றும், வளையலை அணிந்த கையுடைய பெண்கள் வளைத்தபோது நடுங்கித் தாழ்ந்து பாதத்தில் மலரைச் சொரிந்து மரக்கொம்புகள் வணங்கின என்றும், மரக்கொம்புகளும் வணங்கினவென்றால் உலகியல்பை உரைக்கவும் வேண்டுமோ என்றும் பொருள் விளங்குமாறு பாடியுள்ளார். பெண்களை ஆடவர் வணங்குவது பெருமையெனவே இலக்கியங்கள் பேசுகின்றன. ஊடலை யுணர்த்திக் கூடுவதற்குத் தலைவன் தலைவியின் காலில் வீழ்ந்து வணங்கவேண்டும் எனின், ஊடலின் பெருமையை யுரைக்கவும் வேண்டுமோ? அவ் ஊடலொழுக்கத்திற்கு உரிமையாகிய மருதத்திணையின் பெருமையும் பாராட்டத் தக்கதே. இத்தகைய மருதத் திணையைக் குறித்து விரிவுரை கூறும் பணியை எனக் களித்து என்னைப் பெருமைப்படுத்திய கழகத்தார்க்கு என் நன்றி என்றும் உரித்தாகுக.

ஐ. சொ.—6

## மருதம்

வாழி ஆதன் வாழி அவினி;
நெற்பல பொலிக; பொன்பெரிது சிறக்க;
எனவேட் டோளே யாயே; யாமே,
நனைய காஞ்சிச் சினைய சிறுமீன்
யாணர் ஊரன் வாழ்க;
பாணனும் வாழ்க எனவேட் டேமே.

(க)

கொடிப்பூ வேழம் தீண்டி அயல
வடுக்கொள் மாஅத்து வண்தளிர் நுடங்கு
மணித்துறை ஊரன் மார்பே

பனித்துயில் செய்யும் இன்சா யற்றே.

(கச)

அம்பணத் தன்ன யாமை ஏறிச்
செம்பின் அன்ன பார்ப்புப்பல துஞ்சும்
யாணர் ஊர, நின்னினும்
பாணன் பொய்யன், பல்சூ ளினனே.

(சரு)

மகிழ்நன் மாண்குணம் வண்டுகொண் டனகொல்!
வண்டின் மாண்குணம் மகிழ்நன்கொண் டான்கொல்!
அன்ன தாகலும் அறியான்,
எம்மொடு புலக்குமவன் புதல்வன் தாயே.

(சுo)

---

# நெய்தல்

[வித்துவான், திரு. மு. அருணாசலம் பிள்ளை அவர்கள்]

ஐங்குறு நூற்றின் இரண்டாவது நூறாகிய நெய்தற் றிணையைப் பாடியவர் அம்மூவனார் என்னும் புலவராவர். இவர் சங்கத்துச் சான்றோருள் ஒருவர். மேலைக் கடற் கரையைச் சார்ந்த சேரநாட்டில் இந்நாளிலும் 'அம்மு' என்னும் பெயர் வழங்கி வருதலால், இவரும் அந்நாட்டில் வாழ்ந்தவராகக் கருதப்படுகின்றார். இந்நூலிலுள்ள நூறு பாடல்களே யன்றி, நற்றிணையிற் பத்தும், குறுந்தொகை யிற் பதினொன்றும், அகநானூற்றில் ஆறும் ஆக, மேலும் இருபத்தேழு பாடல்கள் இவரியற்றியனவாக இப்போது நமக்குக் கிடைத்திருக்கின்றன. இவற்றுள்ளும் பெரும் பாலன நெய்தற்றிணைப் பாடல்களேயாகும். இதனால் இவர் நெய்தற்றிணையின் வளங்களையும் ஆண்டு வாழும் மக்களின் ஒழுக்க வழக்கங்களையும் விரித்து விளக்கிப்பாடும் அறி வாற்றலும் ஆர்வமும் உடையவர் என்பதை அறியலாம்.

சேரநாட்டுக் கடற்கரைப் பட்டினமாகிய தொண்டி நகரமும், அதன் உள்நாட்டு நகரமாகிய மாந்தை நகரமும், பாண்டிநாட்டுத் துறைமுகப் பட்டினமாகிய கொற்கையும், நடுநாட்டுத் திருக்கோவலூரும், பெண்ணையாறும் இவர் பாடல்களில் குறிக்கப்பட்டுள்ளன. இதனால், இவர் சேர பாண்டியர் என்னும் முடியுடைப் பெருவேந்தர் இருவ ராலும், மலையமான் திருமுடிக்காரி என்னும் வள்ளலாலும் ஆதரிக்கப் பெற்றவர் என்பதும், இவர் காலத்தில் அந் நகரங்கள் சிறப்புற்றிருந்தன என்பதும் தெரிகின்றன.

முதற்பொருள்

நிலம் - கடலும் கடல்சார்ந்த இடமும்; பொழுது எற்பாடு (ஞாயிறு மறையும் பொழுது).



வரையறை கூறப்படாமையால், பெரும்பொழுது ஆறும் நெய்தற்றிணைக்கு உரியவாயினும், காரும், இளவேனிலும், வேனிலுமே பெரும்பாலும் கொள்ளப்படும்.

## கருப்பொருள்

தெய்வம் - வருணன். தலைமக்கள் - துறைவன், சேர்ப்பன், கொண்கன், புலம்பன், பரத்தி, நுளைச்சி. பொது மக்கள்-பரதவர், பரத்தியர், நுளையர், நுளைச்சியர், அளவர், அளத்தியர். புள் - கடற்காக்கை, நாரை முதலாயின. விலங்கு - சுறு, முதலை. ஊர் - பட்டினம், பாக்கம். நீர் - உவர் நீர்க்கேணி. பூ - அடம்பு, தாழை, நெய்தல் முதலியவற்றின் பூக்கள். மரம் - புன்னை, செருந்தி, ஞாழல், தில்லை, கண்டல் முதலாயின. உணவு - மீன், உப்பு முதலியவை விற்றலால் கிடைக்கும் பொருள்கள். பறை - மீன்கோட்பறை, நாவாய்ப் பம்பை. யாழ் - விளரி யாழ். பண் - செவ்வழிப் பண். தொழில் - மீன் பிடித்தல், உப்பு விளைத்தல், மீனுணக்கல், கடலாடல்.

## உரிப்பொருள்

தலைவன் பிரிந்துழித் தலைவி ஆற்றியிராது, தலைவன் ஏவலிற் சிறிது வேறுபட்டிருந்து, கடலும் கானலும் கழியும் கண்டவிடத்தும், தலைவன் எதிர்ப்பட்டு நீங்கிய வழியும், பொழுதும் புணர் துணைப் புள்ளும் காண்புழியும் இரங்குதல் போல்வன இரங்கலாகும். அக்கடல் முதலியனவும், தலைவன் நீங்குவனவுமெல்லாம் நிமித்தமாம்.

புணர்தல் முதலிய அகவொழுக்கங்கள் எல்லா நிலத்தும் எல்லாப் பருவத்தும் உலகியலாய் நிகழுமாயினும், அவற்றிற்கு இடமும் காலமும் வரையறுத்தது, ஏனையவற்றிற்கில்லாத இயைபுண்மை கருதியேயாம். பிரிவாற்றாமை மீதூர்ந்தவிடத்து உண்டாகும் இரக்கம், எற்பாட்டின்கண், திரைநீர்ப்பரப்பில் இரைதேர்ந்துண்டு சேக்கை



நோக்கித் திரும்பும் சேவலும் பேடுமாகிய புட்களைக் காண்டலால் மிகுமேயன்றிக் குறையாது. இரவிலேனும் அமைதியான சூழ்நிலையிருப்பின், சிறிது கண்ணயர்தல் கூடும். அதற்கும் இடையீடாய்க் கடலலையின் பேரொலி ஓய்வின்றி ஒலித்தலால், மேன்மேலும் இரக்கம் மிகுவதாகும். ஆகவே, இரங்கலுக்கும் கடற்சார்பிற்கும் நெருங்கிய தொடர்புண்டெனக் கொள்ளலாம்.

"தண்கடற் படுதிரை கேட்டொறும்
துஞ்சா ளாகுதல் நோகோ யானே"

(ஐங்குறு : ௧0௭)

என்பதும் இதற்குச் சான்றாகும். ஆகவே, முதல் கரு உரி யென்னும் மூன்றற்கும் ஓரளவு ஒற்றுமை யுண்டெனக் கொள்ளல் பொருத்தமாகும்.

இங்ஙனம் இடமும் காலமும் வரையறுத்து ஓதுதல் நாடகவழக்கென்றும், நாடகவழக்கும் உலகியல்வழக்கும் கலந்து செய்யுட்செய்தல் புலநெறிவழக்கென்றும், இவ்வாறு வரையறுக்கப்பட்ட காலமும் கருப்பொருளும் உரிப்பொருளும் பிறவற்றோடு மயங்கி வருதல் உண்டென்றும் தொல்காப்பியர் கூறுவர்.

இந்நூலிலுள்ள நெய்தற்றிணை, தாய்க்குரைத்த பத்து, தோழிக்குரைத்த பத்து, கிழவற்குரைத்த பத்து, பாணற்குரைத்த பத்து, ஞாழற் பத்து, வெள்ளாங்குருகுப் பத்து, சிறுவெண் காக்கைப் பத்து, தொண்டிப் பத்து, நெய்தற் பத்து, வளைப் பத்து என்னும் பத்துப் பிரிவுகளையுடையது. ஒவ்வொரு பிரிவிலும் பப்பத்துப் பாடல்கள் உண்டென்பதை அப்பெயர்களே உணர்த்துகின்றன. இப் பத்துப் பிரிவினுள்ளும், நெய்தற்கு உரிப்பொருளாகக் கூறப்பெற்ற இரங்கலேயன்றி, இயற்கைப் புணர்ச்சி, இடந்தலைப்பாடு, பாங்கற் கூட்டம், பகற்குறி, இரவுக்குறி, ஒருவழித்தணத்தல், வரைவிடைவைத்துப் பொருள்வயிற் பிரிதல், அறத்தொடுநிற்றல், வரைவுகடாதல், வரைவு மலிதல், வதுவைநிகழ்ச்சி, மகப்பேறு, உடன்போக்கு, பரத்தையிற்பிரிவு, ஊடல், இருத்தல் முதலான ஏனைத் திணைகளுக்குரிய ஒழுக்கங்களும் கலந்து வந்துள்ளன.

## (1) தாய்க்குரைத்த பத்து

அஃதாவது, தோழி, தன் தாயாகிய செவிலிக்குத் தலைவன் தலைவி ஆகிய இருவர் இயல்புகளையும், அறத்தொடு நிற்றல் முதலிய பிறவற்றையும் எடுத்துக் கூறுதலாகும்.

### முதற்பாட்டு

"அன்னை வாழிவேண் டன்னை, உதுக்காண்,
ஏர்கொடிப் பாசடும்பு பரியவூர் பிழிபு
நெய்தல் மயக்கி வந்தன்று, நின்மகள்
பூப்போல் உண்கண் மரீஇய

நோய்க்குமருந் தாகிய கொண்கன் தேரே"

என்பது.

இஃது, ஒத்த அன்புடைய தலைமகனும் தலைமகளும் பிறர் அறியாவாறு மறைவிற் காதலித்து ஒழுகினர். பின்னர், அக் காதல் நிகழ்ச்சியைத் தோழி, செவிலித் தாய்க்கு அறிவித்தாள். அவள் வாயிலாகப் பெற்றோரும் அறிந்து, அத் தலைமகனுக்கே தம் மகளை மணஞ்செய்து கொடுக்க உடன்பட்டனர். அந்நிலையில், சிலகாலம் வேற்றிடஞ்சென்று பொருளீட்டிக்கொண்டு தலைமகளை மணஞ் செய்தற் பொருட்டுத் தலைவன் தேரில் வந்தனன். அதனைத் தோழி, செவிலித்தாய்க்குச் சுட்டிக்காட்டுவதாக அமைந் துள்ளது.

இதன்பொருள் : 'தாயே வாழ்வாயாக; யான் கூறுவனவற்றை விரும்பிக் கேட்பாயாக. நின் மகளுடைய தாமரை மலர்போன்ற மைதீட்டப்பெற்ற கண்களிற் பொருந்திய பசலைநோய் தீர்தற்கு மருந்தாகவுள்ள தலைவன் தேர், அழகிய பசிய அடம்பங்கொடிகள் வருந்த அவற்றின் மேல் ஏறியும் இறங்கியும் நெய்தற் பூக்களைச் சிதைத்தும் வந்தது. அதனைப் பார்' என்பதாம்.

விளக்கம் : தோழி தன் தாயை 'அன்னை' என இருமுறை அழைத்தது, அவள் தன்வயப்பட்டு நின்று தான் கூறுவனவற்றை விரும்பிக் கேட்டற்கு.

யாக' என்றது, நின்மகள் நல்வாழ்வு வாழ்ந்தால் நீயும் வாழ்வாய் என்பதைக் குறிப்பித்தற்கு. "வேண்டு" என்றது, தன் சொல் மறுமைப் பொருட்டு. "நின்மகள்" என்றது, நின் ஆருயிரினுஞ் சிறந்த அரும்பெறற் காதல் மகள் என்றற்கு. "பூப்போல் உண்கண்" என்றது, அவள் இளமைச் செவ்வி நலம் நிரம்பியதோடு செயற்கைப் புனை வும் உடையள் எனக் காட்டற்கு. "உண்கண் மரீஇய நோய்" என்றது, தலைவனைக் கண்ட அளவில் ஊழ்வயத் தால் தலைமகள் உள்ளத்தெழுந்த காதல் வெள்ளம் நிறை என்னும் சிறையையுடைத்துக் கண் வாயிலாக வெளிப்படுவ தாயிற்று என்றற்கு. அதனை "நோய்" என்றது, அளவில் இன்பம் பயத்தற்குரிய தூய காதலும் நோயாகியதே என்னும் இரக்கந் தோன்றற்கு. "நோய்க்கு மருந்தாகிய கொண்கன்" என்றது, உலகத்தில் பிற நோய்களுக்கு வெவ் வேறு மருந்துகள் இருக்கலாம்; ஆனால், "தன்னோய்க்குத் தானே மருந்து" என்றபடி அத்தலைவனால் உண்டாய நோய்க்கு அவனே மருந்தாவன் அன்றி ஏனைய மருந்தும் மந்திரமும் பயன்படா என்று கூறியது. மேலும், சேர்ப்பன் துறைவன் முதலிய பிறபெயர்கள் இருப்பவும் அவற்றுள் ஒன்றுங் கூறாது, நெய்தல்நிலத் தலைவனையும் கொழுநனையும் உணர்த்தும், 'கொண்கன்' என்னும் பெயரால் தலை மகனைக் குறித்தது, அவன் யாவரும் அறிய விரைவில் மணவாளனாவான் என்னுந் துணிவுபற்றி. அடம்பங்கொடி மேல் ஏறியும் இறங்கியும் நெய்தற் பூக்களைச் சிதைத்தும் தேர்வந்தது என்றது, களவுக்கூட்டம் வெளிப்பட்ட பின் பும் வரைந்துகொள்ளாது பிரிந்தான் என்று அம்பலும் அலருங் கூறிய மக்கள் வாயடங்கி வருந்தும்படி வந்தான் என்ற மகிழ்ச்சிபற்றியாம். தேர் வந்தது

என்னுது "வந்தது தேர்" என்றது அவன்
செய்வினை முடித்த செம்மல்
உள்ளம் உடையவனுய் வரைதற்கு வேண்டும் முயற்சியோடு
வந்தான் என்பதும், அவன் வரவு நோக்கியிருந்த தன்

விரைவும் புலப்பட்டற்கு.
சொற்களில் உனக்கு ஐயம்

"உதுக்காண்" என்றது, என்
உண்டாயின் நீயே கண்கூடாகக்
காண என்றற்கு.



இங்ஙனம் பல கருத்துக்களையும்
கொண்ட இப்பாட்டு நெய்தற்கண் புணர்தல்

தன்னகத்தே
நிமித்தமாகிய

குறிஞ்சியொழுக்கம் மயங்கி வந்ததாகும். ஒழுக்கம் குறிஞ்
சிக்கு உரியதாயினும் அடம்பு, நெய்தல், கொண்கன்

என்பன நெய்தற்
யிற்று. மேலும்

கருப்பொருளாதலின் நெய்தற்றிணையா
இவ்வாறு வருதல் காண்க. இப்பத்து

'தாய்க்குரைத்த பத்து' ஆதலின், ஒவ்வொரு பாட்டின் தொடக்கத்திலும் "அன்னை வாழிவேண் டன்னை" என்ற தொடர் வந்துள்ளது. இம்முதற்பத்தில் மற்றொரு செய்யுள்,

"அன்னை வாழிவேண் டன்னை புன்னையொடு
ஞாழல் பூக்குந் தண்ணந் துறைவன்
இவட்கமைந் தனனால் தானே
தனக்கமைந் தன்று இவள் மாமைக் கவினே"
(௧0௩)

என்பது.

மணமக்கள் இருவரும் மணமேடையில் அமர்ந்திருக்கின்றனர். வதுவைச் சடங்குகள் நிகழ்கின்றன. அவ்விருவரும் ஒருங்கியிருக்கும் காட்சியைத் தாய்க்குக்காட்டித் தோழி உவகை எய்துகின்றாள்.

'அன்னையே! புன்னையும் புலிநகக் கொன்றையும் பூத்திருப்பதனால் தட்பமும் வனப்பும் உடைத்தாய் விளங்கும் இக்கடற்றுறைத் தலைவன், நம் தலைமகளுக்கு, குடிப்பிறப்பு உருவம் பருவம் முதலிய நலங்கள் எல்லாவற்றாலும் பொருத்தமுடையவனாக இருக்கின்றான். நம் தலைமகளுடைய மாந்தளிர் போன்ற மேனியின் பேரழகு அவனுக்குப் பெருமகிழ்வு செய்வதாயுள்ளது' என்பன, தோழி உவந்து கூறியனவாகும்.

தோழி, தன் உவகையைத் தாய்க்கு கூறக் காரணம், தான் அறத்தொடு நின்று கூட்டிய தலைவன் எல்லாவற்றாலுந் தகுதியுடையன் என்பதை அறிவித்தற்கேயாம்.

மகளிர் கல்வி, செல்வம், இளமை முதலிய பிற நலங்களெல்லாம் பெற்றிருந்தாலும், கணவர் உள்ளத்தைக் கவர்



தற்குச்
வேணும்

சிறந்த கருவியாகிய தோற்றப் பொலிவு ஓரள
உடையராதல் வேண்டும் என்பது, 'இவள்
மாமைக் கவின் தனக்கு அமைந்தன்று'
கின்றது.

என்பதனால் புலனா

மேலும், மணமக்களுக்குத் தொல்காப்பியர் கூறிய குடிப்பிறப்பு, அப் பிறப்பிற்கேற்ற ஒழுக்கம், ஆட்சித் திறமை, ஆண்டு, உருவம், ஒத்தஅன்பு, நிறை, அருள், உணர்வு, திரு என்னும் பத்தனுள் பொருந்துவன யாவை எனப் பார்த்து மணம் முடித்துவைத்தல் பண்டையோர் முறை என்பதும், இந்நாளிற் பார்க்கப்படும் சாட்டுப் பொருத்தம், பாலுள்ள மரப்பொருத்தம், பகையில்லாத விலங்குப் பொருத்தம் முதலானவை அக்கால வழக்கில் இல்லை என்பதும் இப்பாட்டால் தெரிகின்றன.

ஊழில் நம்பிக்கையுடையவர்கள் நம் முன்னோர். மக்கள் எய்தும் இன்ப துன்பங்களுக்கு அவரவர் முன்னைப் பிறப்புக்களிற் செய்த இருவினைகளே காரணம் என்பதும், அவை தத்தம் பயன்களைத் தர உருப்பெறுங் கால் ஊழெனப் பெயர் பெறும் என்பதும், இம்மையிற் செய்யும் முயற்சிகளெல்லாம் அவ்வூழுக்கு உறுதுணையாய் அமைவனவே என்பதும், அவர்கள் கொண்ட முடிபுக ளாகும். எண்ணமும் முயற்சியும் இல்லாத நிலையில் வரும் இன்பத்துன்பங்களுக்குக் காரணம் வேறு எவ்வாற்றானுங் கூற இயலாமையின் அம்முடிபு பொருத்தமுடையதே யாகும். தொல்காப்பியர் இன்பத்துன்பத்திற்குக் காரண மாகிய இருவினையையும் பகுப்பது ஊழ் என்பதனை "பால்வரை தெய்வம்" (தொல். சொல்-சூ : ருஎ.) என்பத னாலும், ஒரு பிறப்பிற் கணவனும் மனைவியுமாய் இருந்தவர் அவ்வாறே பல பிறப்புக்களிலும் தொடர்ந்து பிறத்தலும் வேறுபடுதலும் உண்டு; இவற்றிற்கு ஏது ஊழின் ஆணையே என்பதனை,

"ஒன்றே வேறே யென்றிரு பால்வயின்
ஒன்றி யுயர்ந்த பால தாணையின்
ஒத்த கிழவனுங் கிழத்தியுங் காண்ப." (தொல். களவு : உ)

என்னும் சூத்திரத்தாலும் கூறியுள்ளார். திருவள்ளுவர் ஊழுக்குத் தனி அதிகாரம் வகுத்து விளக்குகின்றார். இளங்கோவடிகள் தம் காவியத்திற்குக் கருவாக எடுத்துக் கொண்ட பொருள் மூன்றனுள், 'ஊழ்வினை உருத்து வந்து ஊட்டும் என்பதும் ஒன்று. இவ்வாறு பண்டைச் சான்றோர் அனைவரும் பலகால் ஆய்ந்தாய்ந்து உண்டு எனக் கொண்ட ஊழின் முடிபை, அத்துறைபற்றிச் சிறிதும் ஆராயாத நாம், அது கண்மூடித்தனமென்றோ, மூடப் பழக்கமென்றோ கூறி ஒதுக்கிவிடுத்தல் எளிதன்று. ஆனால், ஊழின்படியே எல்லாம் நடக்கும் என, யாவரும் முயற்சி யின்றி இருத்தலும் நன்றாகாது.

இங்கு ஒரு தோழி தன் தாய்க்குப் பின் கூறுகின்றாள்:

வருமாறு

"அன்னை வாழிவேண் டன்னை புன்னை
பொன்னிறம் விரியும் பூக்கெழு துறைவனை
என்னை யென்றும் யாமே இவ்வூர்
பிறிதொன் றாகக் கூறும்
ஆங்கும் ஆக்குமோ வாழிய பாலே"

என்பதுதான் அவள் கூற்று.

தலைமக்கள் இருவர் களவுநெறியிற் கலந்து காதலின் பக் கனி துய்த்து வந்தனர். பின்னர்த் தலைவி களவு வெளிப்படுமுன் அக்காதலனை மணந்து கற்புக்கடம் பூண்டு மனையறம் நடத்த விரும்பினள். அவள் கருத்தறிந்த தோழியும் தலைவன்பால் அடுத்தடுத்து வற்புறுத்து வரைவு கடாவி வந்தாள். ஆயினும், தலைமகன் அம்முயற்சியை மேற்கொண்டானில்லை. அந் நிலையில், தலைமகளைப் பிறன்

ஒருவனுக்கு மணம்பேசிச் சான்றோர் சிலர் வந்தனர். அதன்பின்னும் பெற்றோர்க்கு அறிவியாதிருப்பின் தலைவியின் கற்புக் கெடுதற்கு ஏதுவாகும். ஆதலின், உயிரினும் சிறந்த நாணத்தை விட்டாயினும் கற்பைக் காத்தல் அவர் கடப்பாடாயிற்று. அப்போது தோழி தன் தாய்க்கு, மறைவில் நடந்த நிகழ்ச்சியை வெளிப்படுத்த முற்படுதல் இப் பாட்டிற் கூறப்படுகிறது.

## நெய்தல்

## 91

இதன்பொருள்: "அன்னையே புன்னைமலர்களாற் பொலிவுற்று விளங்கும் துறைவனை எங்கள் தலைவனென்று யாங்கள் கூறிக்கொண்டிருக்கின்றேம். இவ்வூரார் அயலான் ஒருவனை எங்கள் தலைவன் என்று கூறுகின்றனர். ஊழ்வினை அப்படியும் செய்துவிடுமோ? அவ்வாறு செய்வதாயின் அவ் ஊழ் வாழ்வதாக," என்பதாம். "பால் வாழிய," என்பது.

என்றாளேனும் அவ்வாறு செய்வதாயின் அவ்வூழ் கெட்டொழிவதாக என்பது அவள் கருத்து.

கொடுப்பாரும் அடுப்பாரும் இன்றித் தாமே

எதிர்ப் பட்டுக் கூடும்வண்ணம் கூட்டிவைத்த ஊழ், அக் காதலன் அல்லாத அயலான் ஒருவனை மணந்துகொள்ளச் செய்யாது என்ற உறுதிப்பாடு உடையளாயினும், பிறர் வரைவுகருதி வந்தபோதும் பேசாதிருப்பின் தம் காதலை யறியாத பெற்றோர்கள் அதற்கு உடன்படவுங் கூடும் என்ற ஐயுறவால் மறைவெளிப்படுத்தத் தொடங்கினள். "துறைவனை என் ஐ என்றும் யாம்," எனத் தோற்றுவாய் செய்தால் 'அத் துறைவன் யாவன், அவன் உங்கட்குத் தலைவனாதல் எப்படி?' என்று தாய் வினவுவாள். அப்பால் அவள் மனங் கொள்ளுமாறு நடந்த நிகழ்ச்சிகள் அனைத்தையும் கூறலாம் என்பது, தோழியின் எண்ணம். இங்ஙனம் மறை வெளிப்படுத்தலை அறத்தொடு நிற்றல் என்பர்.

தமிழ்க் குலமகளிர் பிறர் அறியாமல் காதல் மணம் புணர்ந்து ஒழுகினராயினும், தம்மாற் காதலிக்கப்பட்டார் ஒருவரையன்றி எக்காரணத்தாலும் மற்றொருவரை மணந்தார் என்ற செய்தி பண்டைத் தமிழிலக்கியங்களில் யாண்டும் பேசப்பட்டதில்லை என்பது ஈண்டு நினைக்கத்தக்கது.

## (2) தோழிக்குரைத்த பத்து

இது, தலைமகள் தன் எண்ணங்களைத் தோழிக்குக் கூறுவதாக அமைந்த பத்துப் பாடல்களையுடையது.

முதற்பாட்டு

"அம்ம வாழி தோழி பாணன்,
சூழ்கழி மருங்கின் நாளிரை கொளீஇச்
சினைக்கயல் மாய்க்குந் துறைவன் கேண்மை
பிரிந்தும் வாழ்துமோ நாமே
அருந்தவ முயறல் ஆற்றா தேமே"

(கக௧)

என்பது, பெற்றோர்கள் தன்னை இற்செறிப்பார் (காவல் மாடத்திலிருத்துவர்) எனக் கேட்ட தலைமகள் வரையாது

வந்தொழுகும் தலைமகன் சிறைப்புறமாக (வேலிக்கு வெளியில்) நிற்கும்போது அவன் செவியிற் படுமாறு தோழிக்குச் சொல்லியதாகும்.

'தோழி, பாணன் விடியற்காலையில் இரைகளையிட்டு உப்பங்கழியில் திரியும் மீன்களைப் பிடித்து மாய்த்தற்கு இடமான கடற்றுறைத் தலைவனது நட்பைப் பிரிந்தும் நாம் உயிர் வாழ்ந்திருப்பேமோ? பிரிந்து உயிர் வாழ்தல் நம்மால் இயலாதே. பிரியாதிருக்க முன்னைத் தவஞ் செய்யாத நாம் இனி என் செய்வேம்,' என்றாள் தலைமகள்.

இதனால், தலைவனை அடுத்தடுத்துக் காண இயலாத வாறு தான் இற்செறிக்கப்பட இருப்பதையும், களவில் நுகரும் இன்பத்தை விரும்பித் தலைவன் வரைந்துகொள்ளாமல் வந்தொழுகுதல் தனக்கு உயிர்க்கிறுதி பயக்கும் துன்பந் தருவதாய் உள்ளதென்பதையும் குறிப்பிற் புலப்படுத்தினாள்.

உண்மைக் காதல் என்பது பிரிக்கப்படாததொரு பிணைப்புச் சங்கிலிபோல்வது. அது பிரிக்கப்பட நேர்ந்தால் காதலர் உயிர்விடவும் துணிவர். உயிர் உடலோடு கூடிவாழ்தல் போல்வது காதலரது பிரியா வாழ்வு. உயிர் உடலைவிட்டு நீங்குதல்போல்வது பிரிவு. இக் கருத்தமைய,

"உடம்போ டுயிரிடை யென்னமற் றன்ன
மடந்தையோ டெம்மிடை நட்பு" (திருக்குறள்: ௧௧௨௨)
"வாழ்தல் உயிர்க்கன்னள் ஆயிழை சாதல்
அதற்கன்னள் நீங்கு மிடத்து" ( ,, : ௧௧௨௪)



எனத் திருவள்ளுவரும், இவ் விரண்டு
சொல்லையும் பொருளையும் தழுவி,

குறட்பாக்களின்

"..............................யாக்கைக்கு
உயிரியைந் தன்ன நட்பின் அவ்வுயிர்
வாழ்தல் அன்ன காதல்

சாதல் அன்ன பிரிவறி யேமே''
(அகம்: உ௩௬)

என அகநானூற்றுப் புலவரும் கூறியிருத்தல் காணலாம்.

இக்காலத்தும் இளங்காதலர்கள் தம் ஒற்றுமைக்கு ஊறு நேருமெனத் தெரிந்தவிடத்து உயிர்க்கொலை செய்து

'கொள்ளுதலைக் காண்கின்றேம் அன்றோ! பற்றியே, 'துறைவன் கேண்மை பிரிந்தும் என்றாள்.
இவ் வியல்பு
வாழ்துமோ'

மேலும், காதலர் பிரியாவாழ்க்கை பெறுதற்கு
முன்னைத் தவம் வேண்டும் என்பது நம் முன்னையோர்
கொள்கை.

பல ஆண்டுகள் கோவலனைப் பிரிந்து வாட்டமுற்
றிருந்த கண்ணகியைக் கண்டு,

"கைத்தாயும் அல்லை கணவற் கொருநோன்பு
பொய்த்தாய் பழம் பிறப்பில்" (சிலப்:
௯: ௫௫-௬)

எனவும்,

"சோமகுண்டம் சூரிய குண்டம்
துறைமூழ்கிக்
காமவேள் கோட்டந் தொழுதார் கணவரொடு

தாமின் புறுவர் உலகத்துத் தையலார்
போகஞ்செய் பூமியினும் போய்ப்பிறப்பர்"
(சிலப்: க: ஙக-கூஉ)

எனவும் தேவந்தி என்பாள் கூறியதும்,

சுரமஞ்சரியின்
வாசனைச்சுண்ணம் தீயதென்று சுரும்பு சான்றாகச் சீவகன்
தெளிவித்த செய்தி கேட்டு, அச் சுரமஞ்சரி என்பாள்,

"என் நறுமணப் பொடியைத் தீதென்ற அச் சீவகன்,
என்னை விரும்பித் தானே வந்து, தன் தவறு பொறுத்தருளு



மாறு பணிமொழி கூறி, என் பாதங்களையும்
ணம் யான் தவம் செய்வேன்" என்பாளாய்,

பணியும்வண்

"மாற்ற மொன்றுரை யாள்மழை வள்ளல்என்
ஏற்ற சுண்ணத்தை ஏற்பில என்றசொல்
தோற்று வந்தென் சிலம்படி கைதொழ

நோற்பன்'............. ...
..............(குணமாலை : சச)

எனக் கூறியதும்,

கானகத்துக் காரிருளில் கைவிட்டுச்
நினைந்து புலம்பும் தமயந்தி,

சென்ற நளனை

"மன்னவனே இப்பிறப்பிற் கண்டு
மணந்திலனேல்
இன்னம் ஒருபிறப்பில் ஆனாலும் ஏழையேன்
தன்னந் தனியே இருந்துதவம் ஆற்றியுமுன்

பொன்னகலம் உள்ளுருகப் புல்லா
தொழிவேனோ"

(நைடதம், பிரிவுறு :கஎ)

எனக் கூறியதும் ஈண்டு நினைக்கத்தக்கன.

இங்ஙனம் ஆசிரியர் பலரும் கருதுதலால், வேண்டிய வேண்டியாங்கு எய்துவிக்கும் தவத்தினை ஈண்டிய காதல் வாழ்க்கைக்கு நாம் இயற்றிலேம் என்பாளாய் இத் தலைமகளும் "அருந்தவ முயறல் ஆற்றா தேமே" என்றாள்.

"அம்ம வாழி தோழி தென்னல்
ஓங்குதிரை வெண்மணல் உடைக்குந் துறைவற்கு
ஊரார் பெண்டென மொழிய என்னை

அதுகேட்(ட) ன்னாய் என்றனள் அன்னை
பைப்பய எம்மை என்றனென் யானே." (ககரு)

இது தலைமகன் சிறைப்புறத்து அவனுக்குக் கேட்கும்படி தலைமகள் சொல்லியது.

நிற்கும்போது

தோழிக்குச்

"தோழி, இவ்வூர்ப்பெண்டுகள் என்னைப்பார்த்து இவள் துறைவனுக்கு (நெய்தல் நிலத் தலைவனுக்கு)ப் பெண்டாட்டி என்று பழித்துப் பேசினர். தலைவனோடு சார்த்திக் கூறப்பட்டமையால் அப் பழிப்புரைகள் எனக்



குப் பாராட்டுரைகளாகவே தோன்றின. அதனால் அப் பெண்டிரை மறுத்து உரையாடாமல் உள்ளத்துள்ளே மகிழ்ந்துகொண்டிருந்தேன். அவர் கூறிய சொற்கேட்ட தாய், 'அம்மா அஃதென்ன பேச்சு; யாரை அப்படிச் சொல்கின்றார்கள்,' என்று உரத்த குரலில் என்னை வினவினாள். தாய்க்குக் கேளாதபடி என்னைத்தான் அவ்வாறு கூறுகின்றார்கள் என்று மெல்லிய குரலில் சொல்லி இன்புற்றேன். நேற்று நம் இல்லத்தில் இவ்வாறு ஒரு நிகழ்ச்சி நடந்தது," என்றாள் தலைமகள்.

இதனால் தன்னுடைய காதலையும், அக்காதலை வெளிப்படக் காட்டிக்கொள்ளாமல் தாய்க்கு அஞ்சவேண்டியிருத்தலையும், யார்க்கும் அஞ்சாமல் உடனுறைந்து இன்புறுதற்கு வரைந்துகொள்ளுதலே சிறந்த வழி என்பதையும், வரைவு நீட்டிப்பின் அலருண்டாம் என்பதையும் தலைமகள் தலைவனுக்கு அறிவித்தாளாயிற்று.

மணஞ்செய்யப் பெறுமுன் தலைவன் எதிர்நின்று தன் கருத்தை வெளியிடுதல் 'செறிவும் நிறையும் செம்மையும்' உடைய குலமகட்கு இயல்பன்றாதலின் இவ்வாறு தலைமகன் சிறைப்புறமாக நிற்கும்போது தோழிக்குக் கூறுவதுபோல அவனுக்குத் தன் கருத்துக்களை உணர்த்தி வரைவுமுயற்சி மேற்கொள்ளுமாறு தூண்டிய நயம் அறிந்து மகிழ்தற்குரியது.

"ஊரவர் கௌவை யெருவாக அன்னைசொல்
நீராக நீளுமிந் நோய்"

(திருக்குறள்: ௧௧௪௭)

என்றபடி உண்மைக்காதல் ஊரார் கூறும் அலரையும் அன்னையின் கடுஞ்சொல்லையும் பொருட்படுத்தாமல் வளருமேயன்றிக் குறைவுபடாது.

"அம்ம வாழி தோழி நாமழ
நீல இருங்கழி நீலங் கூம்பும்
மாலை வந்தன்று மன்ற
காலை யன்ன காலைமுந் துறுத்தே."

(௧௧௬)

இதுவும் தலைவி கூற்று.

'தோழி, நாம் அழும்படியாகக் கூற்றுவன்போன்ற தென்றற்காற்றை முன்னிட்டுகொண்டு உப்பங்கழிகளில் மலர்ந்துள்ள நீல மலர்கள் கூம்புமாறு மாலைப்பொழுது வந்தது. யாம் எவ்வாறு ஆற்றி இருப்பேம்?' எனத் தலைமகனுக்கு அறிவிப்பாளாய்த் தலைமகள் தோழிக்குக் கூறினாள்.

பின்

'குளிரும் பருவத்தே யாயினும் தென்றல், வளிமெயறி மெய்யிற் கினிதாம்' என்று பாராட்டப்படுவது தென்றற்காற்று. அம் மெல்லிய காற்று உலவுதற்கு இடந் தந்து நிற்பது மாலைப்பொழுது. இவ்விரண்டும் வேனில் வெப்பத்தால் வாடி வதங்கிய மக்களாலும் பிறவற்றாலும் மகிழ்ந்து வரவேற்கத் தக்கன. 'மாலை மதியமும், வீசு தென்றலும் வீங்கிளவேனிலும்' பேரின்பம் பயக்கும் இறைவன் திருவடி நீழலுக்கு உவமையாகத் திருநாவுக்கரசரால் எடுத்தாளப்பட்ட பெருஞ் சிறப்புடையன. இவ்வாறிருப்பவும் இளந்தென்றலைக் கூற்றுவனுக்கு ஒப்பாகவும், மாலைப்பொழுதை ஆற்றுதற்கரியதொரு பொழுதாகவும் தலைமகள் கூறியிருப்பது, விரகநோயால் வெதும்புவார்க்கு அவ்விரண்டும் மிக்க துயர் விளைப்பன என்பதை அறிவித்தற்கேயாம்.

"மாலையோ அல்லை மணந்தார் உயிருண்ணும்
வேலைநீ வாழி பொழுது"

(திருக்குறள் : ௧௨௨௧)

என மாலையின் கொடுமை கூறப்படுதலும், 'தென்றலான புலி வந்து கோபமொடு சீறுதே' எனப் பிற்காலத்தார் கூறியதும் ஈண்டு நோக்கத் தக்கன.

"அம்ம வாழி தோழி யான்இன்று
அறனி லாளற் கண்ட பொழுதிற்
சினவுவென் தகைக்குவென் சென்ற னென்
பின்னினைந் திரங்கிப் பெயர்தந் தேனே." (௧௧௩)

இது, பரத்தையிற் பிரிந்துவந்த தலைமகன் தோழி வாயிலாகத் தலைவியின் ஊடலைத் தீர்க்க முயன்றான். அம்முயற்சி பயன் தாராதாயிற்று. அதன்பின் ஆற்றாமை



மீதூரப் பெற்று அவன் நேரே தலைவியிடம் சென்றான். அவனைக்கண்ட அளவில் தனது வெறுப்பும் வெகுளியும் நீங்கிய தன்மையைத் தலைவி தோழியிடங் கூறியதாகும்.

'தோழி, அறத்தைப்பற்றிய நினைவு சிறிதுமில்லாத நம் தலைவனை இன்று யான் கண்டபொழுது சினந்து உரையாடவேண்டும், ஈங்கு வாராதேயெனத் தடுத்தல்வேண்டும் என்றெல்லாம் எண்ணிக்கொண்டு அவனருகிற் சென்றேன். சென்றபின் என்னெஞ்சம் அதற்கு இடந்தாராமையால் பின்பு நிகழ்வனவற்றை நினைந்து இரக்கங்கொண்டு ஒன்றுங் கூறாமல் திரும்பினேன்,' என்றாள்.

இவ்வாறு வெறுப்புற்ற நிலையில் தலைவனை அறனில்லாதவன், அன்பில்லாதவன், கொடியன் என்று கூறலாமெனத் தொல்காப்பியம் விதித்துள்ளது. ஆதலால் தலைவனை 'அறனிலாளன்' என்றாள். தலைவன் பிரிந்திருந்த போது அவனுடைய கொடுமைக் குணங்களை நினைந்து வெறுப்புற்றாலும் அவனைக் கண்ட அளவில் அவன் உவப்பனவேசெய்து உறவுபாராட்டல் குலமகளிர் இயல்பு என்பதனை இப் பாட்டால் உணரலாம்.

இக் கருத்து, இப் புலவர் பாடிய நெய்தற் பாட்டு ஒன்றிலும் வந்துள்ளது.

குறுந்தொகை

"மெல்லிய இனிய மேவரு தகுந
இவைமொழி யாமெனச் சொல்லினும் அவைநீ
மறத்தியோ வாழியென் னெஞ்சே.........
..............................................
தண்கடற் சேர்ப்பனைக் கண்ட பின்னே?"

(௩0௬)

என்பது அப் பாடற் பகுதி.

அஃதாவது, 'நெஞ்சே, ஓசையால் மென்மைத் தன்மையுடையனவும், பொருளால் இனிமை பயப்பனவும், விரும்பத்தக்கனவுமான சொற்களைத் தலைவனிடம் யாம் கூறமாட்டேம் என்று உனக்குச் சொல்லி வைத்திருந்தாலும், அவனைக் கண்டபின் நீ அவற்றை மறந்துவிடுகின்றாயோ,' என்பதாம்.

இதன்கண் மகளிர்கூறும் சொற்கள் இன்னவாறு இருத்தல் வேண்டும் என, ஓரிலக்கணம் வகுத்ததுபோல 'மெல்லிய இனிய மேவரு தகுந' எனக் கூறியிருத்தல் படித்து இன்புறத்தக்கது.

"எழுதுங்கால் கோல்காணாக் கண்ணேபோற் கொண்கன்
பழிகாணேன் கண்ட விடத்து"
(திருக்குறள் : ௧௨௮௫)

எனத் தெய்வப் புலவரும்,

"புலத்தல் கூடுமோ தோழி...
நெஞ்சறை போகிய அறிவி னேற்கே' '
(அகம் : ௨௭)

என, உக்கிரப்பெருவழுதியும் கூறியிருப்பவை நோக்கற்பாலன.

ஈண்டு ஒப்பு

(3) கிழவற்குரைத்த பத்து

அஃதாவது பெதும்பைப் பருவத்தாளாகிய ஒரு பெண்ணின்பால் தலைமகனுக்கு வேட்கை நிகழ்வதாகவும், அவளை இவன் மணந்து கொள்ளுவானோ எனவும் ஐயுற்ற தலைமகள், "காமஞ் சாலா இளமையும் அறியாமையும் உடையாளொருத்தி உனக்கு உறவாந்தன்மையை யுடையள் என்பதனை யாங்கள் அறிந்திலேமோ," எனத் தலைவன்பாற் கூறி, அவன் குறிப்பினை உணர்தலாகிய கருத்தமைந்த பத்துப் பாடல்களையுடையது இப்பகுதி.

இவற்றைப் பரத்தை கூற்றெனவும், தோழி கூற்றெனவும் கூறுதலும் உண்டு. தொகைநூற் செய்யுட்களுக்கு அத் தொகைநூல்களிற் கூறப்படும் கருத்துக்கள் ஒருவகையாகவும், தொல்காப்பிய உரையாசிரியர்கள் கூறும் கருத்துக்கள் மற்றொரு வகையாவும் இருத்தல் உண்டு.

அவை, "தலைவனே, கடல் முள்ளி மலரால் தொடுக்கப்பட்ட மாலை நனையும்படி அலைநீரிற் பாய்ந்து விளையாடுபவளும்" (கஉக)

"தான் அணிந்திருந்த அணிகலம் மணற்குவியலில் வீழ்ந்துவிட அதனைத் தேடியெடுக்கத் தெரியாமல் ஆங்கு வந்த வெள்ளாங் குருகை வினவி நிற்பவளும்" (கஉஉ)

நெய்தல்

99

"தன் தோழிமாரான ஆயத்தார் அலைநீரிற் பாய்ந்து விளையாடுபவளும்"

ஆரவாரிக்கும்படி
(கஉரு)

"தான் வைத்து விளையாடிய வண்டலம்பாவையைக் கடற்றிரை கவர்ந்து சென்றமையால் சினங்கொண்டு மணலை யள்ளித் தூவி அக்கடலைத் தூர்க்க முயல்பவளும், 'மையுண்ட கண்கள் சிவக்குமாறு அழுதுகொண்டு நிற்பவளும்'' (கஉ௪-ரு)

"தன் கண்களைத் தாமரை மலரெனக் கருதி வண்டுகள் மொய்த்தபோது அவற்றை விலக்க முடியாமல் அலை நீரில் மூழ்குபவளும்" (கஉசா)

"தும்பைமலர் மாலையாலும், நுண்ணிய வேலைப்பாடமைந்த அணிகளாலும் குறுக்கு மாராப்புக் கட்டிக்கொண்டிருப்பவளும்" (கஉஎ)

"தீண்டுதற்குரிய தகுதி யில்லாததும் பால் ஊறாததும் ஆகிய தன் இள நகில்களைப் பைஞ்சாய்க்கோரை முதலியவற்றால் செய்யப்பெற்ற பாவையின்வாயில் வைத்து ஊட்டுபவளும் (கஉஅ) ஆகிய ஒருத்தி உனக்கு உறவாந் தன்மையை உடையள் என்பதை யாங்கள் அறியேமோ? அறிந்துள்ளோம்" என்பனவாம்.

பேதும்பைப் பருவத்துப் பெண்ணினுடைய இயல்புகளை,

'ஒள்ளிழை உயர்மணல் வீழ்ந்தென

வெள்ளாங் குருகை வினவு வோளே.'

(கஉஉ)

'வண்டற் பாவை வௌவலின்

நுண்பொடி யளைஇக் கடல்தூர்ப் போளே.' (கஉச)

'தெண்டிரை பாவை வௌவ
உண்கண் சிவப்ப அழுது நின் றோளே.' (கஉரு)

'உண்கண் வண்டின மொய்ப்பத்
தெண்கடற் பெருந்திரை மூழ்கு வோளே.' (கஉசு)

'உறாஅ வறுமுலை மடாஅ
உண்ணுப் பாவையை ஊட்டு வோளே.'' (கஉஅ)



என ஆசிரியர் உள்ளவாறு உணர்ந்து கூறியிருப்பது அறிந்து இன்புறத்தக்கதாம். இப் பத்தில் ஒவ்வொரு பாட்டிலும் ''கண்டிகும் அல்லமோ கொண்கநின் கேளே'' என்பது முதலடியாக வந்துள்ளது. ஈற்றிலுள்ள 9, 10 ஆம் பாடல்கள் கிடைக்கவில்லை.

தலைவன் கூற உணராமல் தான் வேறொன்று கூறி அவன் குறிப்பைத் தலைவி அறிய முற்பட்டது வழுவென்றும், வேட்கை மிகுதியாற் கூறுதலின் அமைதியாயிற்றென்றும் கூறி, இதனை,

'கிழவோன் பிறள்குணம் இவையெனக் கூறிக்
கிழவோன் குறிப்பினை
உணர்தற்கும் உரியள்'
(தொல்-பொருள்: உகூச)

என்னும் சூத்திரத்தில் கைக்கிளைப் பொருளில் வந்த வழுவமைதி என்பர் நச்சினார்க்கினியர்.

## (4) பாணற்குரைத்த பத்து

பாணன் என்பவன் யாழிசைத்துப் பாடுந் தொழில் உடையவன். கற்புக்காலத்தில் தலைவன் தலைவியரிடையே தூதுபோதல் முதலான செயல்களில் இவன் இடம் பெறுதல் உண்டு. இப்பத்தில் பெரும்பாலான செய்யுட்கள் பாணனை முன்னிலைப் படுத்திக் கூறப்பட்டிருத்தலால் இப் பகுதி பாணற்குரைத்த பத்து எனப்பெற்றது.

பரத்தையிற் பிரிந்த தலைமகனால் ஏவப்பட்டு வாயிலாக

வந்த பாணன், தலைமகளை நோக்கி 'தலைவன் நும்மாட்டுப் பெருநட்புடையன்; நுமக்கு நலஞ் செய்யும் கருத்தினன்' எனப் பாராட்டிக் கூறினன். அதுகேட்ட தலைமகள், "பாண, நின் தலைமகன் பரத்தையரைத் தேரிலேற்றிக் கொண்டு யாறும் குளனும் காவும் ஆடித் திரிகின்றான் என்று இவ்வூரிற் பழிச்சொல் எழுந்துள்ளது. இந்நிலையில் அவன் நட்பை நன்றெனக் கொள்ளுதல் எவ்வாறு?

'இல்லை வேலி யிவ்வூர்க்
கல்லென் கௌவை எழாக்கால்... .....
கொண்கனது நட்பு நன்று' (கஉக)



எனக்கூறி வாயில் மறுத்தாள். (தில்லை - கௌவை - பழிச்சொல்.)

ஒருவகை மரம்;

இஃது
கொண்கன்,

ஊடல் நிமித்தமாகிய மருதத் திணையாயினும் தில்லையென்னும் கருப்பொருள்களால் நெய்தலாயிற்று. பின் வருவனவும் அன்ன.

'தலைவனை அவ்வாறு கொடுமை கூறவேண்டா;

அவன் நம்மிடத்தில் பொருள் உடையன்' என்று மீண்டும்
பாணன் கூறினன். "அவர் இவ்வூரில் எங்கும் அலர் தூற்றப்பட்டுள்ளார். எமக்கு அருள் செய்யும் முறை அதுதான் போலும்'' என்றுகூறி அதனையும் தலைமகள் மறுத்தாள். (கரு-உ)

தலைவன் பரத்தையொடு தொடர்பு கொண்டிருப்பதனல், தான் நலன் இழந்ததாகத் தலைமகள் வருந்தவில்லை யென்பதும், ஊரார் கூறும் பழிச்சொல்லுக்கு உள்ளானன் என்பதே அவள் வருத்தத்திற்குக் காரணம் என்பதும், இவ்விரண்டு செய்யுட்களாலும் தெரிகின்றமையால் தலைமகளது 'தகைசான்ற சொற்காக்கும்' புலப்படுவதாயிற்று.

மாட்சிமை

'தலைவன்
மாமைக்கவின்

பிரிந்தபோது அவனேடு சென்ற என்
அவன் மீண்டபோது தானும் உடன்
வந்தது' என்றும் (கரு-ச).

'பிரிவுத் துன்பத்தால் என் உடல் மெலிந்தது. கைவளைகள் கழன்றன. தலைவனுடைய இத்தகாத செயலுக்கு உடந்தையாயிருந்த நீ அதனை மறைத்து அவன் பண்புகளைப் பாராட்டி வறிதே சொற்களைக் கொட்டுகின்றாய். ஆதலால் நீ சிறிதும் நாணமில்லாய்' (கரு-கு) என்றும் பாணனை நோக்கித் தலைவி கூறிய கருத்துள்ள பாடல்களும் இப்பத்திலுள்ளன.

மற்ருருகால், தலைமகன் தன்மனையில் இருந்தான். அவன் அங்கு இருத்தலை யறியாத பாணன், தலைவியின் ஊடல் தீர்க்கும் முறையில் பேசினன். அதனைக் கேட்ட தலைமகள்,



"பண்பிலை மன்ற பாண இவ்வூர்
அன்பில கடிய கழறி
மென்புலக் கொண்கனைத் தாரா தோயே" (கஙஅ)

என்ருள்.
சென்று

அஃதாவது, "பாண! நீ தலைவனிருக்குமிடஞ் அன்பில்லாத கடிய சொற்களைக் கூறியாயினும்,

அவனை இங்கு அழைத்துவந்தாயில்லை. கத்துப் பண்பை அறியாய்" என்பதாம்.

அதனல் நீ உல
இது பாணனெடு
நகையாடிக் கூறியது.

தலைமகன் வந்து அளவளாவிப் பிரிந்தபின் அவனுடைய முன்னைத் தவறு நினைந்து உடல் வேறுபட்டாள் தலைமகள். இவ் வேறுபாட்டிற்குக் காரணம் யாது? என்று பாணன் வினவினன். "பாணனே உன்னையொன்று கேட்கின்றேன். உங்கள் தலைவனை விரும்பினவர் யாரேனும் தொல்கவின் தொலையாமல் இருப்பார்களோ? கூறுவாயாக" என்று தலைவி கூறினள்.

'நின்னொன்று வினவுவல் பாண நும்மூர்த்
திண்டேர்க் கொண்கனை நயந்தோர்
பண்டைத் தந்நலம் பெறுபவோ மற்றே'

(கஙஎ)

என்பது அப்பாட்டாகும்.

## (5) ஞாழற் பத்து[1]

"எக்கர் ஞாழல் செருந்தியொடு கமழத்
துவலைத் தண்டுளி வீசிப்
பசலை செய்தன பனிபடு துறையே"

என்பது இப்பத்தின் முதற் செய்யுள்.

'நின்னை வரைந்து கொள்ளுதற்குப் பொருளீட்டி வருதற்பொருட்டே தலைமகன் பிரிந்திருக்கின்றான். நீ ஆற்றாமை கொள்வது என்?' என்ற தோழியை நோக்கி 'நான் ஆற்றியிருக்கின்றேன். புலிநகக்கொன்றையும் செருந்தியும் பூத்துப் புதுமணங் கமழும்படி இக் குளிர்ந்த

1. ஞாழல்: புலிநகக் கொன்றை; நெய்தற் கருப்பொருள்.

கடற்றுறை, துவலைத் தண்டுளி சிதறிப் பசலை செய்தன' என்று தலைவி கூறினள்.

தலைவன் வரைவொடு வந்தான் என்பதை அறிந்த தலைமகள், 'வரைந்து கொள்ளுமாறு பலமுறை வற்புறுத்தவும் வரையாது வந்து ஒழுகுந் தலைவன், நம்மை எவ்வாறு எண்ணினனோ என ஐயுற்றிருந்தேன். அவன் அன்பு, முறையாக நிரம்பி வெளிப்பட்டது; இனி என் மாமைக் கவின் தலைவனுக்கு உறுதியாய் இன்பஞ் செய்வதாகும்' என்பாள் துறைவற்கு, 'இனிய மன்றஎன் மாமைக் கவினே' (கசசு) என்று மகிழ்ந்து கூறினள்.

மகட்பெற்றோர் விரும்பியவாறு பரியப்பொருள் கொடுத்துப் பெண்ணை மணஞ் செய்தல் உண்டென்பதும், அப்பொருள், கொள்வோரும் கொடுப்போரும் ஆகிய இரு திறத்தாருடைய தகுதிக்கும் விருப்பத்திற்கும் ஏற்றவாறு இருக்குமென்பதும் இற்றை நாளிலன்றிப் பண்டும் வழக்கிலிருந்தன. இதனை,

' சான்றோர் வருந்திய வருத்தமும் நமது
வான்றோய் வன்ன குடிமையும் நோக்கித்
திருமணி வரன்றுங் குன்றங் கொண்டிவள்
வருமுலை யாகம் வழங்கினோ நன்றே
அஃதான்று,

அடைபொருள் கருதுவி ராயிற் குடையொடு
கழுமலந் தந்த நற்றேர்ச் செம்பியன்
பங்குனி விழவின் வஞ்சியோடு

உள்ளி விழவின் உறந்தையும் சிறிதே'

என்பதனால் அறியலாம்.

இங்கு இந் நெய்தற்றிணையில்,

"எக்கர் ஞாழல் மலரில் மகளிர்
ஒண்டழை யயருந் துறைவன்
தண்டழை விலையென நல்கினன் நாடே" (கசஎ)

என்பதனால் அக் கருத்துக் கூறப்படுகின்றது.



அஃதாவது 'மணற்பாங்கில் வளர்ந்த புலிநகக்கொன்றையில் மலர் இல்லையாயின் அதன் அழகிய தழைகளைக் கொய்து உடையாகப் புனைந்து மகளிர் விளையாடுந் துறையையுடைய தலைவன், உனக்குத் தழையுடையின் விலையாகத் தனது நாட்டை நல்கினான்' என்று உவந்த உள்ளத்தளாய்த் தோழி தலைமகட்குக் கூறினாள்.

இதில் ஞாழல் மலரில்லாதபோது அதன் தழையை விரும்புவர் என்றதனால் உலகத்தையே கொடுக்கும் உள்ளமுடைய தலைவன் அஃதில்லாமையால் நாட்டைக் கொடுத்தான் என்ற நயமும் புலனாகின்றது.

## (6) வெள்ளாங் குருகுப் பத்து

வெள்ளாங் குருகு என்பது நெய்தல் நிலத்து வாழும் ஒருவகைப் பறவை. இப் பத்துப்பாடல்களிலும் கூறப்படுவன தலைவனது புறத்தொழுக்கத்தை வெறுத்துரைக்கும் ஊடற் பகுதிகளேயாயினும், கருப்பொருளாகிய வெள்ளாங் குருகினை முதலாகக் கொண்டு கூறப்பட்டிருத்தலால் அவை நெய்தற்றிணையாயின. ஊடற் கூற்றுகளிலிருந்து தலைமகளது ஆற்றாமை மீக்கூர்தலால் ஆய இரக்கமும் தோன்றுவதாயுள்ளது.

"வெள்ளாங் குருகின் பிள்ளை செத்தெனக்
காணிய சென்ற மடநடை நாரை
மிதிப்ப நக்க கண்போல் நெய்தல்
கட்கமழ்ந் தானுத் துறைவற்கு
நெக்க நெஞ்சம் நேர்கல் லேனே." (கடுக)

இம் முதற்பாட்டு, பரத்தையிற் பிரிந்துவந்த தலைவன் பொருட்டு வாயில்வேண்டிய தோழிக்குத் தலைவி வாயில் மறுத்துக் கூறியது.

"தலைமகன் ஒரு பரத்தையினிடம் நட்புக்கொண்டான். இருவரும் கலந்து ஒழுகினர். அவ்வொழுக்கம் ஏதோ ஒரு காரணத்தால் இடையறவுபட்டது. அவளது ஊடல் தீர்த்தற்காக அவன் சிலரை வாயிலாக விடுத்தான். அவர்



கள் சென்று நெருங்கிக் கூறிய சொற்களால்

நெகிழ்ந்து, அப்பரத்தை கூறிய காதலுரைகள் இவ்வூர் முழுதும் பரவி அலராயிற்று என்று இவ்வூரவர் கூறும் பழிச்சொற்களைக் கேட்டு உடைந்த உள்ளமுடையேனாகிய யான், அத்தலைவன் ஈண்டு வருதற்கு உடன்படேன்," என்று தலைமகள் தோழிக்கு வாயில் மறுத்துக் கூறினாள்.

இதில் 'வெள்ளாங்குருகு' என்றது பரத்தையாகவும், 'பிள்ளை' என்றது தலைவனுக்கும் அவளுக்கும் உள்ள ஒழுக்கமாகவும், 'செத்து' என்றது அவ்வொழுக்கம் இடையறவுபட்டதாகவும், 'காணிய சென்ற மடநடை நாரை' என்றது, அவளது ஊடல் தவிர்க்கச் சென்ற வாயில்களாகவும், 'மிதிப்ப' என்றது, அவர்கள் நெருங்கிக் கூறியதாகவும், 'நக்க........நெய்தல்' என்றது, அவ்வாயில்கள் கூறிய சொற்களால் நெகிழ்ந்த அவள் நெஞ்சமாகவும், 'கட்கமழ்ந்து ஆனாது' என்றது, அவள் அவர்க்குக் கூறிய ஆர்வ மொழிகள் எல்லோர்க்கும் தெரிந்ததாகவும் கொள்ளும்படி உள்ளுறையுவமத்தால் பொருள் புலப்படுத்தித் தலைமகள் வாயில் மறுத்தாள். வெளிப்படையாகக் கூறத்தகாத கருத்துக்களை இங்ஙனம் மறைமுகமாகப் புலப்படுத்தற்கே உள்ளுறை உவமம், இறைச்சி முதலாயின அகத்திற் பயின்று வருவனவாயின. இப்பிரிவிலுள்ள பத்துப் பாடல்களும் இவ்வாறே உள்ளுறை உடையனவாகும். இதனையடுத்துவரும் ஒன்பது பாடல்களிலும் இப்பாட்டிலுள்ள முதல் இரண்டடிகளும் வந்துள்ளன.

தலைமகள் உள்ளுறை யுவமங் கூறுங்கால், அவள் உறையும் நிலத்தில் உள்ளனவும், அவற்றுள்ளும் அவளால் நன்கு அறியப்பட்டனவுமாய கருப்பொருள்களைக் கொண்டே கூறுதல்வேண்டும் என்ற விதி பிறழாமல், அவளால் அடுத்தடுத்துக் காணப்படுவனவாகிய, குருகு நாரை நெய்தற்பூ என்னும் நெய்தற் கருப்பொருள்களைக் கொண்டே, தன் கருத்தை வெளிப்படுத்தியதாகச் செய்யுள் யாத்த அம்மூவனார் திறன் அறிந்து இன்புறுதற்குரிய தொன்றும்.

## 106

## ஐங்குறுநூற்றுச் சொற்பொழிவுகள்

தலைமகள் இவ்வாறு வாயில் மறுத்தவிடத்து, 'தலைவன் நின்பால் அன்பிற்குறைவிலன், அருளும் உடையன். ஆதலால் நீ அவனோடு புலத்தல் தகாது' என்று தோழி நெருங்கிக் கூறினளாக,

> "துறைவன் வரையும் என்ப
> அறவன் போலும் அருளுமா ரதுவே"

(கருஉ)

என்று தலைமகள் மறுத்துக் கூறினள்.

அஃதாவது, 'அச் சேரிப்பரத்தையைத் தனக்கு இற் பரத்தையாகத் தலைவன் மணஞ்செய்வான் என்று இவ் ஊரார் கூறுகின்றனர். ஆதலால் நீ சொல்லுகின்றபடி அன்பும் அருளும் என்பால் உடையனல்லன்; அப்பரத்தை பால் அன்புடையன். அவளை மணந்து மனையறம் நடத்து வான் போலும். அவன் செய்யவேண்டிய அருளும் அது தானே?' என்று கூறி வாயில்மறுத்தாள்.

பல வழியாலும் வாயில் மறுத்த தலைமகளைப் பிறிதோ ராற்றால் உடன்படுவிக்கக் கருதிய தோழி, 'மகப்பேற்றிற் குரிய காலத்தை வறிதே போக்குகின்றனை. இது தகுமா?' என்றாள்.

'துறைவற்குப்,
பைஞ்சாய்ப் பாவை யீன்றனென் யானே'

என்று கூறி அதனையும் தலைமகள் மறுத்தாள்.

அஃதாவது 'முன்பே (களவுக்காலத்தில்) தண்டாங் கோரையால் செய்யப்பெற்ற (விளையாட்டு) பாவையைப் பெற்றுவிட்டேன். இனித் துறைவனுக்குப் பெறவேண்டும் மகப்பேறு வேண்டா' என மறுத்தாள்.

தலைவனது புறத்தொழுக்கத்தால் புழுங்கிய உள்ளம் உடையளாயினமையால், மனைவாழ்க்கையின் நன்கல மாகிய மகப்பேற்றினையும் தலைமகள் வெறுத்தாளாயிற்று. 'நண்ணேன் பரத்தநின் மார்பு' என்று வள்ளுவர் காட்டிய மடமங்கை கூறிய வாய்மொழியும், 'தீண்டுவீ ராயின்

எம்மைத் திருநீல கண்டம்' என்று கூறிய சேக்கிழார் காட்டிய தெய்வக் குலமகளின் மனஉறுதியும் ஈண்டு ஒப்பு நோக்கற்பாலன.

தலைமகனால் ஏவப்பெற்றார் சிலர், தலைமகள்பாற் செல்லாமல் தோழியை வாயில் வேண்டியவிடத்து 'இவள் மேல் அவன் காதலன் என்று நீங்கள் கூறுவது உண்மையே; நான் ஏற்றுக்கொள்கிறேன். ஆனால் எங்கள் தாய் போன்றவளான தலைமகள் மனத்திற்கு அஃது ஒவ்வாது,' என்பாளாய், 'எனக்கோ காதலன் அனைக்கோ வேறே' (கறுசு) என்று கூறித் தோழியும் வாயில் மறுத்தாள்.

பழிநாணும் பண்படையளான தலைமகள், வாழ்க்கை இன்பத்தைத் துறந்து மகப்பேற்றினையும் வெறுத்துரைக்கும் மனநிலை பெற்றிருக்கும்போது, அவள்பாற் சென்று கூறுவனவெல்லாம் வெறும் ஆரவார நீர்மையவாய் அழிந்தொழியுமன்றிப் பயன்படா என்று கருதிய தோழி, தன்பால் வாயில்வேண்டி வந்தாரை மறுத்துரைத்த அறிவுத் திறம் பாராட்டற்குரியது.

## (7) சிறுவெண்காக்கைப் பத்து

கடற்கரையை அடுத்து வாழும் காக்கைப்புள் உருவத்திற் சிறிதாயும் கழுத்தின் உட்புறம் சற்று வெளிதாயும் இருத்தல்பற்றிச் சிறுவெண் காக்கை எனப்பட்டது. இப் பிரிவிலுள்ள பாடல்கள் பத்தும் "பெருங்கடற் கரையது சிறுவெண் காக்கை" என்ற

முதலடியைப்பெற்று வந்

துளளன.

"பெருங்கடற் கரையது சிறுவெண் காக்கை
கருங்கோட்டுப் புன்னைத் தங்கும்
துறைவற்குப்
பயந்து நுதல் அழியச் சாஅய்
நயந்த நெஞ்சம் நோய்ப்பா லஃதே"
(கசுக)

என்னும் இப் பாட்டு, தலைவன் ஒருவழித் தணந்துழி ஆற்றுவிக்குந் தோழிக்குத் தலைமகள் ஆற்றாளாய்ச் சொல்லியது.



அஃதாவது, களவொழுக்கம் நீட்டித்தவிடத்து அம்பலும் அலரும் உண்டாயின. அப் பழிச்சொற்கள் அடங்குமாறு தலைமகன் சின்னாட்கள் வேற்றிடஞ் சென்றிருந்தான். இஃது ஒருவழித் தணத்தல் எனப்படும். அப்போது பிரிவாற்றாமையை ஆற்றுவிக்கும் தோழிக்குத் தலைமகள் கூறியதாகும்.

'பெரிய கடற்கரையின் கண்ணதாகிய சிறுவெண் காக்கை, கரிய கிளைகளையுடைய புன்னைமரத்தில் தங்கியிருக்கும் துறையையுடைய தலைவன்பொருட்டுப் பசலை பூத்து நெற்றியும் அழகழியும்படி மெலிந்தும், மீண்டும் அவனையே நச்சியிருக்கும் என் நெஞ்சம் துன்பத்திற்குக் காரணமான தீயூழையுடையது,' என்றாள்.

'சிறுவெண் காக்கை புன்னையில் தங்கும்,' என்றது, தலைவன் வரைதற்கு வேண்டுவன முயலாது மணக்கண் தங்குவான் என்பதனை யுணர்த்திற்று. பசலை என்பது பிரிவாற்றாமையால் உண்டாகும் நிறவேறுபாடு. பிரிவினால் உடல் மெலிவும் பசப்பூர்தலும் மேனி யழகிழத்தலும் உண்டாவனவாம். மகளிர்க்கு நுதல் ஒளியுடையதாதல் பேரழகினை யுணர்த்தும். 'ஒண்ணுதல்' எனப் பலரும் எடுத்தாளுதல் காணலாம்.

"பசக்கமற் பட்டாங்கென் மேனி நயப்பித்தார்
நன்னிலைய ராவ ரெனின்"

(திருக்குறள் : ககஅக)

என்றபடி 'என்மேனி பட்டதுபடப் பசந்தாலும் மெலிந்தாலும் குற்றமில்லை, அவன் நம்மை நயந்து வரைய முயல்வானாயின். அங்ஙனம் ஒரு முயற்சியும் மேற்கொள்ளாமல் மணக்கண் வறிதே தங்கியிருப்பவனைத் தானே விரும்பும் நெஞ்சம் தீவினைப் பாலதே,' எனத் தன் நெஞ்சைத் தன்னின் வேறாகக்கொண்டு வருந்திக் கூறினாள்.

'சேயள் அரியோட் படர்தி
நோயை நெஞ்சே நோய்ப்பா லோயே'

என்ற குறுந்தொகைப் பாடற் (கஉஅ) கருத்தோடு இது ஒற்றுமையுடையது.

## நெய்தல் 109

'தலைவன், தனக்கு இனியவர் கூறுஞ் சொற்களைக் கேட்டு முயற்சியின்றி யிருப்பான்,' என்பதனை,

"..........................சிறுவெண் காக்கை
இருங்கழித் துவலை ஒலியிற் றுஞ்சும்,
துறைவன்" (கசுநு)

என்பதனுலும்,

'வரைவிற்கு வேண்டுவன முயலாது தன் செய்து மனைக்கண்ணே தங்குவான்,' என்பதனை,

கருமஞ்

"......................சிறுவெண் காக்கை
நீத்துநீர் இருங்கழி இரைதேர்ந் துண்டு
பூக்கமற் பொதும்பர்ச் சேக்கும்"
(கசுசு)

என்றதனுலும் ஒருவழித்தணத்தற்கண் தலைமகள் உள்
ளுறையாகக் கூறியுள்ளாள்.

இனி, கற்புக்காலத்துத் தலைமகனுக்குப்
கம் உளதாகிய வழி,
புறத்தொழுக்

"பெருங்கடற் கரையது சிறுவெண் காக்கை
இருங்கழி மருங்கின் அயிரை யாரும்
தண்ணந் துறைவன் தகுதி
நம்மோ டமையாது அலர்பயர் தன்றே"
(கசுசு)

எனத் தலைமகள் வருந்திக் கூறினுள்.

‘காக்கை உப்பங்கழியில் உலாவும் பலதிறப்பட்ட மீன்களில் அயிரை மீனை யருந்தும்,’ என்றது, ‘தலைமகன் பரத்தையருள்ளும் இழிந்த மகளிரை விரும்புவான்,’ என்பதையும், ‘தகுதி’ என்றது, குறிப்பால் அவனது தகுதியின்மையையும், ‘நம்மோடு அமையாது அலர் பயந்தன்று,’ என்றது, ‘நமக்குத் தீமை செய்தலேயன்றி அவனுக்கும் பழியுண்டாக்கிற்று,’ என்பதையும் உணர்த்தின. இதனால், தலைமகளது மனைமாட்சியையும் மனநிலையையும் நன்கு அறியலாம்.

பரத்தையிற் பிரிந்த தலைமகனால் ஏவப்பட்டு வாயிலாய் வந்தார் சிலரிடத்துத் தோழி தலைமகனது கொடுமை கூறி இயற்பழித்தபோது தலைமகள் கூறுவது நோக்கற்பாலது.



“பெருங்கடற் கரையது சிறுவெண் காக்கை
இருங்கழி யினக்கெடி றாருந் துறைவன்
நல்குவன் போலக் கூறி
நல்கா னாயினும் தொல்கே ளன்னே” (கசஎ)

என்பதனால், 'தலைமகன் நம்மைப் பிரியாமலிருந்து நமக்கு அருள்செய்வான்போல் முன்பு கூறினான். கூறியபடி செய்தானில்லை. ஆயினும் அவன் நமக்குப் பழைய நண்பினனாவான்; மேலும், காக்கைப்புள் தனக்கு உண்டாகும் துன்பங் கருதாது முட்களையுடைய கெடிற்று மீன்கள் பலவற்றை யருந்தினாற்போல, இவனும் தனக்குவரும் வருத்த மறியாமல் பரத்தையர் பலரையும் நுகர்ந்து திரிகின்றான். அப்பழமை கருதி அன்பு பாராட்டலும், அவனுக்கு வர இருக்கும் துன்பங் கருதி வருந்துதலும் செய்யாமல் நீ பழித்துரைத்தல் தகாது,' என்று தனது பெருந்தன்மையும் இரக்கமும் தோன்றத் தலைமகள் கூறினாள். இஃது,

"அழிவந்த செய்யினும் அன்பறார் அன்பின்
வழிவந்த கேண்மை யவர்"
(குறள்: ௮0௭)

என்னும் மறைமொழிக்கு ஒரெடுத்துக்காட்டாய் விளங்குகிறது.

அயலானொருவனுக்கு மணம்பேசிச் சிலர் வந்தனர். அதுகண்ட தலைமகள் உணவு உட்கொள்ளாமல் வாட்டமுற்றிருந்தாள். இதற்குக் காரணமென்னையென்று வினவிய செவிலித்தாய்க்குத் தோழி அறத்தொடு நின்றதாகப் பின் வருஞ் செய்யுள் அமைந்துள்ளது.

"பெருங்கடற் கரையது சிறுவெண் காக்கை
துறைபடி யம்பி யகமணை யீனும்
தண்ணந் துறைவன் நல்கின்
ஒண்ணுத லரிவை பாலா ரும்மே." (கசுஅ)

அஃதாவது, இனிப் பயன்படாதென்று ஒதுக்கப் பட்டுக் கடற்றுறையருகிற் கிடக்கும் ஓடத்தின் உட்புறத்தி லுள்ள மரக்கட்டையில் காக்கைப் புள் முட்டையிடுதற்கு

நெய்தல்

111

இடமாகிய துறைவன், தண்ணளி செய்தால் தலைமகள் பாலருந்துவாள்,' எனக்கூறித் தலைமகனோடு தலைமகளுக்கு

உண்டாகிய நட்பைப்
மறுத்தும் தோழி

புலப்படுத்தியும், வேற்றுவரைவை
அறத்தோடு நின்றாள். காக்கை

"அகமணையீனும்," என்றதனால், 'யார்க்கும் எவ்விடத்தும் தீங்கு பயவாத துறை,' என்று அவன் (தலைமகன்) சிறப்பும் கூறியதாயிற்று.

நற்றிணைப் பாடல் ஒன்றிலும் 'கணங்கொள் உமணர் உயங்குவயி னொழித்த - பண்ணழி பழம்பார் வெண்

குருகினும் - தண்ணந்துறைவன்' என இப்புலவர் கூறி யிருத்தலால், நெய்தல் நிலத்தில் நெடுநாட் பழகி ஆங்காங் குள்ள இயற்கைகளை இவர் நன்கு அறிந்தவர் என்பது தெரிகிறது.

(8) தொண்டிப் பத்து

சேரநாட்டுத்
என்னும் நகரத்தின்

துறைமுகப்பட்டினமாகிய தொண்டி
பெயர், ஒவ்வொரு பாட்டிலும் கூறப்

படுதலால் இது
இப்பிரிவிலுள்ள

தொண்டிப்பத்து எனப் பெயர்பெற்றது.
பாடல்கள் பத்தும் அந்தாதித் தொடை

யாக அமைந்திருத்தலோடு
தொடர்பும் பெற்றுள்ளன.

அகப்பொருட் கிளவித்

குற்றேவல் மகளிரும் தோழியரும் புடைசூழ ஒரு குளிர் பூஞ்சோலைக்கண் தலைமகள் விளையாட்டின் நிமித்தம் வந்தாள். பூக் கொய்யவும், தழையுடை புனையவும், புன்னைமரக் கிளையில்தொடுத்த ஊசலாடவும், அலவு னாட்டவும், அலைநீரில் மூழ்கவும் தோழியர் பலரும் பிரிந்த னர். தலைமகள் தனித்துநின்றாள். கூர்வேல் இளைஞர் பலரொடு வேட்டையின் பொருட்டுக் காட்டிற்கு வந்த தலைமகன் ஒருவன், உடன் வந்தார் பலரையும் விட்டு ஒரு மானைத் தொடர்ந்து அச்சோலைக்கண் வந்து, ஆங்குத் தனித்து நின்ற தலைமகளைக் கண்டான். இருவரும் ஊழ் வயத்தால் ஒன்றுபட்ட உள்ளத்தராய் உடற்கலப்பும் எய்தினர். அப்பால், தத்தம் செயல் முடித்துத் திரும்பிய



ஆயத்தாரோடு கூடித் தலைமகள் செல்லா நின்றாள். அவள் தன்னைக் காணுமல் தான் அவளைக் காண்டற்குரிய தோரிடத்தில் மறைந்துநின்று கண்ட தலைமகன் பின் வருமாறு கூறினன் :

‘ திரையிமிழ் இன்னிசை அளைஇ அயலது
முழவின் இன்னிசை மறுகுதொ றிசைக்கும்
தொண்டி யன்ன பணைத்தோள்
ஒண் டொடி யரிவையென் னெஞ்சுகொண்
டோளே.’

(களக)

'கடலொலியோடு கலந்து தண்ணுமையொலி தெருக்கள்தோறும் ஒலித்துக்கொண்டிருக்கும் தொண்டி நகரத்தையொத்த இவள், என் நெஞ்சத்தைக் கொள்ளை கொண்டாள்;' இனி யான்

இப்பாட்டின் கருத்து.

எங்ஙனம் ஆற்றுவேன் என்பது

'திரையொலியோடு கலந்து முழவின் இன்னிசை இசைக்கும்' என்றது, தலைமகளுடன் செல்லும் ஆயத்தாரும் எதிர்கொண்டழைக்க வருவாரும் செய்யும் மகிழ்ச்சி யாரவாரத்தைக் குறித்தது.

இங்ஙனம் ஆற்றாமையால் உறக்கமின்றி வாட்டமுற்றிருந்த தலைமகனை அடுத்தநாட் கண்ட பாங்கன், 'இவ்வாட்டத்திற்குக் காரணம் என்னை?' யென வினவிய போது, 'ஒண்டொடி யரிவை யொருத்தி என் நெஞ்சைக் கவர்ந்து கொண்டாள். அதனால் கடலலைகள்போல் இரவினும் துயில் கொள்ளேனாயினேன். என் வாட்டத்திற்குக் காரணம் இதுவே' என்பான் 'உரவுக் கடலொலித் திரையென - இரவி னானுந் துயிலறி யேனே,' (கஎஉ) என்று கூறினான்.

பாங்கன், பலவாறு தேற்றவும் தெளிவு பெறாத தலைமகனால், தலைமகள் வந்து நிற்கும் இடம் அறிந்து ஆண்டுச் சென்று அவளைக் கண்ட பாங்கன் "தொண்டிக் கடற்றுறையைச் சார்ந்த தண்ணிய நறிய நெய்தற்பூப் போல நெடுந்தூரம் மணங்கமழும் பின்னிவிடப்பட்ட கரிய

கூந்தலையுடைய இத்தலைமகளால் நோய்செய்யப் பெற்றோர், இரவினும் இன்துயில் கொள்ளாமல் அராத் தீண்டினாற் போன்றதொரு துயரமெய்துவர்" இதில் ஐயமில்லை என்னும் பொருள்பட,

"இரவி னானும் இன்றுயில் அறியாது
அரவுறு துயரம் எய்துப தொண்டித்
தண்ணறு நெய்தல் நாறும்
பின்னிருங் கூந்தல் அணங்குற் றோரே"

(கஎங) என்று தன்னுள்ளே சொல்லி வியந்தான்.

குறியிடஞ்சென்று தலைமகளைக் கண்டு வந்து, பாங்கன் அறிவித்தபின் 'தெய்வம் நிலைபெற்றிருக்குந் துறையை யுடைய தொண்டிநகரம் போலும் மணங்கமழும் சோலைக் கண்ணுள்ள குறியிடத்தே, எமக்கு அருள்செய்தற் பொருட்டு அழகொழுகும் மேனியையுடையாள் வந்து நின்றாள்போலும்' (கஎச) என்று அக்குறியிடம் செல்லக் கருதிய தலைவன் தன்னுள்ளே மகிழ்ந்து கூறினான்.

தலைமகளோடு அளவளாவி மகிழ்ந்து மீளுங்கால் தலைவன், 'இனி நீ எமக்கு அருள்செய்ய விரும்புவாயானால் நின் உயிர்த்தோழியோடும் ஈங்கு வருக' (கஎரு) எனக் கூறி விடுத்தான்.

அவ்வாறே வந்து தலைவியும் தோழியும் ஒருங்கிருக்கும் இடத்திற்குச் சென்று தோழியினிடம் தன் குறையிரந்து கூறப்புக்க தலைவன், "தோழி, என்னுடைய

பெருமையும் உரனுமாகிய பண்புகளையும் உறக்கத்தையும் உன் தலைமகள் கவர்ந்து கொண்டாள்; நான் என்ன தவறு செய்தேன் கூறுவாயாக" (களகூ) என்று வினவினான்.

'ஐய, தொண்டியை ஒத்த எங்கள் தலைமகளுடைய தோள்களைக் கண்டவர், ஒரு தவறும் செய்யாதவராயினும் உள்ளமும் உடலும் நடுக்கமுறுவர்; இஃது உறுதி' (களஎ) என்று தோழி நகையாடிக் கூறினாள்.





'தவறில ராயினும் பனிப்ப மன்ற.........
தொண்டி யன்னோள் தோளுற் றோரே'

என்பது அத்தோழி கூற்றின் பகுதியாகும்.

'தோழி, செங்கோற்குட்டுவன்
என்னைக் கண்டு என் வேண்டுகோளை

தொண்டியன்ன

விரும்பியேற்று,

நீ அருள் செய்யாயாயின் யான் உயிர் வாழ்தல் ஒல்லாது. ஆதலின், நின் தலைமகளுடைய தோளையும் கூந்தலையும் தீண்டி அவற்றைப் பலபடியாகப் பாராட்டி, யான் உயிர் வாழும்வண்ணம் அருள்செய்வாயாக' என்று தலைவன் தோழியை வேண்டினன். இதனை,

'தோளுங் கூந்தலும் பலபா ராட்டி
வாழ்தல் ஒல்லுமோ மற்றே செங்கோற்
குட்டுவன் தொண்டி யன்ன
எற்கண்டு நயந்துநீ நல்காக் காலே'

(௧௭௮)

என்பதனால் அறியலாம்.

தோழியாற் கூட்டம் பெற்று நீங்கும் தலைமகனை அத்
தோழி எதிர்ப்பட்டு நின்று,

'நல்குமதி வாழியோ நளிநீர்ச் சேர்ப்ப
அலவன் தாக்கத் துறைஇறாப் பிறழும்
இன்னொலித் தொண்டி யற்றே
நின்னல திலா இவள்சிறு நுதலே'

(௧௭௯)

என மணந்துகொள்ளுமாறு வற்புறுத்தினள்.

'சேர்ப்பனே, நின்னையன்றி வேறு
பற்றுக்கோடில்லா
தவள் எங்கள் தலைமகள்; அவளது சிறிய நுதல்

அலவன்
தாக்கப் பிறழும் இருமீனையுடைய தொண்டித்துறை போல்வது. ஆதலால் வரைந்து அருள்செய்வாயாக' என்பது அதன் கருத்து.

'அலவன் தாக்க இருப் பிறழும்'
வொழுக்கம் புறத்தார்க்குப் புலனுயின்

என்றது, 'இவ்
இவள் உயிர்
வாழாள்' என்று கூறிய படியாம். 'நின்னலது இல்லா இவள்' என்றது, நின்னையன்றித் தனக்கென வேருென்



றில்லாதவள், உயிரும் உணர்வும் இன்ப துன்பநுகர்வுகளும் எல்லாம் நீயே யாவாய்' என வலியுறுத்தியதாம். இச்செய்யுள்,

"தாயுடன் றலைக்குங் காலையும் வாய்விட்டு
அன்னு யென்னும் குழவி போல
இன்னு செய்யினும் இனிதுதலை
யளிப்பினும்
நின்வரைப் பினளென் தோழி
தன்னுறு விழுமங் களைஞரோ இலரே"

எனத் தோழி கூற்ருக, இப்புலவரே
பாடியுள்ள குறுந்

நினைவுபடுத்துவதாயுள்ளது.

சிறிது காலந் தாழ்த்து

மணஞ்செய்யக் கருதிய

தலைமகனை நெருங்கி நின்று, 'அயலா னொருவனுக்கு மணம் பேசச் சான்றோர் சிலர் வந்திருக்கின்றனர். நீ விரைவில் வரைந்து கொள்க' என மீட்டும் தோழி வற்புறுத்தினள்.

இதன்கண்,

"வலைவர் தந்த கொழுமீன் வல்சிப்
பறைதபு முதுகுருகு இருக்கும்"

(கஅ0)

என்றது உள்ளுறை. அஃதாவது, 'வலைவாணர் கொண்டு வந்த கொழுமீனாகிய உணவினிடத்தே, பறக்க முடியாத முதிய குருகு இருக்கும்' என்றதனால், நொதுமலர்க்கு மகட்பேசச் சான்றோர் வந்திருக்கின்றனர் என்பதை அறிவித்தாள்.

இவ்வாறு சொல்லும் பொருளும் தொடர்ந்து வர இத்தொண்டிப் பத்து முடிகின்றது. இதன்கண் இயற்கைப் புணர்ச்சி முதலிய குறிஞ்சியொழுக்கமும் அதன் நிமித்தங்களுமே கூறப்பட்டுள்ளன.

(9) நெய்தற்பத்து

இப்பத்து, நெய்தற் பூவாகிய

பெற்றது.

கருப்பொருளாற் பெயர்

களவொழுக்கம் நீட்டித்தது. இவ்வொழுக்கத்தை அறியின் இவ்வூர்ப் பெண்டிர் அலர் தூற்றுவரேயெனத்



தலைமகள் அஞ்சினள். அந்நிலையில் தோழி வந்து 'தலைமகன் வரைந்துகொள்ளத் துணிந்தான்' என்று கூறினள். அதுகேட்ட தலைமகள், 'விளையாட்டு மகளிர் தம் காதலரோடு குரவைக்கூத்தாடும் கடற்றுறைத் தலைவன் மணந்து தண்ணளி செய்வானாயின் இவ்வூரில் வாழ்தல் இனிது. இன்றேல் இங்குத் தனித்து வாழ்தல் இன்னாது' என்பாள், "துறைகெழு கொண்கன் நல்கின்—உறைவினி தம்மஇவ் வழுங்க லூரே' (கஅக) எனத் தோழிக்குக் கூறினள். இஃது,

"இன்னாது இனனில்லூர் வாழ்தல் அதனினும்
இன்னாது இனியார்ப் பிரிவு" (திருக்குறள் : கககூஅ)

என்ற குறட்கருத்தை நினைவுபடுத்துகின்றது.

தலைமகளுடைய உடலுறுப்புக்களின் கவினும் கதிர்ப்புங் கண்டு அவளை இற்செறித்தனர். தலைவனைக் கண்டு களித்தற்கு வாய்ப்பு நேராமையால் அவள் உடல் மெலிந்து வேறுபட்டாள். இவ்வேறுபாடு தெய்வத்தாலாயிற்றென்று

தாயார் வேலனை யழைத்து வெறியாட்டயர்தற்கு வேண்டும் முயற்சி மேற்கொண்டனர். கற்புக்கடம்பூண்ட தலைமகள், கணவனையன்றிப் பிற கடவுளரை வணங்குதல் தகாது. மேலும், தலைமகளுக்கு உண்டாய வேறுபாடு தெய்வத்தால் நீங்கிற்றாயின், இஃது என்னால் வந்ததன்று; தெய்வத்தா லாயது; அதனால் நீங்கிற்று எனக் கருதித் தலைமகன் விரைவில் வரைந்துகொள்ள முயலாது நீட்டிக்கவுங்கூடும். நீங்கிற்றில்லையாயின் தெய்வத்தை வழிபட்டும் இந்நோய் நீங்கிற்றில்லை. இஃது யாதனாலாயது எனத் தாயர் பெரிதும் ஆராய்வர். ஆகவே, எவ்வாற்றானும் இடர் விளைப்பதாய இவ்வெறியாட்டினைத் தொடங்குமுன்பே களவுநிகழ்ச்சியை வெளிப்படுத்தல் நன்றெனத் துணிந்து,

> "நெய்தல் நறுமலர் செருந்தியொடு விரைஇக்
> கைபுனை நறுந்தார் கமழு மார்பன்
> அருந்திறற் கடவுள் அல்லன்
> பெருந்துறைக் கண்டிவள் அணங்கி யோனே" (௧௮௨)

என்று கூறித் தோழி அறத்தொடு நின்றாள்.

## நெய்தல் 117

அஃதாவது, 'கடற்பெருந் துறைக்கண் யாங்கள் விளையாடச் சென்றிருந்தேம். நெய்தற்பூவும் செருந்தி மலருங் கலந்து தொடுக்கப்பெற்ற மாலையணிந்த மார்பினை

யுடைய தோன்றலொருவன் ஆங்கு வந்தான். அவனது தோற்றப் பொலிவு இவளை வருத்திற்று. அவன் அருந்திறற் கடவுள் அல்லன்' என்பது இதன் கருத்து.

இவள் காதலுக்கு உரிய அத்தலைவனால் இந் நோய் நீங்குமன்றித் தெய்வத்தால் நீங்காதெனக் கரந்த நிகழ்ச்சியைத் தோழி தாயர்க்கு வெளிப்படுத்தினாள். காதலித்த கணவனையன்றிக் கடவுளரையும் வணங்காத கற்பறம் இதனால் அறிவிக்கப் பட்டுள்ளது.

வெறியாட வந்த வேலனை நோக்கித் தோழி கூறிய தாகக் கொள்வர் நச்சினார்க்கினியர்.

தலைமகள் வேறுபாட்டிற்குக் காரணமாயினவன் இன்னான் என்பதைத் தோழி அறத்தொடு நின்றமையால் அறிந்த இருமுதுகுரவர் முதலாயினோர், அத் தலைவனுக்கே, தம் மகளை மணஞ்செய்து கொடுக்க உடன்பட்டனர். அவன் பொருளீட்டற்குப் பிரிந்திருந்தான். அவனைக் காணாத நாளெல்லாம் தலைமகளுக்குக் கழிபேரூழியாகத் தோன்றின. மேலும், காலையரும்பிப் பகலெல்லாம் போதாகிய காதல்நோய், மலரும் பொழுதாகிய மாலைப்போதும் வந்து அவளுக்குப் பெரிதும் துயர் தருவதாயிற்று. அந்நிலையில் மாலைப் பொழுதை முன்னிலைப் படுத்துப், பின்வருமாறு தலைமகள் கூறினாள் :

“கணங்கொள் அருவிக் கான்கெழு நாடன்
குறும்பொறை நாடன் நல்வய லூரன்
தண்கடற் சேர்ப்பன் பிரிந்தெனப் பண்டையிற்
கடும்பகல் வருதி கையறு மாலை
கொடுங்கழி நெய்தலுங் கூம்பக்
காலை வரினுங் களைஞரோ இலரே.” (கஅ௩)

"யான் செயலற்றுக் கிடப்பதற்குக் காரணமாகிய மாலையே! தண்கடற்சேர்ப்பன் என்பால்வந்துபோய் இருந்த



காலத்தில் நீ உனக்கு உரிய நேரத்திலே வந்து என்னை இன்புறுத்தினாய். இப்போது அவன் பிரிந்திருக்கின்றான். இயல்பிலே மெல்லியலான யான் ஆற்றாமையால் அயர்ந்து மெலிந்து அவலமுற்றிருக்கின்றேன். இந்நிலையில் பண்டு போலவே மாலைப்பொழுது தனக்குரிய நேரத்தில் வருகின்றது எனப் பிறர்க்கெல்லாந் தோன்றச்செய்து, எனக்கு மாத்திரம் நண்பகற்பொழுதிலே வந்து துன்புறுத்துகின்றாய். இனிக் காலைப்பொழுதிலே வந்து கலக்கமுறுவித்தாலும் தடுப்பவர் இங்கு ஒருவருமிலர்'' என்று தன் பரிவு தோன்ற இரங்கிக் கூறினாள்.

மாலைப்பொழுதிலே வரக்கடவதான விரகநோய் நண்பகற்போதிலே வந்து தன்னை வருத்துதலை மாலை மேலேற்றிக் கூறினள்.

இப்பாட்டின்கண் நானில உரிமையும் முல்லைக்குரிய மாலைப்பொழுதும் கூறப்பட்டிருப்பினும், கொடுங்கழி நெய்தல் என்றமையானும் இரங்கலானும் நெய்தற்றிணையாயிற்று. இப்பாட்டின் முதலிரண்டடிகள் சில ஏடுகளில் இல்லை.

ஒரு தலைவனும் தலைவியும் வதுவைச் சடங்கு நிகழ்த்தி மணஞ் செய்துகொண்டு மனையறம் நடத்துங்கால், அத்தலைவன் ஓதல் பகை தூது காவல் பொருள் காரணமாகப் பிரிதல்போலவே, பரத்தையரொடு கூடி இன்புறுதற் பொருட்டுப் பிரிந்து வந்ததாகவும் பண்டையிலக்கியங்கள்

கூறுநிற்கும். இலக்கியங்கள், தாம் தோன்றிய காலத்து உலகியலையும் மக்கள் மனநிலை முதலியவற்றையும் படம் பிடித்துக் காட்டுவனவேயாகலின், உலகியற்செய்திகள் இலக்கியங்களில் இடம் பெறுதல் இயல்பேயாம். இங்ஙனம் உலகியலிற் காணப்படுவதாய், இலக்கியங்களிலும் எடுத் தாளப்பட்ட தொன்றற்கு விதிவகுத்தல் இலக்கண நூலா சிரியன் கடமையாகும். ஆகலின், தொல்காப்பியரும் இன்பம் நுதலியெடுத்துக் கொள்ளப்பட்ட பொருளதி காரத்தில் ஒரோவழிப் பரத்தமை யொழுக்கம் பற்றிக் கூறுவாராயினர். 'ஊடுதல் காமத்திற் கின்பம்' என்றபடி

நெய்தல்

119

இவ்வொழுக்கம் தலைமகள் பிணங்குதற்கும், பின்னர்ப்
பிணக்கம் நீங்கி இணங்கி இன்புறுதற்கும் ஏதுவாமாதலின்
வேண்டப்படுவதென்பாருமுளர்.

பண்டைத் தமிழகத்தில் அடுத்தடுத்துப் போர்கள்

நிகழ்ந்தன. அப்போரிற் கலந்துகொண்டமையால் ஆடவர் தொகை அருகின. பெண்டிர்தொகை பெருகிக் காணப் பட்டன. ஆடவனொருவன் மகளிர் பலரை மணத்தல் தடைசெய்யப்படவில்லை. ஆடல் பாடல் அழகிற் சிறந்த பெண்டிர் சிலர், பொதுவுடைமை வாழ்வு நடத்தவும் தலைப் பட்டனர். நாடு நாடாதற்பொருட்டு மக்கட்குலம் வளர வேண்டுமென்ற எண்ணம் யாண்டும் பரவியது. இவற்றை, பின்முறை வதுவைப் பெருங்குலக்கிழத்தி, காமக்கிழத்தி, காதற்பரத்தை, சேரிப்பரத்தை முதலாக நூல்களிற் பேசப் படுதலாலும்,

> "பொன்போற் புதல்வற் பெறுஅதீரும்
> எம்அம்பு கடிவிடுதும் நும்மரண் சேர்மின்"

எனப் போர் தொடங்குமுன் பறையறைந்து அறிவித்ததும், 'நீர்மகப் பெற்றபின் எம்மொடு வருக' என வடக்கிருந்த கோப்பெருஞ் சோழன்
கூறி விடுத்ததும் ஆகிய

பொத்தியார் என்னும் புலவர்க்குச்
செய்திகளாலும் அறியலாம்.

இன்றும், மகப்பேற்றினைக் குறைத்தல் வேண்டுமென்ற வாய்ப்பறை முழக்கம் ஒருபாலும், மக்கள் பலரைப் பெற்று வளர்த்த தாய்மார்க்குப் பட்டமும் பரிசும் வழங்கிப் பாராட்டுச் செய்தல் மற்றொருபாலுமாக உலகில் நிகழக் காண்கின்றோமன்றோ! இவ் விருவேறு கொள்கைகளுக்கும் முறையே போரின்மையும் போருமே காரணமென்பது சொல்லாமலே விளங்கும்.

இஃது எவ்வாறாயினும் ஆகுக. பரத்தமையொழுக்கம் தீயதென்பதனை, மக்கட்கு அறநூல்வகுத்த திருவள்ளுவர், கள்ளுண்டல் கவறாடலோடு ஒப்ப வைத்து விலக்கியமையால் உணரலாம்.

இங்கே இன்பத்துறையில் எளியனான தலைமகன் ஒருவன் பரத்தையிற் பிரிந்து திரும்புங்கால் தன்னுடைய தவறு நினைந்து வருந்தினன். 'கற்பரசியாகிய தலைவிக்குப் பிழை செய்தேன். அவள்பால் யான் யாங்ஙனம் துணிந்து செல்வேன், என' அஞ்சினன். ஆகவே, அவளுடைய உள்ளப்பாங்கை யறிதற்கும் ஊடலைத் தணித்தற்கும் சிலரை அவள்பால் தூதாக ஏவினன், அவர்கள் வந்து தலைவனுடைய பேரன்பின் திறத்தைப் பிதற்றிப் பிதற்றிப் பலபடப் பேசினர். தலைவனுடைய தவற்றொழுக்கத்தினை முன்பே அறிந்த தலைமகள், இவர்களுடைய வெற்றுரைகளைக் கேட்டு வெறுப்புற்றாளாயினும் பொறுமையோடு நயம்பட மறுத்துரைக்குந் திறம் அறிந்து இன்புறற்பாலது.

"நெய்தல் இருங்கழி நெய்தல் நீக்கி
மீனுண் குருகிளங் கானல் அல்கும்
கடலணிந் தன்றவர் ஊரே
கடலினும் பெரிதெமக் கவருடை நட்பே"

(கஅ௪)

என்றது அத் தலைமகள் கூற்று.

'நெய்தல் நிலத்து உப்பங்கழிகளிற் பூத்திருக்கும் நெய்தல் மலர்களை நீக்கி ஆண்டுள்ள மீனையருந்திய கொக்கு, அணிமையிலுள்ள இளமரக்காவில் தங்குதற்கு இடமான கடலால் அழகுபெற்றது அவர் ஊர். அவர் எம்மிடத்துக் கொண்டுள்ள நட்பு அக் கடலினும் பெரிது,' என்றாள்.

ஒன்றனுடைய பேரெல்லைக்குக் கடலை உவமையாக எடுத்தாளுதலுண்டென்பதை,

'பயன்றூக்கார் செய்த உதவி நயன்தூக்கின்
நன்மை கடலிற் பெரிது'

(திருக்குறள் : ௧0௩)

'இன்பங் கடல்மற் றுக் காமம் அஃதடுங்கால்
துன்பம் அதனிற் பெரிது'

(திருக்குறள் : ககசுசு)

'நிலத்தினும் பெரிதே வானினும்
உயர்ந்தன்று
நீரினும் ஆரளவின்றே......நாடனொடு
நட்பே'

என்பவற்றால் அறியலாம்.
'கடலினும் பெரிது எமக்கு

ஈண்டும் இம் முறைபற்றி,
அவருடை நட்பு,' என்றாள்

நெய்தல்

121

இதன்கண் தலைவனது நட்பின் திறம்
பட்டுள்ளதேயன்றி மறுத்ததில்லையே

பாராட்டிக் கூறப்
எனின், மறுத்த

லாகிய தன் கருத்தினை வெளிப்படக்
உள்ளுறையால் கூறியுள்ளாள்.

கூறிலளாயினும்

அஃதாவது, 'நெய்தற் பூக்களை நீக்கி மீனை யருந்திய கொக்கு அணிமையிலுள்ள இளமரக்காவில் தங்கும்,' என்றது, 'ஊடல் நீக்கி ஒரு பரத்தையை நுகர்ந்த தலைவன் மற்றொரு பரத்தையை நாடி ஆண்டே தங்குவன்,' என்பதை யுணர்த்துவதாயிற்று. இதனால் தலைவன் எங்கள்பால் பேரன்பினன் என, நீங்கள் கூறுவது வெற்றுரையேயன்றி மெய்யுரை யாகாது என மறுத்தாளாம்.

தலைமகள் ஊடல், வாயில்களால்

தணியாதபோது

தலைமகன் விருந்தினரோடு வந்தான். அவ் விருந்தினரைக் கண்ட அளவில் தலைவன்பாலுள்ள வெறுப்பைக் காட்டாமல் தலைமகள் முகமலர்ந்து தக்கவாறு விருந்தோம்பல் செய்தாள். அவளது மனையறத்தின் மாட்சியைக் கண்ட தலைவன்,

'இருங்கழிச் சேயிறா இனப்புள் ளாரும்
கொற்கைக் கோமான் கொற்கையம்

பெருந்துறை

வைகறை மலரும் நெய்தல் போலத்
தகைபெரி துடைய காதலி கண்ணே'

(கஅஅ)

என்று மகிழ்ந்து கூறினன்.

வைகறையில் மலர்ந்த நெய்தற்பூவைத் தலைமகள் கண்ணிற்கு உவமை கூறினன். விருந்ினரைக் கண்ட அப்பொழுதே முகமலர்ந்து நோக்கிய செவ்வி கண்டு,

'சேயிறு இனப்புள் ஆரும்,' என்றது விருந்தினர் நுகர்ந்த சிறப்பு நோக்கி. இதனால்,

> 'இருந்தோம்பி இல்வாழ்வ தெல்லாம் விருந்தோம்பி
> வேளாண்மை செய்தற் பொருட்டு' (திருக்குறள் : அக)

என்ற மறைமொழி யுணர்ந்தொழுகிய மங்கையின் மனை மாட்சி கூறப்பட்டது.

122

ஐங்குறுநூற்றுச் சொற்பொழிவுகள்

## (10) வளைப்பத்து

நெய்தற் கருப்பொருளாகிய சங்கினை யறுத்துச் செய் யப்படும் கைவளை இப் பத்துப்பாடல்களிலும் கூறப்படு தலால் இது வளைப்பத்தெனப்பட்டது.

மகளிர்க்கு இன்றியமையாத அணிகளுள் கைவளை ஒன்று என்பதும், அதனைத் தலைவன் கையுறையாகக் கொண்டுவந்து கொடுத்தல் உண்டு என்பதும், அதன் வாயிலாக மகளிர்

தும், பிறவும் இப்

தம் கருத்தைப் புலப்படுத்துவர் என்ப பத்தினால் அறியப்படும்.

'வலம்புரி யுழுத வார்மணல் அடைகரை

இலங்குகதிர் முத்தம் இருள்கெட இமைக்கும்

துறைகெழு கொண்கநீ தந்த
அறைபுனல் வால்வளை நல்லவோ தாமே'

(கககூ)

என்பது தோழிகூற்று.

வரைந்து கொள்ளாமல் களவொழுக்கத்தை நீட்டித்து நடத்தக் கருதிய தலைவன், தலைமகளுக்குச் சில புதிய கைவளைகளைக் கொண்டுவந்து தந்தான். அவற்றை வாங்குகின்ற தோழி, 'தலைவனே, நீ முன்பு தந்த வளைகள்போல் அல்லாமல், தலைவியின் உடல்மெலிந்தாலும் கழன்று போகாமலிருக்கும் நன்மையுடையனவாகுமோ இவ்வளைகள்,' என்று தலைவனிடம் கேட்கின்றாள்.

இது, 'தலைவியின் உடல் நாளுக்கு நாள் மெலிகின்றது, மெலியவே அவள் அணிந்த கைவளைகள் கழல்கின்றன. அது பிறர் ஐயுறவிற்கு ஏதுவாகுமே' யென்று தலைமகள் அஞ்சுகின்றாள் என்பவற்றைக் குறிப்பால் அறிவித்து வரைந்துகொள்ளத் தூண்டியதாகும்.

'இலங்குகதிர் முத்தம் இருள்கெட இமைக்கும் துறை'

என்றது, இவளுக்கு உண்டாகும் தீங்கை விரைவில் வரைந்து கொள்ளவேண்டும் என்று கூறியதாம்.

நீக்கி

ஒரு தலைவன் எத்துணைப் பெருஞ் செல்வக்குடியிற் பிறந்தானாயினும் தன் முயற்சியால் ஈட்டிய பொருள்



கொண்டு மணஞ்செய்து உண்டுடுத்து வாழ்தலே சிறந்த தெனக் கருதுதல் தமிழ்மரபு. இதனை, 'வரைவிடை வைத்துப் பொருள்வயிற் பிரிதல்,' என்பதனால் அறியலாம். இவ் வழக்காறு, தானே முயன்று பொருளீட்டுந் தகுதி யுடையவனே மணஞ்செய்து கோடற்கு உரியன் என்பதை நமக்கு எடுத்துக் காட்டுகிறது.

இந் நெய்தல் தலைவன் ஒருவன் வரைவினிமித்தம் பொருளீட்டச் சென்றான். 'சென்றோர் முகப்பப் பொருளும் கிடவாது' என்றபடி, சென்றவுடன் எல்லோரும் செல்வத்தைத் திரட்டிக்கொண்டு வந்துவிட முடியாது. தத்தம் தகுதிக்கேற்ற தொழில் செய்து பொருளீட்டல் வேண்டும். இத்தலைவனும் ஏதோ பொருளீட்டுஞ் செயல் ஒன்றனை மேற்கொண்டிருந்தான். அச்செயலால் விளைந்த துன்பம் ஒரு பக்கமும், தன் காதலியைப் பிரிந்து தனித்துறையும் ஆற்றாமையால் வந்த வருத்தம் மற்றொரு பக்கமுமாக நலிவு செய்தன. அந்நிலையில் அவன் உள்ளக் கருத்தைத் தெள்ளிதிற் புலப்படுத்து,

'வளைபடு முத்தம் பரதவர் பகரும்

கடல்கெழு கொண்கன் காதல் மடமகள்
கெடலருந் துயரம் நல்கிப்
படலின் பாயல் வெளவி யோளே'

(கங்கு)

என்று இவ்வாறு கூறினன்.

இதன் பின்னிரண்டடிகள், இடையறவின்றிப் பொருளீட்டும் முயற்சியால் விளைந்த துன்பத்தையும், பிரிவாற்றுமையால் உறக்கமின்றி யிருத்தலையும் குறிப்பன. தம்மால் அன்பு செய்யப்பட்டார்க்கு நிகழுந் துன்பத்தைப் போக்கி இன்பஞ் செய்தல் அறிவுடையோர் செயலாகும். அதற்கு மாறாக இவள் எனக்கு நல்கியது துயரம்; போக்கியது இனிய துயில். என்னே இவள் அறிவிருந்தவாறு என்பான், 'மடமகள்' என்றான். செல்வக் குடியிற் பிறந்து சீராட்டி வளர்க்கப்பெற்ற செல்வச் சிறுமியர் பிறர்படுந் துன்பம் அறியார் போலும் என்பான், 'கடல்கெழு

கொண்கன் காதல் மடமகள்' என்றான். தானுறுந் துன்ப மிகுதிக்கும் இன்ப இழப்பிற்கும் காரணமாவாள் தலைமகளே என்பது அவன் கருத்தாதலின் "மடமகள்...... நல்கி...... வெளவினள்" என்றான்.

ஆழ்கடற் பாரப்பிற் கிடக்கும் அரிய சங்கிலிருந்து பெற்ற பெறுதற்கரிய முத்தினைத் தக்க பொருள் கொடுப் பார்க்குப் பரதவர் விற்கும் கடல்கெழு கொண்கன் என்ற தனால், தாம்பெற்ற அரும்பெறற் காதன் மடமகளை இவருந் தாராதார் அல்லர் என்பதும், இவர் வேண்டும் பொருள் கொடுத்துக் கொள்ள இயலாது வருந்துகின்றேன் என்ப தும் பெறப்படும்.

இப்புலவர் பாடிய அகநானூற்று செய்தற்பாட்டு (உ௮0) ஒன்று, 'சிறந்த பொருளும் அணிகலமும் நிறையக் கொடுத்தாலும் இத்தலைமகள் பெறுதற்கு அரியளானால், இவள் தந்தையை அடுத்திருந்து அவற்கு உவப்பான பணி பல புரிந்தால் நமக்குத் தருவானே' எனத் தலைவன் தன் நெஞ்சிற்குக் கூறியதாக அமைந்துள்ளது ஈண்டுக் கருதத் தக்கது.

ஒரு தலைவன் தன் மனைக்கிழத்தியை அறவே மறந்து ஒரு பொதுமகள் இல்லத்தையே தனக்குப் புகலிடமாகக் கொண்டு பன்னாட் கழித்தான். பின்பு தன் புறத்தொழுக் கத்தின் தீமை புலனாயிற்று. ஆனால் இப்பெரும்பிழை, தலைமகள் பொறுத்தற்கரியது; யாவர் வாயிலாகச் சென்றா லும் அவள் ஊடல் தணியாள் என எண்ணி ஆற்றாமையே வாயிலாகத் தன் மனையகஞ் சார்ந்தான். அவன் அகத்தில்

உண்டாய வருத்தம் முழுதும் முகத்தில் தெரிந்தது. அது கண்ட தோழி உள்ளம் நெகிழ்ந்தாள். ஆயினும், தலைமகள் இவனை ஏற்றுக்கொள்ள வேண்டுமே என்ற கவலை அவளுக்கு உண்டாயது. இருவரும் வருத்தம் நீங்கி ஒற்றுமையாய் வாழவேண்டும் எனவும், மேலும் இத்தீமை தலைவன்பால் நிகழாதிருக்க வேண்டும் எனவும் கருதிய தோழி, அப் பொழுதைக் கேற்பத் தனது கூர்த்த மதிநலத்தால் பின் வருமாறு கூறினாள் :



'வளையணி முன்கை வாலெயிற் றமர்நகை
இளையர் ஆடுந் தளையவிழ் கானல்
குறுந்துறை வினவி நின்ற
நெடுந்தோள் அண்ணற் கண்டிகும் யாமே' (கஅ)

என்பது அத் தோழி கூற்று.

அஃதாவது, "வளையணிந்த முன்னங்கைகளையும் வெண்ணிறமான பற்களையும் விரும்பத்தகுந்த குறுநகை யினையுமுடைய இளையமகளிர் விளையாடும் முறுக்கவிழ்ந்த மலர் மணங்கமழும் கடற்கரைச் சோலையை யடுத்த சிறிய துறையின்கண் வந்து, 'உங்கள் ஊர் யாது? பேர் யாது?' என்பன போன்ற பல வினாக்களை யெழுப்பி அவற்றிற்குரிய விடைகளை நம்மிடம் எதிர்பார்த்து நின்ற நெடுந்தோள் அண்ணல் இன்று நம் மனையகஞ் சார்ந்துள்ளார். யாம் அவரைக் கண்டேம்" என்பதாம்.

'குறுந்துறை வினவி நின்ற நெடுந்தோள் அண்ணல்' என்று களவுக்காலத்து நிகழ்ச்சியைக் கூறியது, இருவருங் காதல் கனிந்த உள்ளத்தராய்க் கலந்து ஒழுகிய பழமையை நினைந்து தலைமகள் கொண்ட சீற்றம் தணிதற்கும், நாம் பலநாட் பிரிந்திருந்தேம் என்பதனை இவ்வாறு சொல்லாமற் சொல்லுகின்றாள் என வுணர்ந்து தலைமகன் திருந்துதற்குமாகும்.

இவ்வாறு தன் மதிநலமும் சொல்லாற்றலுந் தோன்றத் தோழி பேசுமிடங்கள் பலவுள. பொதுவாகக் கூறுமிடத்துத் தலைமகன் தலைமகள் தாயர் முதலானவர்களைத் தன் சொல்வழி யொழுகச் செய்யுந் திறமை தோழிபாலுண்டெனக் கொள்ளலாம். இதனை அகப்பொருள் நூல்களிற் பயின்றார் நன்கறிவர்.

## தொகுப்புரை

இதுகாறுங் கூறியவற்றால், இவ் வைங்குறு நூற்றின் இரண்டாவது நூறு அம்மூவனார் என்னும் சங்கத்துச் சான்றோரால் இயற்றப்பெற்றதென்பதும், இவர் செய்தற்

றிணை வளங்களைப் பாடும் ஆற்றலும் ஆர்வமும் உடையவ ரென்பதும், நெய்தலுக்குரிய முதல் கரு உரிப்பொருள்கள் இவையென்பதும், ஒரு திணைக்கு உரிமையாகிய காலமும் கரு-உரிப்பொருள்களும் பிற திணைகளோடு மயங்கி வருத லுண்டென்பதும், ஒத்த அன்புடைய தலைமகனும் தலைமக ளும் ஊழ் வயத்தால் தாமே யெதிர்ப்பட்டுப் புணர்ந்தொழு கிப் பின்னர் வரைந்துகொண்டு இல்லறம் நடத்துவரென்ப தும், மணமக்களுக்குக் குடிப்பிறப்பு ஒழுக்கம் உருவம் பருவம் வனப்பு முதலியன பொருத்தமாதல் வேண்டு மென்பதும், முன்னையோர் ஊழில் நம்பிக்கையுடையவ ரென்பதும், மணமக்கள் பிரியா வாழ்க்கை பெறுதற்கு முன்னைத் தவம் வேண்டுமென்பதும், உண்மைக் காதல் அலராலும் அச்சத்தாலும் அடங்காதென்பதும், காதல் நோயுடையாரை மாலை தென்றல் முதலியன வருத்துமென் பதும், கற்புக்காலத்துத் தலைமகனது புறத்தொழுக்கம் தலைமகளால் பெரிதும் வெறுத்தொதுக்கப்பட்டதென்ப தும், தலைமகன்பால் தவறுகண்ட விடத்தும் அதனை மறந்து உறவுபாராட்டல் குலமகளியல்பென்பதும், தலைமகனுடைய எண்ணங்களை அவன் கூறுமுன்பே தலைமகள் வேட்கை மிகுதியால் அறிய முற்படுதல் வழுவென்பதும், பாணன் முதலியோர் தலைமகள் ஊடல் தீர்க்கும் வாயில்களாவா ரென்பதும், மகட்பெற்றோர் பரியமாகப் பொருள் முதலி யன பெறுதலுண்டென்பதும், வெளிப்படக் கூறத்தகாத கருத்துக்களை உள்ளுறையாய் அமைத்துக் கூறுதல் அகப் பொருட்கே யுரிய சிறப்பிலக்கணமென்பதும், சொற் றொடர்பும் பொருட்டொடர்பும் பொருந்தத் தொண்டிப் பத்து அமைந்துள்ளதென்பதும், தலைமகளுடைய வாட்டந் தவிர்த்தற்கு வெறியாட்டெடுத்தலும் அதனால் விளையும்

ஏதங்குறித்துத் தோழி தடுத்தலும் உண்டென்பதும், ஓர் ஆடவன் மகளிர் பலரை மணத்தல் பண்டு நிகழ்ந்த தென்பதும், களவுக் காலத்து வளையினைத் தலைவன் கையுறையாகக் கொடுத்தலுண்டென்பதும், பிறவும் புலப்படுவனவாம்.

---

# குறிஞ்சி

[திரு. சுப. இராமநாதன் அவர்கள், எம். ஏ.]

## தோற்றுவாய்

உலகத்து மொழிகளிலே தொன்மையாலும், உயர் தனிச் செம்மையாலும், என்று மழியாக் கன்னித் தன்மை யினாலும், தனக்கிணை தானேயாக விளங்கும் மொழி நம் தமிழ்மொழி. நம் மொழியரசி அரியணையமர்ந்து செங் கோலோச்சி இமய முதற் குமரிவரையாண்ட காலம் மூச் சங்கங்களும் திகழ்ந்த பொற்காலமாகும். அவற்றுள் கடைச்சங்கப் புலவர்களிருந்து தமிழாராய்ந்தது நாம் குழுமியிருக்கும் இம்மதுரையம்பதியே யாகும். அதிலும் நாம் கூடியிருக்கும் இடத்திற்கு அடுத்துள்ள இடத்திலே யாகத்தானிருக்கவேண்டும். அந்த ஆன்றவிந்தடங்கிய கொள்கைச் சான்றோர்கள் செய்த நூற்கள் கடைச்சங்க நூற்களெனப்படும். தலை இடைச் சங்க நூற்கள் எதுவும் நமக்குக் கிடைக்கப் பெறாத நிலையில், அக்கடைச் சங்க நூற்கள் சங்க நூற்களென்றே அழைக்கப்படுகின்றன. அவைகளிலொன்று எட்டுத்தொகை.

அத்தொகை நூற்கள் எட்டனையும் நோக்குங்கால், மூன்று புறப்பொருள் பற்றியனவாகவும், ஐந்து அகப் பொருள் பற்றியனவாகவும் இருக்கின்றன. புறத்திற் சொல்லப்படுவது பெரும்பாலும் வீரமேயாகும்; அகம் என்பது ஆடவர், பெண்டிர் காதலொழுக்கம் கூறுவது. தமிழிலக்கியங்களைப் படிப்பார்க்கு எங்கு நோக்கினும் இவ் வீரமும், காதலும் மிகுந்து பேசப்படுகின்ற உண்மை புலனாகும். வீரம் கொண்டு பொருளை ஈட்டி, அது கொண்டு அறம் செய்ய விரும்பினார்கள். அகவொழுக்கத் திலே செம்மையாய் நின்று சிற்றின்பம் பெற்று அவ்

வில்லறத்தின் துணையினால் அழியாப் பேரின்பமாகிய வீடு பேற்றினைப் பெற விரும்பினார்கள். அம்முறையானே அவ்விலக்கியங்கள் அறம், பொருள், இன்பம், வீடு என்ற நான்கு பயன்களையும் நல்கவல்லவைகளாகவிருக்கின்றன.

இனி, அந்த ஐந்து அகப்பொருளிலக்கியங்களில் ஐங்குறுநூறும் ஒன்று. "நற்றிணை, நல்ல குறுந்தொகை, ஐங்குறுநூறு" என்று மூன்றாவதாக வைத்துப் பேசப்படுவது. அது மருதம், நெய்தல், குறிஞ்சி, பாலை, முல்லை என்று முறையே ஐந்து திணைகளும், ஐந்து புலவர்களாற் பாடப்பட்டதாய் அமைந்தது. அதில் குறிஞ்சித்திணை பாடியவர் கபிலராவார். தமிழறிந்தார் யாவரும் அறிந்த புலவர் இவர். இவருடைய வாழ்க்கை வரலாறு, காலம், சமயம் முதலியவற்றை ஆராய்ந்து பேரறிஞர்கள் திரு. ந. மு. வேங்கடசாமி நாட்டார் அவர்களும், திரு. இரா. வேங்கடராஜுலு ரெட்டியார் அவர்களும் விரிவாகத் தங்கள் புத்தகங்களிற் கூறியிருக்கிறார்கள். அதனால் அவைகளைப் பற்றிச் சுருக்கமாக ஈண்டுப் பார்ப்போம்.

## கபிலர் வரலாறு

பிறப்பும், வாழ்க்கையும்:—பாண்டி நாட்டில், மதுரையை யடுத்த திருவாதவூர் இவரது பிறப்பிடம் என்பர். அஃதன்று என, எண்ணுவாருமுளர். பிறந்தது அந்தணக்குடி. அவரே "மன்னும் அந்தணன் கொண்டு வந்தனனே!" என்று சொல்கின்றார். அக்குடியிற் பிறந்தாலும், வெங்கள்ளும், ஊனும் விரும்பியுண்டாரெனத் தெரிகிறது. வள்ளல்களையும், வேந்தர்களையும் நாடிப் பரிசில்பெற்று வாழ்ந்தார். இவர், பாரியினுடைய உயிர்த்தோழர். அவனைக் கண்டதுமுதலே அவனோடு தங்கிவிடுகின்றார். அவன் பிரிவிற்காற்றாது வருந்திப் பாடிய பாக்கள் யார் மனத்தையும் உருக்க வல்லது. பாரி மாய்ந்தானாக, அவன் மகளிரது மணம் முடித்து வைக்கின்றார்.

பெருமை:—கபிலர் என்றதுமே வள்ளல்களிற் பாரியும், புலவர்களிற் பரணரும் நினைவிற்கு வருதல்போல, நினை

களில் குறிஞ்சி நினைவிற்கு வரும்போதெல்லாம் கபிலரைப் பற்றிய நினைவு எழுதல் ஒருதலை. குறிஞ்சித்திணை பாடுவதில் இவர்க்கிணை இவரேதாம். அகப்பாட்டாயினும் சரி, புறப்பாட்டாயினும் சரி, குறிஞ்சி நிலவியல்புகளை அப்படியே காட்டவல்லவர். வேந்தர்களாலும், குறுநில மன்னர்களாலுமேயன்றிப் புலவர்களாலும் நன்கு புகழ்ந்து பாராட்டப்பட்டவர். வள்ளுவரைத் தவிர வேறு எந்தப் புலவரும் இவ்வளவிற்குப் புலவர்களாற் பாராட்டப் பெற்றதில்லை. "உலகுடன் திரிதரும் பலர்புகழ் நல்லிசை வாய்மொழிக் கபிலன்" என்கிறார் நக்கீரனார். "பொய்யா நாவிற் கபிலர்" என்றார் மாறோகத்து நப்பசலையார்.

காலம் :—கடைச் சங்க காலமாகிய இரண்டாம் நூற்றாண்டு.

பாடப்பட்டோர் :—ஓரி, நள்ளி, காரி, பாரி, பேகன், சேரமான் செல்வக் கடுங்கோ வாழியாதன், சேரமான் மாந்தரஞ் சேரலிரும்பொறை, இருங்கோவேள், விச்சிக் கோன் முதலியோர்.

## இவர் பாடியவை

| | | |
|---|---|---|
| பத்துப்பாட்டில் | குறிஞ்சிப்பாட்டு | க |
| கலித்தொகையில் | குறிஞ்சிக்கலி | உகூ |
| ஐங்குறு நூற்றில் | குறிஞ்சி | க00 |
| பதிற்றுப்பத்தில் | ஏழாம் பத்து | க0 |
| நற்றிணையில் | பாக்கள் | உ0 |
| குறுந்தொகையில் | பாக்கள் | உகூ |
| அகநானூற்றில் | பாக்கள் | கரு |
| புறநானூற்றில் | பாக்கள் | ௩0 |

ஆ உ௩௫

## குறிஞ்சிநூறு அமைப்பு

இவ்வைங்குறு நூற்றில் திணைக்கு நூறு பாக்களும், கடவுள் வாழ்த்து ஒன்றுமாக (501) பாக்கள் அடங்கியுள்ளன. ஒவ்வொரு திணையிலும் பத்துப்பாக்களைக்கொண்டு ஒரு பத்தாக பத்துப்பத்துக்களைக் காண்கின்றோம். பத்துப் பாக்களைச் சேர்த்து ஒரு தொகுதியாக வமைத்து அதிகார





மாக்கிய முறையினைத் திருக்குறளிலே காண்கின்றோம். திருவாசகத்திலும் பிடித்தபத்து, வாழாப்பத்து என்பன முதலாகவுள்ள பத்துக்கள் காணப்படுகின்றன. இத் திணையில் அன்னாய்வாழிப்பத்து, அன்னாய்ப்பத்து, அம்மவாழிப் பத்து, தெய்யோப்பத்து, வெறிப்பத்து, குன்றக்குறவன் பத்து, கேழற்பத்து, குரக்குப்பத்து, கிள்ளைப்பத்து, மஞ்ஞைப்பத்து என்ற பத்துப்பத்துக்கள் அடங்கியிருக்கின்றன. ஒவ்வொரு பத்தும் அப்பெயரினைப் பெறுதற்குக் காரணம் உண்டு. அன்னாய் வாழி, அன்னாய், அம்மவாழி, தெய்யோ, என்ற சொற்றொடர்களை அவ்வப்பத்தில் ஒவ்வொரு பாட்டிலும் காண்கின்றோம். வெறியாட்டு, குன்றக் குறவன், கேழல், குரங்கு, கிள்ளை, மயில் ஆகியவைகள் அவ்வப்பத்தில் ஒவ்வொரு பாட்டிலும் பேசப்படுவதைக் காண்கின்றோம். இதில் வந்துள்ள பாக்கள் மூன்றடிச் சிற்றெல்லையினையும், ஆறடிப் பேரெல்லையினையுமுடையவை.

## நூலின் பெருமை

ஒரு நூலின் பெருமை அந்நூல் அறிஞர்களால் எந்த அளவிற்குப் படிக்கப்படுகின்றது, எவ்வளவிற்கு மேற்கோளாகக் கையாளப்படுகின்றது என்பதைப் பொறுத்தது. அம்முறையில் இந்நூல், அறிஞர்களுடைய உள்ளும் கவர்ந்த நூல் என்பதற்கு ஐயமில்லை. தொல்காப்பியத்திற்குப் பழைய உரைகண்ட இளம்பூரணரும் உச்சிமேற் புலவர்கொள் நச்சினார்க்கினியரும் பலவிடங்களில் இப்பாக்களை மேற்கோளாகக் காட்டுகின்றார்கள். பேராசிரியர், சேனாவரையர் ஆகியோருடைய உரைகளிலும் இடம்பெறுகின்றன. அகப்பொருளிலக்கணம் கூறும் நம்பியகப்பொருளிலும் காணப்படுகின்றன. மேலும், யாப்பருங்கல விருத்தி, இலக்கண விளக்கம் ஆகிய பிற இலக்கண நூற்களிலும் இவ்வகப்பாக்கள் மேற்கோளாகக் காட்டப்படுவது இதன் பெருமையினை விளக்கும்.

இனி, நூலிற்குச் செல்வோம். செல்லுமுன் முன்னோர் இலக்கியங்களிற் காணப்படுகின்ற அகவொழுக்

குறிஞ்சி



கத்தைப்பற்றிப் பொதுவான முறையிற் சில தெரிந்துகொள்ளவேண்டியது முதன்மையாகும். அகப்பொருள் நூற்களையும், குறிப்பாக இந்நூலினையும் பயில்வதற்கு அது துணையாக இருக்கும்.

## அகவொழுக்கம்

தலைமகன், தன் தோழர்கள் புடைசூழ, வேட்டவாறு வேட்டையாட, வேங்கையும் வேழமும் தேடிப் போகின்றான். போகின்றவன், ஒரு யானையினைக் கண்டானாக, அதனைத் துரத்திச் செல்கின்றான். தோழர்களும் அவனோடு தொடர்ந்து செல்கின்றார்கள். யானை கடுத்த விசையுடன் ஓடுகிறது. தலைவனும் சலிக்காது துரத்துகின்றான். இந் நிலையிற், களைப்புமேலிட்ட தோழர்கள், பின் தங்கிவிடுகின்றார்கள். தலைவன் மாத்திரம் களிற்றினை நாடி வருகின்றான். அக்குன்றின் மற்றொரு பகுதியில், தலைவி, தன் தோழியர் துணையுடன் வருகின்றாள். அவர்கள், பல்வேறு மணமும் நிறமுமுள்ள மலர் கொய்தற்குப் பிரிகின்றார்கள். தோழியர்கள், வெவ்வேறு பக்கம் செல்கின்றார்கள். தலைவியும் ஒரு பக்கம் செல்கின்றாள். களிற்றினைத் தேடி வருகின்ற காளை, மலரினை நாடி வருகின்ற மயிலினைக் காண்கின்றான். அவள் வனப்பும் தோற்றமும் அவள் ஓர் அணங்குகொல், அன்றி மாதர்கொல் என்ற ஐயத்தை அவன்பால் எழுப்புகின்றன. ஒருவாறு அவள் மலைவாழ் மானிட மங்கைதான் என்று துணிகின்றான். அண்ணலும் நோக்கினான்; அவளும் நோக்கினாள். இருவரும் மாறிப் புக்கிதயம் எய்தினர். குணகடலிட்ட நுகமும் குடகடலிட்ட முளையும் சேர்ந்ததுபோல, நல்லூழ் வலியினால் இருவரும் ஒன்று சேர்கின்றார்கள். இவள் தாயும் தந்தையும் யாரென்று அறியாதவனாய் அவனும், அவன் தாயும் தந்தையும் யாரென்று அறியாதவளாய் இவளும் அடுப்பாரும் கொடுப்பாருமின்றி ஊழ்வகையானே ஒன்று கூடுகின்றார்கள். இங்ஙனம் தெய்வப்புணர்ச்சி அல்லது இயற்கைப்புணர்ச்சி நிகழ்கிறது. களிறு தேடிவந்த காளை பிடியினையும், மணந்தரும் மலர் நாடிவந்த மங்கை மணம்

தரும் மணத்தினையும் பெறுகின்றார்கள். பின்னர்ப் பாங்கன் மூலமாகவோ, அன்றித் தோழி துணையினாலோ, அன்றி இடந் தலைப்பாடாகவோ கூட்டம் நிகழும். இங்ஙனம் சில காலம் களவொழுக்கம் நடக்கும். அப்பொழுது, தோழி தலைவனை வரைவிற்கான முயற்சிகளைச் செய்து வரைந்து கொள்ளுமாறு வற்புறுத்துவாள். தலைவனும், அம்முயற்சிகளைச் செய்தற்குப் பிரிவான். அப்பொழுது, தலைவி மெலிந்து நலிவுறுவாள். அம்மெலிவினைக் கண்டு வருந்துகின்ற செவிலி, நோய்முதலைத் தெரிந்துகொள்ளாதவளாய், முருகனுக்கு வெறியாட்டெடுப்பாள். தோழி, தலைவியின் நோய்க்குக் காரணம் இன்னதென உண்மையினைக் குறிப்பினானுணர்த்தி, அறத்தொடு நிற்பாள். வரைவு வேண்டித் தலைவன் தலைவியின் பெற்றோர்பால் செய்தி யனுப்புவான். அவர் அதற்கிசைதலுமுண்டு. இசைவில்லாது ஒரு தூமலர் வரைவு முடிக்க நினைத்தலுமுண்டு. இசையாத நிலையில், உடன்போக்கு நிகழும். இவைகளெல்லாம் களவொழுக்கத்தின்போது காணப்படுகின்றவை. இதற்குப் பிந்திய நிலைதான் கற்பொழுக்கம்.

## தலைவன்

இனி, இந்நூலில் குறிஞ்சித்திணையில் வருகின்ற தலைவன், தலைவி, தோழி முதலாயினோரைக் காண்போம். புலவர்கள், பாக்களில், உலகிலே காணப்படுகின்ற மக்களை அப்படியே காட்டுகின்றதுமுண்டு; எப்படி மக்கள் வாழ வேண்டுமென்று உணர்த்துதற்குத் தாங்கள் கற்பனையிற் கண்ட மக்களைக் காட்டுகின்றதுமுண்டு. இலக்கியம் அவ்வக் காலத்து நிகழ்ச்சிகளையும், மக்கட்பண்பினையும் காட்டு இன்ற கண்ணாடியுமாகும். எதிர்காலத்தில் மக்கள் எவ்விதம் வாழவேண்டும், எவைகளைக் குறிக்கோளாகக் கொள்ளு வேண்டுமென்று கூறி, அவர்கள் வாழ்க்கையினைத் திருத்த முயல்கின்ற ஒன்றுமாகும். அம்முறையில் நாம் இருவகை யான தலைவர்களைக் காண்கின்றோம். ஒருவன் குறிக் கோளாகக் கொள்ளப்படக் கூடியவன்; மற்றவன் மாறு பட்டவன். இவ்விருவகைப்பட்டவரையும் நூலில் அடுக்



தடுத்து மாற்றி மாற்றிச் சொல்வதால், ஒருவனுடைய பெருமையும் மற்றவனுடைய சிறுமையும் நன்கு விளங்கு கிறது.

தலைவன், ஒருநாள், தலைவியைப் பகற்குறிக்கண் சந்திக்க வருகின்றான். சற்று முன்னரே வந்துவிட்டான். தலைவி இன்னும் வரவில்லை. அவள் வரவிற்காகக் காத்திருக்கின்றான். அவள் மெதுவாக ஓசையில்லாது அடிமேலடிவைத்துப் பின்புறமாக வருகின்றாள். ஆழ்ந்த சிந்தனையிலிருக்கிற அவன் இதனை யறிந்தானில்லை. அப்பொழுது, தலைவிக்குத் தன்மனத்திற் சிலகாலமாக இவன் ஒழுக்கத்தினைப்பற்றித் தெரிந்துகொள்ள வேண்டுமென்னும் எண்ணம் வருகின்றது. இவன் உள்ளம் கவர்ந்த வேறு மங்கையருளரோ என அறிய விழைகின்றாள்; அதற்காக ஒரு சிறு தந்திரமும் செய்கின்றாள். அவன் பின்சென்று, அவன் கண்களைப் பொத்துகின்றாள்; வேறு மடந்தையருளரென்றால், அவள் பெயரைச் சொல்லுவானென்ற எண்ணத்தினால். ஆனால், அவனோ, அவளைத் தவிர வேறு எந்தப் பெண்ணையும் ஏதிலார்போலப் பொதுநோக்கு நோக்குதலேயன்றி மனத்தானும் எண்ணியதில்லை. அதனால், 'ஏ! கொடிச்சி! எதற்காக என் கண்ணினைப் புதைத்தாய்? உன்னைத் தவிர வேறு யாரேனும் என் நெஞ்சில் அமர்ந்திருந்தாலல்லவா, அதனைத் தெரிந்துகொள்ள நீ கண் புதைக்கவேண்டும்; எனக்கோ, உன்னைத் தவிர வேறு யாருமில்லையே' என்றான்.

"..............................என்கண் புதைத்தோயே!
பாயல் இன்துணை யாகிய பணைத்தோள்
தோகை மாட்சிய மடந்தை
நீயல தளரோவென் னெஞ்சமர்ந் தோரே." (ஐங்: உகூக)

இங்குத் தலைவனின் ஒருமனப்பட்டதும் ஒருமனைப் பட்டதுமான வாழ்க்கையினைக் காண்கின்றோம். இத் தன்மையான வாழ்க்கையினைத் தலைவன் மேற்கொள்ள வேண்டுமென்று தலைவி விரும்புவதைக் கம்பராமாயணத் திலே காண்கின்றோம்.



தலைவன் முன்னரேயே சோலைக்கு வந்துவிட்டான். தலைவியின் கூந்தலிற் சூடுதற்கு மலர்கொய்து கொண்டிருக் கின்றான். அப்பொழுது, தலைவி, பின்புறம் ஓசையில்லாது வந்து கண்ணைப் புதைக்கின்றாள். மக்கள் எல்லோரும்

வழக்கமாகக் கேட்பதுபோலத் தலைவன்
என்று கேட்டுவிட்டான். உடனே

"யார் புதைத்தது"

தலைவி, நெருப்புப்
போலப் பெருமூச்சுவிட்டு அழத்தொடங்கினாள். தான் பொத்தியவுடனே தன் கையின் மென்மையால் பெண்ணுடைய கையென்று தெரிந்திருப்பான், தலைவன். அப்படியானால், தன்னைத் தவிர அவன் கண்ணைப் பொத்துதற்கு உரிமையுடைய பெண் வேறு ஒருத்தியுமில்லையென்ற முறையில் தன் (தலைவியின்) பெயரைச் சொல்லி 'நீயா?' என்று கேட்டிருக்கவேண்டும். அங்ஙனமில்லாது 'யார்?' என்று கேட்டதனால், தலைவன் கண்ணைப் பொத்துதற்கு உரிமையுடைய பெண்கள் தன்னைத் தவிரவுமிருப்பர் போலும் என்று எண்ணினவளாய் அழத்தொடங்கினாள்.

"போரென்ன வீங்கும் பொருப்பன்ன
பொலங்கொள் திண்டோள்,
மாரன் அனையான் மலர்கொய்திருந்
தானை வந்து ஓர்
காரன்ன கூந்தல் குயிலன்னவள்
கண்புதைப்ப,
ஆர்என்ன லோடும் அனலென்ன
அயிர்த்து யிர்த்தாள்."

(கம்ப ராமா. பால காண். பூக்கொய் படலம்: கஅ)

தலைவன் தலைவிபால் எத்தகைய அன்புடையவன் என்பதை மற்றோரிடத்திற் காண்கின்றோம். அவன் இயற்கைப் புணர்ச்சிக்குப்பின் தோழியின் துணைகொண்டு கூட்டம் நிகழ்த்த விழைகின்றான். தோழியை நோக்கித் "தலைவி எனக்கருள் வில்லை யென்றாலும் நான் அவளை உள்ளுதலை மறந்தறியேன்," என்றான்.

"........................கொடிச்சி,
தான்எம் அருளா ளாயினும்,
யாம்தன் னுள்ளுபு மறந்தறியேம்." (ஐங்: உகஅ)

இவ்வரிகள்,

"உள்ளுவன் மன்யான் மறப்பின்
ஒள்ளமர்க் கண்ணாள் குணம்."

மறப்பறியேன்;
(குறள்: ககஉ௫)

என்ற குறளினை நினைவுபடுத்துகின்றன. குணம், வடிவு என்ற இரண்டனுள்ளே வடிவழகைக் காட்டிலும் குண நலந்தான் சிறந்தது என்ற முறையில் வள்ளுவர், "தலைவி யினது குணத்தினை மறப்பறியேன்" என்றார். ஆனால் கபிலரோ, குணம், வடிவு இரண்டினையும் உள்ளுகின்றான் என்ற பொருளில் எதனையும் குறிப்பிடாது, இரண்டினையு முணர்த்துமாறு "யாம் தன்னுள்ளுபு மறந்தறியேன்" என அமைத்தார்.

தலைவிபாற் கொண்டுள்ள அன்பு காரணமாக எவ்வித இன்னலும் இன்னலாகத் தோன்றவில்லை, தலைவனுக்கு. நள்ளிரவினையும் பொருட்படுத்துகின்றானில்லை. மழையும் பனியும் வருத்துவன என்று எண்ணினானில்லை. இரவுக்

குறியிடத்து வந்து நின்ருன். அவன் தோற்றம் எப்படி இருக்கிறது? இரவு கண்விழிக்கும் காவலாளனைப்போல நள்ளிரவில் வருகின்ருன். வாள், மழையில் நனைந்திருக்கிறது. கடந்து வந்த நீர்நிலைகளின் பாசி, கழலிற் படிந்திருக்கிறது. கட்டிய கச்சு, பனியால் ஈரமாகவிருக்கிறது.

"மாரிக் குன்றத்துக் காப்பா ளன்னன்;
தூவலின் நனைந்த தொடலை யொள்வாள்;
பாசி சூழ்ந்த பெருங்கழல்;
தண்பனி வைகிய வரிக்கச் சினனே."

(ஐங்: உ0க)

மற்ருெரு சமயம், இரவுக் குறிக்கண் வந்தான். அவன் வந்தவழியை எண்ணியபொழுது தோழிக்கு நடுக்கமேற்படுகின்றது. முதலில் இரவுக்குறிக்கண் சந்திக்குமாறு ஏற்பாடு செய்தவள் தோழிதான். அவளே இப்பொழுது அந் நெறியினை யெண்ணி, 'இனி இரவிலே வாராதே' என்று தலைவனிடம் சொல்கின்ருள்.

"........................................நாட!
ஆரிருள் பெருகின், வாரல்,
கோட்டுமா வழங்கும் காட்டக நெறியே" (ஐங்: உஅஉ)



"........................................நாட!
நடுநாட் கங்குலும் வருதி;
கடுமா தாக்கி னறியேன் யானே"

(ஐங்: உகூகூ)

இனி, வரைதற்கு வேண்டிய பொருளீட்டுதற்காகத் தலைவன் பிரிகின்றான். ஒரு காலத்தைக் குறிப்பிட்டு, அப்பொழுது வருவதாகச் சொல்கின்றான். சென்ற இடத்தி லெல்லாம் தலைவியின் நினைவுதான். மேற்கொண்ட வினை விரைவில் முடிந்துவிடுகிறது. சற்றும் காலம் தாழ்க்காது, தான் குறித்த காலத்திற்கு முன்னரேயே வந்துவிடுகின் றான். (உஉ௫; உ௫உ). அவனது வரைவு முயற்சிக்கு முன்னரே நொதுமலர் வரைவு முயற்சி நடக்கிறது. அதனை யறிந்தால் அவன் மாறுபட்டு எழுந்து எங்ஙனமும் தன் முயற்சி வெற்றி யடைதற்குரிய வழிகளை மேற்கொள்வா னென்பதைத் தோழி குறிப்பினாலுணர்த்துவாளாய்,

"சிறுகட் பன்றிப் பெருஞ்சின வொருத்தலொடு
குறுக்கை யிரும்புலி பொரூஉ நாட!"

(ஐங்: உகூகூ)

என்று விளிக்கின்றாள். "ஆண் பன்றியொடு புலிபொரும் நாடன் நீ. இப்பொழுது வரைவு வேண்டுகின்ற நொது மலரோ, பன்றியினை யொத்தவர்கள். நீயோ, இரும்புலி யன்னாய். உனக்கு அவர்கள் எவ்விதத்திலும் நிகராக மாட்டார்கள். நீ அவர்கள் முயற்சியினை விலக்கி வெற்றி கொள்ளவேண்டு" மென்று குறிப்பாலுணர்த்தித், தலைவ னுடைய பெருமையைக் காட்டுகின்றாள்.

இதுகாறும் சிறந்ததொரு தலைமகனைக் கண்டோம். உலகில் எல்லாத் தலைமகனும் இதுபோன்றிருப்பதில்லை. சிலர் இப்படியிருப்பார்கள். இன்னும் சிலர், இதற்கு மாறாகவு மிருப்பார்கள். "நீயல தளரோ என் நெஞ்சமர்ந் தோரே" என்று தலைவியை நோக்கிக் கூறிய தலைமகனைக் கண்டோம். அதற்கு நேர்மாறாக, வண்டுபோன்ற இயல்பினையுள்ளவன் மற்றொருவன். வண்டு, தேனிருக்கும் பூவை நாடிச் செல்கின்றது. தேனை யுண்ணுகின்றது. தேனற்றகாலைப் பிறிதொரு பூவினை நாடுகின்றது. "நறுந்தா



துண்டு நயனில்காலை வறும்பூத் துறக்கும் வண்டு" போன்ற அத்தலைமகனும் தலைவியை நண்ணுகின்றான்; பின்னர் வேறு மங்கையரை நாடுகின்றான் என்ற குறிப்பினை உவமையின்மூலம் சொல்கின்றாள், தோழி.

"நறுந்தண் சிலம்பின் நாறுகுலைக் காந்தள்
கொங்குண் வண்டிற்
பெயர்ந்து புற(ம்)மாறிநின்
வன்புடை விறற்கவின் கொண்ட
அன்பி லாளன் வந்தனன்."

(ஐங் : உ உ கூ)

மேற்சொல்லியபடி அவனிடம் பரத்தையரொழுக்க மிருப்பது மாத்திரமல்ல; அதை அவன் மறைக்க முயல் வதையும் காண்கின்றோம். பரத்தை வீட்டிலிருந்து வருகின் ருன்; அது தலைவிக்கும் தோழிக்கும் தெரிந்துவிடுகின் றது. தோழி, தலைவனிடம் அதனைப்பற்றி வினவுகின்ருள். ஆனல், அவனே, அறவே கிடையாதென்று மறுக்கின்றுன். தோழி விட்டபாடில்லை. "பரத்தை வீட்டிற்குச் செல்ல வில்லையென்று கூறுகின்ருயே; உன்னுடைய மார்பு அப் பரத்தையின் கூந்தல் மணமல்லவா வீசுகின்றது? நாங்கள் நின் புறவொழுக்கத்தை அறிந்துகொள்ளாமலில்லை; அறிந்துகொண்டிருக்கிறோம்" என்ருள்.

" அறியே மல்லேம்,'அறிந்தன மாதோ;
பொறிவரிச் சிறைய வண்டினம்(ம்) மொய்ப்பச்
சாந்த(ம்) நாறு(ம்) நறியோள்
கூந்தல் நாறு(ம்) நின்மார்பே தெய்யோ."

(ஐங் : உ௬0)

இனி, அவன் களவொழுக்கத்தின்கண், அன்புளதாகிய காலத்து வளைத்து வளைத்தொழுகியும், அன்பற்றகாலத்துப் பணிவின்றித் தலைமைசெய்து தலைவியின் நலங்கொண்ட கொடுமை தோன்றுகின்றவனக ஒழுகுகின்றுன். இதனை அவன் நாட்டினியல்பைக் கூறுகின்றவளைப்போலத் தோழி மிக அழகாகச் சொல்கின்ருள். மலையிற் சுனையருகே வளர்ந்திருக்கிறது, மூங்கில். அதன் கிளைகள் நன்கு வளைந்துகொடுக்கு மியல்பினையுடையவை. அக் கிளையொன் றில் ஒரு குரங்குக்குட்டி பாய்கிறது. உடனே அக் கிளை

வளைந்து, குளத்திலுள்ள தண்ணீரைத் தொடுகின்றது. அக் குட்டி, அக்கிளையினின்றும் கீழே குதிக்கிறது. அக் கிளை உடனே நிமிர்ந்துகொள்கிறது. மறுபடியும் அதிற் குட்டி தாவுகிறது; கிளை வளைகிறது; குட்டி நீங்குகிறது. கிளை நிமிர்கிறது. இவ்விதம் குரங்கிருக்கும்போது வளைவதாகவும், அது இல்லாத காலத்து நிமிர்வதாகவு மிருக்கிறது. "அத் தன்மையான நாடனே!" என்று தலைவனை யழைக்கின்றாள் தோழி. அன்பிருக்கும் காலத்துக் குரங்குக்குட்டியேறிய மூங்கிற் கிளைபோல வளைந்தொழுகுகின்றான். அன்பற்ற காலத்துக் குட்டி நீங்கிய கிளைபோல நிமிர்ந்து ஒழுகுகின்றான். இனி, அவன் நாட்டு மூங்கிற்கிளை வளைந்து தண்ணீரைத் தொடுவது மீனிடத்திரக்க மில்லாது அதனைப் பிடித்து வருத்துகின்ற தூண்டிலைப்போலத் தோன்றுமென்றதனால், தலைவியிடத் தன்பில்லாது அவளை வருத்துகின்றான் என்பதையு முணர்த்தினாள்.

"..............................கழைக் கோல்
குரங்கின் வன்பறழ் பாய்ந்தென இலஞ்சி
மீனெறி தூண்டிலின் நிவக்கும் நாடன்;
உற்றோர் மறவா நோய்தந்து,
கண்டோர் தண்டா நலங்கொண் டனனே."

(ஐங் : உஎஅ)

தூண்டிலில் விழுந்த மீனாகத் தலைவியைக் கூறிய தோழி, மற்றோரிடத்தில், தலைவனின் வலையில் விழுந்த மீனாகச் சொல்கின்றாள்.

"...............................நாட!
பெரிய கூறி நீப்பினும்,

பொய்வலைப் படூஉம் பெண்டு தவப்பலவே." (ஐங் : உ அக)

தலைவனுடைய கொடுமையைத் தோழி இன்னும் வெளிப்படையாகச் சொல்வதைப் பிறிதொரு செய்யுளிலே காண்கின்றோம். தோழி வரைந்துகொள்ளுமாறு வற்புறுத்தியும், தலைவன் வரையாது நீட்டித்துக்கொண்டே வருகின்றான். களவொழுக்கத்திற்குரிய இரண்டுமாத காலமும்



மும் கடக்கும் நிலை வந்துவிட்டது. ஊாரெல்லாம் அலர் தூற்றுகின்றார்கள். அப்பொழுதும் வரைந்தானில்லை. அது பொழுது தோழி, "மேகம் கருக்கொண்டு பயன்தரக்கூடிய நிலையிலிருக்கிறது. ஆண்குரங்கு ஒன்று நறைக்கொடி கொண்டு அடித்து அம்மேகத்தைப் பயன்தரவொட்டாது செய்கின்றது. அத்தன்மையான நாடனே! நீ இவளை முன்னர் விரும்பியதுபோல இப்பொழுது விரும்பாயெனினும் மணந்து செல்க. ஊராரும் உலகமுமறிய உன்னுடைய மனைவியென்று ஏற்று வரைந்துகொள்வாயாக" என்று கடுமையாகவும் பரிதாபத்துடனும் சொல்கின்றாள்.

"மந்திக் காதலன் முறிமேய் கடுவன்
தண்கமழ் நறைக்கொடி கொண்டு வியலறைப்
பொங்கல் இளமழை புடைக்கும் நாட!
நயவா யாயினும் வரைந்தனை சென்மோ;
கன்முகை வேங்கை மலரும்

நன்மலை நாடன் பெண்டெனப் படுத்தே." (ஐங்குறு : உஎகூ)

களவிற்குரிய இரண்டுமாத காலமும் கடந்து வரைதற் குரிய பருவம் வந்துவிட்டதென்பதை அழகாக "கன் முகை வேங்கை மலரும் நாடன்" என்ற தொடரின்ற் குறிப்பிடுகின்றாள். இப்பாட்டின் உள்ளுறையுவமமாக உரை யாசிரியர் சொல்கின்றது, தலைவனுடைய கொடுமையினை நன்கு புலப்படுத்துவதாக இருக்கின்றது.

> "மேல் கருக்கொண்டு முற்றிப் பயன்படுவதாய
> இளமுகிலை மந்தி நறைக்கொடிகொண்டு புடைக்
> கும் நாட வென்றது, வரைந்து மகப்பெறுதற்
> குரியளாகிய இவளை இம்மறைந்த ஒழுக்கத்தாலே
> கொலைசூழ்கின்றுயென்பதாம்."

## தலைவி

இனி, இப்பகுதியில் வரும் தலைவியினைக் காண்போம். அக் கொடிச்சி மலையிற் காணப்படும் தெய்வத்தினைப் போன்ற சாயலள். தோற்றத்தாலும் குணத்தினாலும் கண்டோர் வியக்குந் தன்மையள். அரும்பிய கொங்கையள்.

சிவந்த வாயினள். சுணங்கு பூர்பினள் (உருரு). வண்டுகள் வந்து படியும்படியான இயற்கை மணமுள்ள கூந்தலையுடையாள். கையில் வளையினையுடையாள். முளைபோன்ற பல்லினையுடையாள். இளையள் (உருக). மலையில் வாழும் மங்கையரின் ஆயவெள்ளத்திலே "நல்லள் நல்லள்" என்று கொண்டேத்தப்படும் இயல்பினள் (உ0ச). குன்றக் குறவன் கடவுளை வணங்கி இரந்து பெற்றெடுக்கப்பட்டவள் (உருஎ). அப் பாவையன்ன ஆய்கவினுடைய (உஉக) நங்கையைத் தலைவன் கண்டான்; இவள் மலைவாழ் மங்கைதானோ என்று ஐயங்கொண்டான். அவளது உறுப்பு நலன்களை வியக்கின்றான். "மகளிர் கண்ணிற்குக் குவளையினை யுவமை கூறுவார்கள். ஆனால், இவள் கண்ணோடு ஒப்பிடுகின்ற பொழுது குவளையும் தன் எழில் குன்றும். மயிலொத்த சாயல் என்பதுலக வழக்கு. ஆனால், மயிலும் இவளிடத்திலே சாயல் கற்றுக்கொள்ள வேண்டும்" என்று பாராட்டுகின்றான்.

"பைஞ்சுனைப் பூத்த பகுவாய்க் குவளையும்
அஞ்சி லோதி யசைநடைக் கொடிச்சி
கண்போல் மலர்தலு மரிதிவள்
தன்போற் சாயல் மஞ்ஞைக்கு மரிதே." (ஐங் : உகக)

இவ்வரிகளிலடங்கிய கருத்தினைக் குறளிலும் மணிமேகலையிலும் காண்கின்றோம்.

"காணிற் குவளை கவிழ்ந்து நில(ன்)நோக்கும்;
மாணிழை கண்ஒவ்வேம் என்று." (குறள் : ககககச)

தலைவியின் கண்ணிற் கிணையாகமாட்டோம் என்று குவளைமலர் வெட்கத்தினால் தரையை நோக்கித் தலையைக் கவிழ்த்துக் கொள்ளும்.

"..................இவள் (மணிமேகலை)
மாமலர் கொய்ய மலர்வனந் தான்புகில்,
..........................................
மாமயி லாங்குள வந்துமுன் நிற்பன
சாயல்கற் பனகொலோ தையல் தன்னுடன்."
(மணிமேகலை - மலர்வனம் : கநிக - ரு)

## குறிஞ்சி

141

"மாதரார் தொழுதேத்த வயங்கிய பெருங்குணத்து"க் காதலாளாகிய தலைவியிடம் தலைவன் களவில் இடையறாது வந்தொழுகுகின்றான். சில சமயங்களில் தலைவன் வர முடியாமலோ, வந்து சந்திக்க முடியாமலோ போய்விடுகின்றது. அன்றெல்லாம் அவள் படுந்துயரம் சொல்லுந்தரமன்று. அவன் வாராமற் கழிந்த நாள் அவளுக்கு உண்மையிலே வாழ்ந்த நாளாகத் தோன்றவில்லை. வறிதே கழிந்த நாளாகின்றது. வள்ளலாகிய அதிகமானில்லாத நாளினைப்,

புலவர் ஔவையார் "இல்லா கியரோ காலை மாலை, அல்லா கியர் யான் வாழும் நாளே" என்று கருதியதுபோலத் தலைவனைக் காணப்பெறாத தலைவியும் கருதுகின்றாள். போர்க்களத்தே சென்று விழுப்புண் படாத நாளையெல்லாம் வறிதே கழித்த நாளாகப் போர்வீரன் எண்ணி வருந்துதல் போலத் தலைவனுடைய மார்பினை முயங்காத நாளெல்லாம் வீணான நாட்களென்று கலுழ்கின்றாள்.

"..................................நாடன்
பெருவரை யன்ன திருவிறல் வியன்மார்பு
முயங்காது கழிந்த நாள் இவள்

மயங்கிதழ் மழைக்கண் கலிழும்."
(ஐங் : உ௨0)

நனவிலே அவன் மார்பினை முயங்கப்பெறாத சில நாட்களில் கனவிலே அவனைக் கண்டு முயங்க முயல்கின்றாள். தலைவன் இடையீடில்லா தொழுகுகின்றான். விரைவில் வரைதற்கும் முயல்கின்றான். அவ்விதமிருந்தும் தலைவியின் மேனி பசந்திருக்கிறது. காரணம் என்னவென்று தோழியை வினவுகின்றான். "நின்னைக் கனவிலே கண்டு புல்லினாள். விழித்துப்பார்த்தாள். நனவிலே காணவில்லை. அதனால் மேனி பசந்தது" என்றாள்.

"நன்னுதல் பசத்த லாவது துன்னிக்
கனவிற் காணு மிவளே
நனவிற் காணாள் நின்மார்பே தெய்யோ." (ஐங் : உ௩௪)

இக் கருத்தினை வள்ளுவர் "கனவுநிலை யுரைத்தல்" என்ற அதிகாரத்தில் தெளிவாகவும் விளக்கமாகவும் கூறு

வதைக் காண்கிறோம். நனவில் அன்பு செய்யாதவரைக் கனவிற் காண்பதால் என்னுயிர் போகாதிருக்கின்றது என்றாள், குறளில் வரும் தலைவி.

"நனவினால் நல்கா தவரைக் கனவினால்
காண்டலின் உண்டு என்உயிர்." (குறள் : கஉகந)

தூங்குகின்றபொழுது கனவில் தோன்றித் தோள்மேல் உள்ளவராய் விழித்தபொழுது நெஞ்சினுள்ளே விரைந்து சென்று ஒளித்துக்கொள்வார் என்றாள்.

" துஞ்சுங்கால் தோள்மேல ராகி விழிக்குங்கால்

நெஞ்சத்த ராவர் விரைந்து." (குறள் : கஉகஅ)

மேற்கண்ட இரண்டு நூற்களிலும் கனவினைப் பற்றிச் சொல்லியிருக்கின்ற செய்திகள் தற்காலத்து உள நூலறிஞ ராகிய பிராயிட் (Freud) மிகவும் ஆராய்ந்து கண்ட உண்மையினை வெளியிடுகின்றவையாக இருக்கின்றன. மக்கள் நனவிலே செய்யமுடியாத செயல்களையும்,

ஈடேற்றிக் கொள்ள முடியாத விருப்பங்களையும், கனவிலே செய்வது போலவும், பெறுவதுபோலவும் கண்டு தங்களுடைய அடக்கி வைக்கப்பட்ட ஆசைகளை (Suppressed desires) நிறைவேற்றிக்கொள்கின்றார்களென்பது அவர் கண்ட ஓர் உண்மை. நனவிலே தலைவனைப்பெற விரும்புகின்றாள் தலைவி. பெறமுடியவில்லை. அவனைக் கனவிலேபெறுவதைக் காண்கின்றோம். அடுத்து அவர் கண்ட உண்மை கனவு நிலைத்திருக்கின்ற காலம் மிகவும் குறுகியதென்பது. அதனை "விழிக்குங்கால் நெஞ்சத்தராவர் விரைந்து" என்ற தொடரிற் காண்கின்றோம்.

இனி, தலைவன் வரைவிடை வைத்துப் பிரிகின்றான். அப்பிரிவின்கண் தலைவி தனிமையில் அனுபவிக்கும் மனத் துயரம் அதிகம். எப்பொழுதும் அவன் நினைவுதான். இரவிலும் தூக்கமில்லை. பகலிலுமில்லை. பாயல் துறந்தாள். உறக்கமில்லையாகவே ஊணுமில்லை. இரண்டுமில்லையாகவே உடல் வாடிக் கவினழிந்தது.

குறிஞ்சி

143

"................................நாடன்
சென்றனன் வாழி தோழியென்
மென்றோட் கவினும் பாயலும் கொண்டே."

(ஐங் : உஎ௯)

இதனைத்தான் வள்ளுவர் அழகாகச் சொல்கின்றார் :

"வாராக்கால் துஞ்சா வரில்துஞ்சா ஆயிடை
ஆரஞர் உற்றன கண்."

(குறள் : ௧௧௭௯)

தலைவன் வரவில்லையென்றாலும் தூக்கமில்லை. அவன் வருவானேயாயினும் முயங்குதல் காரணமாகத் தூக்கமில்லை, கண்கள் மிக்க துன்பத்தை யடைந்தன என்றார்.

சாயலும் கவினும் கொண்டு சென்றவன் கைம்மாறாக என்ன கொடுத்துச் சென்றான்? நோயினை. காலை யரும்பிப் பகலெல்லாம் போதாகி மாலை மலர்கின்ற காம நோயினைக் கொடுத்துச் சென்றான்.

"..................................நாடன்
உற்றாஓர் மறவா நோய்தந்து

கண்டோர் தண்டா நலங்கொண் டனனே."

(ஐங் : ௨௭௮)

அத்தலைவன் இவள் நலனை மாத்திரங் கொண்டு செல்லவில்லை. இவள் நெஞ்சையும் கொள்ளைகொண்டு சென்றுவிடுகின்றான். இவள் நெஞ்சம் இவளிடத்திலேயேயிருந்து இவள் வழியிருப்பதற்கு மாறாக அவன் வயிற்சென்றுவிட்டது. அந்த நெஞ்சுதான் திரும்பத் தன்னிடத்திலே வருமா அல்லது அங்கேயே தங்கிவிடுமா

கூறுகின்ற பொழுது நம்மையறியாமலே

என்று தலைவி

ஓர் இரக்கம்

ஏற்படுகிறது.

“வருவது கொல்லோ தானே வாரா(து)
அவண் உறை மேவலின் அமைவது கொல்லோ
..........................................
குன்றுகெழு நாடனொடு சென்றஎன் நெஞ்சு.” (ஐங் : உகரு)

இதனைக் குறளில் வரும் தலைவி “பேதை நெஞ்சு” (குறள் : கஉசஅ) என்று சொல்கின்றாள். அந்நெஞ்சு



இவளைத் துறந்து
புலவர் அழகாகச்

அவன்வயிற் சென்ற
சொல்கின்றார்.

நிலையினை மற்ெருரு

"சென்றதுகொல் போந்ததுகொல் செவ்வி

பெறுந்துணையும்
நின்றதுகொல் நேர்மருங்கிற்

கையூன்றி—முன்றில்
முழங்குங் கடாயானை மொய்ம்மலர்த்தார் மாறற்(கு)
உழந்துபின் சென்றவென் னெஞ்சு."

(முத்தொள் : ௬௧)

அவனைப் பிரிந்த நிலையில் அவள் மலையினைக்

கண்டா
ளாக அவன் நினைவு வந்துவிடுகின்றது. அருவி அவன் தொடர்பினை மனக்கண்முன்னர்க் கொண்டுவருகின்றது. உடனே அழத்தொடங்கிவிடுகின்ருள். ஆனால் மற்ெருரு சமயம் தலைவனது அக்குன்றே அவனைப் பிரிந்திருக்கின்ற தலைவிக்கு அவனைக் காண்பதுபோன்ற ஓர் எண்ணத்தினை யுண்டாக்கி அவள் துயரை ஆற்றுகின்றது. (உ௦எ)

இதே இரண்டு நிலைகளையும் சீதையினிடம் காண்கின்றோம். இராமனைப் பிரிந்து அசோகவனத்தில் தங்கியிருக்கின்றாள் சீதை. துயரமே வடிவெடுத்த தொத்தாள். அப்பொழுது கறுப்பாக உள்ள எந்தப் பொருளைக் கண்டாலும், கண்ணுக்கிடு மையானாலும் சரி, கருக்கொண்ட கார்மேகமானாலும் சரி, உடனே அவளுக்குக் கார்மேக வண்ணனாகிய இராமன் நினைவு வருகின்றது; அழத்தொடங்குகின்றாள்.

"அரிய மஞ்சனே டஞ்சனம் முதல் இவை யதிகம்
கரிய காண்டலும் கண்ணில் நீர் கடல்புகக் கலுழ்வாள்."
(சுந்தரகாண்-காட்சிப் : எ)

மற்றொரு சமயத்தில் அவள் அவ்வனத்தில் அடிக்கடி பொய்கைக் கரைக்குச் செல்வதாகவும் அங்குத் தண்ணீரினையும் அந்நீரிலே இராமனது கண்ணையும், கையையும், வாயையும், அடியையும் போலப் பூத்திருக்கும் தாமரைகளையும் கண்டு அவனையே கண்டது போன்ற அமைதியுடையாளாய் ஆறுதலடைவதாக அநுமனிடம் சொல்கின்றாள்.



"வீரன் மேனியை மானும்இவ் வீங்குநீர்
நார நாண்மலர்ப் பொய்கையை நண்ணுவென்

சோரு மாருயிர் காக்கும்

துணிவினுல்."
(சுந்தர - சூளாமணி: உ௯)

தலைவனைப் பிரிந்த தனிமைநிலையில் உடம்பிலே பசப்பு அள்ளிக்கொள்கின்றது. ஆனுல் அவன் வரவும் அவளது இழந்த நலம் திரும்ப எய்தப்பெறுகின்ருள்.

"..................................நின்
மென்தோள் ஞெகிழவும் திருநுதல்
பசப்பவும்
பொன்போல் விறற்கவின் தொலைத்த
குன்ற நாடன்"
(ஐங்குறு: உ௩௦)

"..................................சிலம்ப!
நீ இவண் வரூஉங் காலை
மேவரு மாதோ இவள்நலனே."
(ஐங்குறு: உ௩௮)

இங்ஙனம் கனவில் வருவதும் பிரிவதுமாக இருக்கிறான் தலைவன். சில சமயங்களில் பகற் குறியிடங்கள் இரவுக் குறியிடங்களிற் சந்திக்கின்றார்கள். ஆனால் ஒரோவழி அல்லகுறிப் பட்டபோது தலைவியின் நிலை வருந்துதற்குரியதாக இருக்கிறது. அடங்கியிருந்த காதலுணர்ச்சி குறியிடத்திற்கு வந்தவுடன் வெளிக்கிளம்புகிறது. ஆனால் தலைவனைச் சந்திக்க முடியவில்லை. அப்பொழுது நாம் தலைவனுடனேயே அவனூரிலிருந்தால் நல்லதல்லவா என்ற எண்ணம் வருகின்றது. தலைவிக்கு அங்கேயே போய்விட்டாலென்ன என்றும் தோன்றுகின்றது. அவளை, 'உன் ஊர் எங்கிருக்கிறது?' என்று கேட்கின்றாள் தோழி (உ௩௭). 'அங்கே போவோம் வா. புறப்படு' என்றாள் (உ௩௯.)

தனக்குப் பிரிவினா லேற்படும் துயரத்திற்கெல்லாம் ஒரு முற்றுப்புள்ளி வைத்துவிடலாம், தலைவன் வரைந்து கொள்வானேயாயின், என்று எண்ணுகின்றாள். ஆனால் அவனோ "வரைவல் வரைவல்" என்று நீட்டித்துக் கொண்டே வருகின்றான். ஆனால் வரைந்தபாடில்லை. இங்





நிலையில் தலைவனுடைய மனம்மாறி விரைவில்

வரைந்து

கொள்ள வேண்டுமென்று

கடவுளை வழிபடுகிறாள்.

"மலையுறை கடவுள் குலமுதல் வழுத்திக்
..............................................
கலிழ்ந்த கண்ணாள்எம் அணங்கி யோளே."

(ஐங்: உருக)

களவு முடிந்து கற்பொழுக்கத்தில் வாழ்கின்ற பொழுதும் தனக்கே உரிய ஒருத்திக்கே அவன் சொந்தமாக இருக்கவேண்டும், பிற மகளிரது 'ஒல்லா முயக்கிடை தலைவன் தார் குழைதல்கூடாது' என்ற தலைவியின் விருப்பத்தைத் தோழி நயம்படக் கூறுகின்றாள். "தலைவனே! உன்னுடைய நாட்டில் கொடிச்சி தினைமாவினை யுண்டு ஐவன நெல்லிற்படியுங் கிளிகளை ஓட்டுவாள். அது போன்று இப்பொழுது களவில் இன்பம் நுகர்ந்து பின் உன்னை வரைந்து நின் மனைச்செல்வமும் பிற மகளி

ரொழியத் தானே நகரும் வேட்கையுடையவள்" (ஐங்: உஅடு) என்று தோழி சொல்கின்றாள். தலைவன் வரைந்து கொள்கின்றான். இல்லறம் நடாத்துகின்றான். பொன் போல் அழகிலும் குணத்திலும் சிறந்த புதல்வனைப் பெறுகின்றான். தலைவனுக்கோ தலைவியினிடத்தில் முன் கொண்டிருந்த அன்பு வரவரக் குறைகின்றது. புது மலர் நாடிச் செல்கின்றது அவ்வண்டு. தலைவியை மறந்தான். அதுமாத்திரமல்ல. துறந்தான். அதனோடு புதல்வனையும் மறந்துவிடுகின்றான். அதனை அவளாற் பொறுக்க முடியவில்லை. இந்நிலை நீடிக்குமே யானால் தான் இறந்துபட வேண்டியதுதான் என்ற முடிவிற்கு வருகின்றாள். அவள், ஊடல் தீர்க்க அனுப்பிய வாயில்மாக்களின் மூலம் தலைவனுக்குச் சொல்லியனுப்புகின்றாள். "நாடன் என்னை நீத்தான்; அதுமாத்திரமல்ல, பொன்போற் புதல்வனையும் மறந்தனன்; புலி, பெண்பன்றியினைக் கொன்றுவிட, அதன் குட்டியினைத் தந்தையாகிய ஆண்பன்றி காத்துவளர்க்கும் நாடு அவன் நாடு. அதனால் இவ்வொழுக்கம் பொறாதவளாய் நானிறக்க இப்புதல்வனை அவன் வைத்து வளர்ப்பான்" என்றுணர்த்துகின்றவளாய்,

குறிஞ்சி 147

"புலிகொல் பெண்பாற் பூவரிக் குருளை

வளைவெண் மருப்பிற் கேழல் புரக்கும்

குன்றுகெழு நாடன் மறந்தனன்
பொன்போற் புதல்வனோ டென்னீத் தோன்"
(ஐங்: உசுகு)

என்று கூறுகின்றாள்.

இனி, நாடாயினும், காடாயினும், மேடாயினும், பள்ளமாயினும் தலைவனிருக்குமிடம் அவளுக்கு இன்பம் பயப்பதாக இருக்கின்றது. தலைவி தலைவனுடைய நாட்டிற்குச் சென்று திரும்புகின்றாள். தோழி அவளிடம் "நீ சென்ற தலைவனுடைய நாட்டில் தண்ணீர் சுவையுள்ளதாக இராதே, நீ எங்ஙனம் அந்தத் தண்ணீரை நுகர்ந்தாய்" என்று கேட்கின்றாள். அதற்குத் தலைவி, "அவருடைய நாட்டில் கிணற்றில் விலங்குகள் பருகி எஞ்சிய கலங்கல் நீர்தான் உண்டு; எஞ்சிய அந்தக் கீழான கலங்கிய தண்ணீர் எனக்கு எவ்வளவு இனிமையானதாக இருந்தது தெரியுமா? நம் வீட்டுத் தோட்டத்திலிருக்கும் இறாலிலிருந்து எடுத்த தேனும் நம் வீட்டுப் பசுவிற் கறந்தபாலும் கலந்த கலவைகூட எனக்கு அவ்வளவு இனிமையானதாக இல்லை" என்றாள்.

"...................................நம்படப்பைத்
தேன்மயங்கு பாலினும் இனிய அவர்நாட்டு
உவலைக் கூவற் கீழ
மானுண்டு எஞ்சிய கலிழி நீரே."

(ஐங்: உ0௩)

இங்கு ஒரு சிறந்த உண்மையினைக் காண்கிறோம். தலைவி வரைவு முடிந்தவுடன் தன் கணவன் வீட்டோடு இணைந்து கொள்கிறாள். பிறந்த வீட்டின் பெருமையினை எண்ணுகின்றாளில்லை; தலைவனிருக்குமிடம் பிறந்த இடத்தினும் சிறந்தது என்ற எண்ணம் ஏற்படுகிறது. அதனால் வாழ்க்கையில் இன்பத்தினைக் காண்கின்றாள். ஆனால் இக்காலத்திலோ பெண்கள் தாங்கள் வயதாகிச் சாகின்ற வரைக்கும் பிறந்த இடத்தின் பெருமையினையே எண்ணுவதையும் பேசுவதையும் சமயம் வரும்போதெல்லாம் [illegible]வனிடம் குத்திக் காட்டுவதையும் பார்க்கின்றோம். அ



பெரும்பாலான வீடுகளில் கணவனுக்கும் மனைவிக்குமோ அன்றி மாமியாருக்கும் மருமகளுக்குமோ சண்டைகள் இருந்து கொண்டிருப்பதைக் காண்கின்றோம். வாழ்க்கை வெற்றியடைய வேண்டுமென்றால், வாழ்க்கையில் இன்பங் காண வேண்டுமென்றால் ஒவ்வொரு பெண்ணும் மேலே சொல்லப்பட்ட தலைவியின் மனநிலையினைக் கொள்ள வேண்டும்.

இனி, தலைவனில்லாத இடம், எத்துணை வளமுடையதாக இருந்தாலும் சிறப்புடையதாகத் தலைவிக்குத் தோன்றுவதில்லை. தலைவன் வரைவிற்காகப் பொருள் தேடுதற்கு அவன் நாட்டைவிட்டு நெடுந்தூரம் சென்றிருக்கின்றான். அவன் நாட்டில் கிழங்குகளை உண்ணுவதற்குப் பன்றிகள் நிலத்தினை யகழ்ந்தன. அதனையே யுழுததாகக் கொண்டு மறுபடி யுழாமல் விதைத்தார்கள் குறவர்கள். பயிர் நன்றாக விளைந்துவிட்டது. அதனைக் கானவர் கொய்தனராய்ப் பெயர்கின்றார்கள். குறவர் முயற்சியில்லாமலே விளையும் நாடாக இருந்தாலும் அவன் அப்பொழுது அங்கில்லாத நிலையில் அது தலைவிக்கு அற்பமான குன்றாகவும் தனிமையான மலையாகவும் தோன்றுகின்றது. (உ௭௦) இது பெற்றோர்க்கோர் உண்மையை யுணர்த்துகிறது. பெண் செல்வக்குடியிற் பிறந்திருப்பாள். ஆனால், மாப்பிள்ளை அவள் போன்று செல்வநிலையில்லாது நன்கு படித்தவனாக இருப்பான்; அவன் படிப்பினைக் கருதிப் பெண்ணைக் கொடுக்கின்றார் தந்தை; திருமணம் முடிந்தவுடனே மாப்பிள்ளையைத் தன் வீட்டில் வந்திருக்கச் சொல்கின்றார் மாமனார்; ஆனால் மருமகனோ அங்குச் சென்று வாழ விரும்பவில்லை. அது தன் பெருமைக்கு இழுக்கு என்றெண்ணுகின்றான். இந்நிலையிற் பெண்ணைக் கணவன் வீட்டிற்குக் கூட்டி யனுப்ப மறுக்கின்றார். கணவனில்லாத இடம் எவ்வளவுதான் செல்வங் கொழிக்கின்ற இடமாயிருப்பினும் அதனை வறிய இடமாகவே கருதுவார்கள் பெண்கள் என்பதைப் பெற்றோர் உணரவேண்டும். அதற்கு இப்பாட்டுத் (உ௭௦) துணை செய்கிறது.

## தோழி

இனி, இக் காதல் நாடகத்திலே முக்கியப்பங்கினைக் கொண்டுள்ள தோழியினைப் பார்ப்போம். அவள்தான் இந்நாடகத்திற்கே உயிர் நாடியாக உள்ளவள். அவளில்லை யென்றால், தலைவன் தலைவி இருவரிடையேயும் சந்திப்பே இருக்கமுடியாது. அவள் இருவரிடையேயும் செல்லும் தூதாகவுமிருக்கின்றாள். குறியிடங்களேற்படுத்துகின்றாள். தலைவன் களவுப் புணர்ச்சியில் ஒழுகுங்கால், அவ்வொழுக்கத்தை விடுத்து, வரைந்து கொள்ளுமாறு செய்கின்றாள். தலைவியின் காதலினைச் செவிலிக்கு அறிவுறுத்தி, அறத்தொடு நிற்கின்றவளும் அவள்தான். அவளும் தலைவியும் ஈருடலும் ஒருயிருமாகவேதானிருக்கின்றார்கள். தலைவியின் வருத்தத்தைத் தன்னுடையதாகவும், தலைவியுடைகின்ற மகிழ்ச்சியைத் தனக்கே ஏற்பட்டதாகவும் கொள்கின்றாள். அவள் கூலிக்கு அமர்த்தப்படுகின்ற வேலைக்காரி போன்ற பாங்கியல்ல; பெரும்பாலும் எல்லாவகையாலும் தலைவியினை யொத்த, அவளுக்குச் சமானமான நிலைமையினையுடைய உயிர்த்தோழியாவாள்.

தலைவன் வரைவிடைவைத்துப் பிரிய எண்ணினான். அதனைத் தலைவியிடம் கூறினான். அவளோ இசைந்தாளில்லை; வருந்தினாள். ஆனால், தலைவன், அவளை ஒருவாறு ஆற்றிவிட்டுத் தோழியிடம் வருகின்றான். அவளிடமும் பிரிவைப்பற்றிச் சொல்கின்றான். அவளோ, அதிகமாக அழத் தொடங்கிவிடுகின்றாள். அப்பொழுது தலைவன், தோழியை நோக்கி, "உன் தலைவியிடம் இப்பிரிவினைச் சொல்லி, அவளை ஒருவகையாக ஆற்றிவிட்டேன். ஆனால், உனக்கு ஆறுதல் சொல்ல என்னால் இயலவில்லையே. நீ அவளைக் காட்டிலும் அதிகமாகவல்லவா கலுழ்கின்றாய்" என்றான். அதற்குத் தோழி, "நீ நினைப்பது போன்று இல்லை. தலைவி, நீ பிரிந்தால், என்னைக்காட்டிலும் அதிகமாக வருந்துவாள்" என்றாள். தலைவனுக்குத் தோழி அதிகம் கலுழ்வதாகத் தோன்றுகின்றது; ஆனால், தோழியோ, தன்னைக் காட்டிலும் தலைவி அதிகம் கவலை கொள்வா



ளென்று சொல்கின்றாள். அவன் பிரிவினால் இருவருமடைகின்ற துயரம் ஒன்றற்கொன்று குறைந்ததல்ல என்பதையே காட்டுகின்றது. (௨௭௩)

தலைவன் தோழியிடம் குறை நயந்தான்; தோழியும் தலைமகளைக் கூட்டிவைக்கிறாள். இவ்வொழுக்கத்திலே தலைவன் இடையிலே பலநாட்கள் வரவில்லை. தலைவி மேனி

பசந்தது; வளை கழன்றது; தோள் நெகிழ்ந்தது; அவள் உடல் நலிந்தது. அப்பொழுது தோழி தலைவியை நோக்கி, "உன்னுடைய இந்த வருத்தத்திற்கெல்லாம் யானல்லவா காரணம்? அவனை நல்லன் என்றுதேறி உங்களிருவரிடையேயும் கூட்டத்திற்கேற்பாடு செய்தேன். அவ்விதம் அவனை நல்லனென்று தேறி முன்செய்த மடமையாலல்லவா, இப்பொழுது நீ வருந்துகின்றாய்? அவன் இன்னும் வாராது அவன் நாட்டிலே தங்குதலை நீட்டிப்பானேயானால், நான் நீ யழும்படியாக நின் துணையை இழப்பேன்; அதாவது இறந்து போவேன்" என்று தோழி சொல்கின்றாள். இங்குத் தலைவி படும் துயரம் காணப்பொருதவளாகத் தோழி இறந்துபட விரும்புவதைக் காண்கின்றோம்.

"..............................நாடன்
வாராது அவண்உறை நீடின்,நேர்வளை
இணையீ ரோதி நீயழத்,
துணைநனி யிழக்குவென் மடமை யானே." (ஐங்: உசுக)

இனி, அவளது தூது முயற்சியினைக் காண்போம். தலைவன் இயற்கைப் புணர்ச்சிக்குப் பின்னர்த் தோழியின் துணைகொண்டு தலைவியோடு தொடர்புகொள்ள விரும்புகின்றான். தலைவி யுடுப்பதற்குத் தன் மலையிலிருக்கும் தழைகளைக் கொண்டுவந்து தோழியிடம் கொடுக்கின்றான். அவனது ஆற்றாமையைக் கண்டு அவன்பால் இரக்கங் கொண்டு, அத்தழையினை வாங்கிச் செல்கின்றாள். தலைவியோ, நாணம் காரணமாக வாங்கத் தயங்குகின்றாள். 'தழை வாடுகின்றது; வாங்கிக்கொள்' என்று தலைவியிடம் சொல்கிறாள்.

# 151

தலைவன் களவொழுக்கத்தையே நீட்டிக்கின்றான்; வரைதற்கான முயற்சி எதுவும் செய்கின்றானில்லை. தலைவனுடைய இந்தப் போக்கு தோழிக்குப் பிடிக்கவில்லை. தானும் தலைவியும் வெறுப்பதனைக் குறிப்பாக அவனிடம் சொல்கின்றாள். அவன் நாட்டினியல்பைக் கூறுகின்றவளைப்போல அவனியல்பைக் கூறுகின்றாள். "தினைப் புனத்தில் வந்து படிகின்ற கிளிகளைக் கொடிச்சியோப்பவும், மறுபடியும் மறுபடியும் அப்புனத்தில் களவிலுண்ணுதற்கே வருகின்றன கிளிகள், நின் நாட்டில். அதுபோன்று, நாங்கள் கடியவும், நீ களவில் இன்பம் நுகரவே விரும்புகின்றாய்," (உஅஉ) என்றாள். இதனினும் சற்றுக் கடுமையாகவிருக்கிறது, மற்றோரிடத்திற் சொல்வது. "நின் நாட்டில் பயிர் விளைப்பார் விலங்குகள் வந்து பயிர்களை அழித்துவிடாமலிருப்பதற்காகப் பொய்ம்மை வகையால் புலிபோன்று ஒன்று செய்து, அதற்குக் கண்களுக்குப் பதிலாகக் கழற்சிக் காயினையும் பதித்து நிறுத்தி வைத்திருப்பார்கள். ஆண்புலியானது காமவேட்கை மிகுந்து அப் பொய்ப்புலியினை மெய்ப்புலியென்றெண்ணித் தழுவிச் சேர்ந்து காம இச்சையினைத் தீர்த்துக்கொள்ளும். நீயும் அதுபோன்று பயன்தரும் வரைவிடைப் புணர்ச்சியினை விரும்பாது, இம்மாயப் புணர்ச்சியினையே விரும்புகின்றாய்" என்றாள்.

"கன்முகை வயப்புலி கழங்கு மெய்ப்படூஉ

மெய்ம்மை யன்ன பெண்பாற் புணர்ந்து
மன்றிற் பையுள் தீரும்

குன்ற நாடன்."

(ஐங் : உசகு)

இப்பொழுதும் தலைவன் வரைந்துகொண்டு அவளைப் பிரியாதிருக்க முயற்சியினைச் செய்தானில்லை. மறுபடியும் ஒருநாள் வந்தான். வந்து பக்கத்தில் மறைந்திருந்தான். அவன் வந்தது தோழிக்கும் தலைவிக்கும் தெரியும். இருந்தும் தெரியாதவள்போலச் சிறைப்புறத்திருக்கும் தலைவன் கேட்கும்படியாகத் தலைவியினிடம் பேசுகின்றாள் தோழி.

"முன்னர் அவர் பிரிந்தகாலத்தில் உனக்கு நுதல் பசந்தது, தோள் நெகிழ்ந்தது. நினைவிருக்கிறதா? அவர் வந்தவுடன் அதனைச் சொன்னோம். அது கேட்டு அவர், 'இனிமேல் தலைவி அங்ஙனம் வருந்த நான் பிரியேன். பிரியின் உயிர் தரியேன்' என்று ஒரு சூளுரைத்தாரே அதனை நீ மறந்துவிட்டாயா? இல்லை, இன்னும் நினைவில் வைத்திருக்கின்றாயா? மறக்கவில்லையென்றால் உடனே மறந்துவிடு. அவர் நம்மையும் சூளையும் மறந்து நாட்கள் பலவாகி விட்டனவே? இல்லையென்றால் வந்திருக்கமாட்டாரா?" என்கின்றாள். (உஉஎ)

தோழி தலைவனுடைய தவற்றினைக் கூறி வரைந்துகொள் என்று இடித்துரைப்பதற்கு அஞ்சுகின்றாளில்லையென்பதை மேலுள்ள எடுத்துக்காட்டுக்கள் கூறும்.

இனி, தலைவனையும் பிறரையும் தோழி நகையாடுவதையும் காண்கின்றோம். தலைவன் வரைவிடைவைத்துப் பிரிகின்றேன் என்றான். அதற்குத் தோழி, "நீ செல்கின்ற இடத்தில் தகுதியில்லாத வேறு யாரையும் தகுதியுடையவர்களென்றெண்ணி மணந்து கொண்டுவிடாதே. ஏன்? உன் நாடு அப்படிப்பட்ட நாடு. அங்கு மதம் பிடித்த ஆண்யானை கரிய குண்டுக்கல்லினைப் பெண்யானையென்று தழுவிக்கொள்ளும்," என்று நகையாடுகின்றாள். (உகக). தலைவியின் உடல் மெலிவிற்குக் காதல் நோய் காரணமென்றறியாதவளாய்த் தாய் வெறியாட்டெடுக்கப் போகின்றாள். அவ்வேலனோ யார் சென்று எந்த நோய்க்குக் காரணம் கேட்டாலும் அது முருகனால் வந்தது என்று சொல்லுவான். பாவம்! அவன் முருகனை வணங்கி வழிபட்டால் தானே உண்மைக் காரணம் சொல்லமுடியும்?" என்று தோழி கூறும்பொழுது அவ் வேலனை யெண்ணி நமக்குச் சிரிப்பு வருகின்றது.

"கறிவளர் சிலம்பிற் கடவுட் பேணி
அறியா வேலன் வெறியெனக் கூறும்." (ஐங் : உசாக)

தாய் வெறியாட்டெடுப்பது தோழிக்குப் பிடிக்கின்றதில்லை. அதனைச் சமயம் வாய்க்கும்போதெல்லாம் வெளிக்

குறிஞ்சி



காட்டுகிறாள். தாய் இவள் நோய்க்கு வெறியாட்டெடுக்கின்றாளே அந்த வேலன் இவளுடைய தலைவனின் "குன்றம் பாடானாயின், என் பயஞ்செய்யுமோ வேலற்கவ் வெறியே" (உசச) "அவ் வேலன் இந் நோய் முருகனால் வந்ததென்று சொல்கின்றான். தோழி! நம் தலைவனுடைய பெயர் முருகன் தானோ," (உசஎ) என்று அவ் வேலனையும் வெறியாட்டையும் இகழ்கின்றாள். வெறியாடிச் சொன்னதோடமையாது கழங்கு போட்டுப் பார்த்தும் அது முருகனால் வந்தது என்று சொல்கின்றான் வேலன். அதையறிந்த தோழி, "முருகென மொழியும் வேலன் மற்று அவன் வாழிய!" என்று வாழ்த்துகின்றாள். உண்மையில் வாழ்த்தவில்லை; அவன் செத்துத் தொலையட்டும் என்றுதான் சொல்கின்றாள். (உசகூ)

இனி, தோழி, தலைவி என்னும் இருவருள்ளே தோழி மிகவும் உலக அனுபவம் வாய்ந்தவளாக இருக்கின்றாள். மக்களின் உள்ளப் பண்பினை ஓரளவு அறிந்துகொள்ளக் கூடியவளாகவு மிருக்கின்றாள். தலைவியிடம் தலைவன், "வரைந்துகொள்கின்றேன். நீ கவலை கொள்ளற்க," என்று சொன்னான். அதனை உண்மையென்று நம்பித் தலைவி தோழிக்குத் தெரிவிக்கின்றாள். தோழியோ தலைவனை நன்கு தெரிந்துகொண்டவள். அவன் கூறியது பொய். தலைவியைத் தேற்றுவித்தற்காகச் சொல்லியிருக்கின்றான் என்பதைப் புரிந்துகொண்டு விடுகின்றாள். தலைவியை நோக்கி,

"..............................குன்றநாடன்
வண்டுபடு கூந்தலைப் பேணிப்
பண்பில சொல்லும் தேறுதல் செத்தே."

(ஐங்: உகஎ)

என்று சொல்கின்றாள்.

## வரைவு கடாதல்

இனி, இந்நாடகத்திலே தோழி செய்யவேண்டிய வேலைகளில் முக்கியமானவை இரண்டு. ஒன்று தலைவனை வரைவுகடாதல்; மற்றொன்று செவிலிக்குத் தலைவியின் காதலைத் தெரிவிப்பதாய அறத்தொடு நிற்றல். வரைவு

கடாவுகின்றபொழுது, பல முறைகளைக் கையாளுகின்றாள். அவைகளில் ஒன்று தினை முற்றியது கூறி வரைவு கடாதல்.

தலைவனுக்கும் தலைவிக்கும் சந்திப்பதற்குத் துணையாக இருந்தது தினைப்புனந்தான். அதிற் கிளிகள் முதலிய பறவைகள் பகலிற் படிந்து தினையினைக் கவராவண்ணம் தலைவியைக் காவற்கு அனுப்பியிருந்தார்கள். அதனால் அடிக்கடி இருவரது கூட்டமும் நிகழ்ந்தது. ஆனால் "இப்பொழுது தினை முற்றிவிட்டது. இனிக் காவற்கு இடமில்லை. தலைவியும் வீட்டைவிட்டு வெளியேற முடியாது. அதனால் அவளைக் காணவும் முடியாது. விரைவில் வரைந்து கொள்" என்கின்றாள்.

"மென்றோட் கொடிச்சியைப் பெறற்கரிது தில்ல
பைம்புறப் படுகிளி யோப்பலர்
புன்புல மயக்கத்து விளைந்தன தினையே."

(ஐங்: உ௬௦)

இனி, வெறியறிவுறுத்தித் தோழி வரைவுகடாவு

கின்றாள். தலைவி ஊனும் உறக்கமும் துறக்கத் தாய்

பெரிதும் கவலைகொண்டு இவள் புனங்காக்கச் சென்ற

விடத்து ஏதோ தெய்வத்தைக்கண்டு பயந்துவிட்டா

ளென்று எண்ணி, அதனை வேலன் வெறியாட்டால் அறிவோ

மென்றிருக்கின்றாள். அதுபோன்று அவள் தலைவியினுடைய நோய் தணிதற்கு ஒரு படிமத்தினைச் செய்து கொடுக்கின்றாள். கழற்சிக்காயினைக் கண்ணாகப் பதிக்கப் பெற்றுள்ள அப்படிமத்தினை அவ்வேலனும் கையில் தூக்கிக்கொண்டு வெறியாடி இது முருகனால் வந்தது என்று சொல்வானேயானால் அது அவளுக்கு ஏற்றதா? அவளுக்கு அந்நோயினைச் செய்த உனக்குத்தான் அடுக்குமா? அதனால் வெறியாட்டு நிகழ்தற்கு முன்னர் மணந்துகொள்," என்கின்றாள். (௨௪௫)

இனி, களவொழுக்கம் நீட்டித்ததனால் அது ஊராருக்கெல்லாம் தெரிந்துவிட்டது. ஊராரெல்லாம் இதே பேச்சாகப் பேசுகிறார்கள். தாய்க்கும் தெரிந்துவிட்டது. அத்துடன் வாடைக்காற்று வேறு வருத்துகிறது. இந்நிலையில்



தலைவி மிகவும் மனம் நொந்திருக்கின்றாள். இப்பொழுதே உன் ஊருக்குத் தலைவியுடன் புறப்படு என்று சொல்லுவாள் (உடன்போக்குக்கு உடன்படுவாள்) போன்று வரைவு கடாவுகின்றாள்.

"அன்னையு மறிந்தனள் அலரு மாயின்று
நம்மனை நெடுநகர்ப் புலம்புகொள உறுதரும்
இன்னா வாடையு மலையும்
நும்மூர்ச் செல்கம் எழுகமோ தெய்யோ."

(ஐங்: ௨௩௬)

இனி, தோழி அறத்தொடு நிற்றலைக் காண்போம். தலைவி இற்செறிக்கப்பட்டாள். காப்பு மிகுதியாயிற்று. அவள் மெலிவு கண்டு வெறியாட்டெடுக்கப் போகின்றார்கள். அப்பொழுது தோழி, "இவளுடைய நோய் தணிதற்கு எனக்கு ஒருவழி தெரியும். வீட்டிலே செறிக்கப்பட்டிருப்பது நீங்கி, அவள் அத்தலைவனுடைய குன்றினைக் காண்பாளேயானால், அவள்நோய் தணிதற்குமுரியது" என்று அறத்தொடு நிற்கின்றாள் (௨௧௦). மற்றோரிடத்தில், இதுபோன்று வெறியாட்டெடுக்க முடிவாகி வெறியாட்டும் நிகழ்ந்தது. வேலனை, கழற்சிக்காயினைப் போட்டு எண்ணிப் பார்த்தும் நோய்க்குக் காரணம் தெரியச் சொன்னாள். அவன் இது வேளினால் வந்தது என்று சொல்கின்றான். அதனைத் தாய் நம்புகின்றாள். அப்பொழுது தோழி, கழங்கினை நோக்கிச் சொல்கின்றவளாய் அறத்தொடு நிற்கிறாள். "ஏ! கழங்கே! நீ பொய்யினைச் சொல்லமாட்டாய். ஆனால், இவளை வருத்தியவன், நீ கூறியதுபோல் வேள் அல்லன். அவன் மலர்ந்த வள்ளியங் கானங் கிழவோன்" என்கிறாள் (௨௫௦). மற்றொரு சமயம், வரைவுவேண்டிப் பெண்ணின் பெற்றோர்பால் பெரியோரை அனுப்புகின்றான், தலைவன். பெண்ணின் பெற்றோர்கள் இசையவில்லை. அது தெரியவந்த தோழி, தலைவனுடைய ஏற்றம்கூறிச் செவிலிக்கு அறத்தொடு நிற்கின்றாள். "அந்நாடன் விரும்புவானேயானால் நம்மைப்போன்று வரை

வினை மறுக்கின்றவர்களாக இல்லாது, தான் நினைத்த வழியொழுகுகின்ற குணமுடைய பசுப்போற் பெண்டிரையும் பெறுவான். ஆனால், இவளோடு நட்புக்கொண்டவனகையால், இவன் வரைவு வேண்டினன்'' என்றாள்.

“..............................நாடன்
பசுப்போற் பெண்டிரும் பெறுகுவன்
தொல்கே ளாகலின் நல்குமா லிவட்கே.”

(ஐங்: உ௭௧

உள்ளுறையுவமம்

இனி, அகப்பொருள் இலக்கியங்களைப் பயில்வார்க்கு அந் நூற்களில் உள்ளுறையுவமம் பயின்றுவருவது தெரியும். உள்ளுறையுவமத்தின் மூலம், கவிஞர், ஒரே சமயத்தில் இரண்டு நோக்கங்களை நிறைவேற்றிக் கொள்கின்றார். முதலாவது, தாம் எடுத்துக்கொண்ட திணையின் முதல், கருப்பொருள்களை வருணிக்கிறார். வெளித்தோற்றத்திற்கு அது அந்த நில வருணனையாகத்தான் தோன்றும். ஆனால், ஆழ்ந்து நோக்குவோமேயானால், அது மற்றொரு சிறந்த பொருளினை உணர்த்துவதைக் காணலாம். அது உணர்த்துவது, தலைவனுடைய களவொழுக்கமாகவோ, தலைவியின் துயரமாகவோ, தலைவனை வரைவுகடாவுதலாகவோ, உடன் போக்கு நயத்தலாகவோ இருக்கலாம். தலைவனின் இனிய பண்பினையோ, அன்றிக் கொடிய இயல்பினைக் கூறுவதாகவு மிருக்கலாம். இவைகளையெல்லாம் வெளிப்படையாகத் தோழியோ, அன்றித் தலைவியோ சொல்வது நாகரிகம் படைத்த மக்கட்கு ஏற்றதல்ல. அதனால், கவிஞர், உள்ளுறையுவமத்தின் மூலமாகக் குறிப்பினானுணர்த்துகின்றார். ஐங்குறு நூற்றில் பாக்கள் குறைந்த அடிகளைக் கொண்டன வாக இருந்தாலும், இவ்வுவமம் பயின்று வருவதைக் காண்கின்றோம். இவைகள், குறிஞ்சிநிலத்தைப் பாடுவதிற் கபிலர் எத்துணைத் திறமையுடையவர் என்பதையும் காட்டு கின்றன. அவ்வுவமங்களிற் சிலவற்றைப் பார்ப்போம்.

களவொழுக்கத்திலிருக்கின்ற தலைவனை வரைந்து கொள்ளவேண்டுமென்று தோழியுணர்த்த விரும்புகின்

ருள். தலைவனை நோக்கி, "பாறையையடுத்த இற்றிமரத்தின்மேல் மலைமல்லிகைக்கொடி படர்ந்திருக்கிறது. பெண் குரங்கானது அம்மல்லிகைத்தளிரை மேய்ந்து வரையுச்சியில் ஆண்குரங்கோடு உகளும் அக்காட்டுத் தலைவனே" என்று விளிக்கின்றாள். தலைவனுடைய நாட்டில் எல்லா உயிர்களும் துணையொடு வதிகின்றன. ஓரறிவுயிர் முதல் ஐயறிவுயிர் ஈறுகவுள்ள அஃறிணைப் பொருள்களெல்லாம் பெடையொடு சேர்ந்தே வாழ்கின்றன. மலைமல்லிகைக் கொடி மரத்தின்மேற் படர்ந்திருக்கின்றது. பெண்களும் கொடிகள்தாம். உருவத்தால் மாத்திரமல்ல; செயலாலும். கொடியானது நட்ட இடத்திலேயே இராது படர்ந்து, பக்கத்திலுள்ள மரத்தினை நாடிச்செல்லும். அம்மரத்தினைச் சுற்றித் தழுவிக்கொள்ளும். அப்பொழுதுதான், மேலே ஏற முடியும். பூத்துக் காய்த்துப் பழுத்துப் பலன் தரமுடியும். அதுபோன்று, பெண்களும், பருவம் வரும் வரை தாய்வீட்டிலிருப்பார்கள். பருவம் வந்ததும், ஆண்மக்களாகிய மரங்களடர்ந்த அடவியில் ஒரு ஆண்மகனாகிய மரத்தினைப்பற்றி, அவனிருக்குமிடம் செல்வார்கள். பின்னர், இல்லறத்தில் நன்மக்களைப் பெற்றெடுத்துத் தாங்களும் பயனடைந்து, மற்றவர்களும் பயனடையச் செய்வார்கள். இக்கருத்தினை மனோன்மணீய ஆசிரியர் சுந்தரம்பிள்ளையவர்கள் கொடியானது "நட்ட இடமது துறந்து நல்லின்பம் எய்த

அருகுள தருவை யவாவும்" என்று சொல்கின்றார். நின் நாட்டில் குளவியாகிய மல்லிகைக்கொடி இற்றிமரத்திற் படர்ந்திருக்கிறதே. இந்த நங்கையாகிய கொடியினையும் நீ வரைந்துகொண்டாலல்லவா, தருவாகிய நின்னைச் சுற்றி எப்பொழுதுமிருந்து நன்மக்களைப் பெற்றுப் பயன் பெறு வாள் என்றுணர்த்தினாள். இனி, மணமக்களை வாழ்த்து கின்றபொழுது "ஆல்போல் தழைத்து" என்று சொல்வது வழக்கம். காரணம் ஆலமரத்திற்கு விழுது உண்டு. இங்கும் விழுது வீழ்கின்ற மரமாகிய இற்றிமரத்தினைச் சொல்லியது தலைவனும் தலைவியும் சேர்ந்து வாழும் வாழ்க்கையில் புதல்வரைப்பெற்று அவர்கள் குடி தழைக்க வேண்டுமென்பது குறிப்பு. இனி, குரங்கு குளவித் தளிரை



மேய்ந்து துணையொடு வரைமிசை யுகளும் என்றார். அது போன்று தலைவியும் இக்களவிலே இன்பம் நுகர்ந்து பின் நின் பதிக்கண் வாழ்தல்வேண்டும் என்ற பொருளினையு முணர்த்துகின்றாள். ஓரறிவுயிராகிய கொடியினையும் மரத் தினையும் ஐயறிவுயிராகிய குரங்கினையும் கூறியதனால் இடை யிலேயுள்ள இரண்டு, மூன்று, நான்கு அறிவுயிர்களும் துணையொடு வதிகின்றன என்பது பெற்றாம். மேலும் அவன் நாட்டில் அஃறிணைப் பொருள்களாகிய ஓரறிவுமுதல் ஐயறிவு வரையிலுள்ள உயிர்களும் துணையொடு வாழ்கின் றன. அவைகளுக்கெல்லாம்

சேர்த்து ஆறறிவினையுடைய

மேலான பகுத்தறிவினைச்
உயர்திணைக்குரியோனாகிய

அவன் விரைவில் வரைந்து இல்லறத்தில் இருக்கவேண்டாவா? என்று இடித்துக் கேட்பதாகவும் அமைகின்றது.

"கல்லிவர் இற்றி புல்லுவன ஏறிக்
குளவி மேய்ந்த மந்தி துணையொடு

வரைமிசை யுகளும் நாட."

(ஐங் : உஎக)

முன்னாள் குறியிடமேற்படுத்தி அங்குச் சந்திப்பதென்பது ஏற்பாடு. ஆனால் அல்லகுறிப்பட்டுத் தலைவனைச் சந்திக்கமுடியவில்லை தலைவியால். நெருநல்நாள் விடத்துச் சந்திக்கலாமென்ற நம்பிக்கையோடு

குறி

காத

லுணர்ச்சி கிளர்ந்தெழப்பட்டவளாய் வந்தாள். ஆனால், அவன் வரவில்லை. அதனால் பெரிதும் ஏமாற்றம் அடைந்தாள். இதனைத் தலைவனுக்குணர்த்தவேண்டும். அவன் நாட்டைக் கூறுகின்றவளைப்போல மறுநாள் வந்த தலைவன் சிறைப்புறத்தானாகத் தலைவி சொல்லிவிடுகின்றாள். "அவர் நாட்டில் தேன் இறாலைக் குரங்கின் குட்டி தேனுண்ணுதற்குக் கிளர்ந்தது. அவ்விறாலைச் சூழ்ந்த தேனீக்கள் வெளிக் கிளம்பின. அக்குட்டி பயந்து பக்கத்திலுள்ள மலைக்குப் பாய்ந்தது. அத் தன்மையான நாட்டவர்" என்றாள். பார்ப்பு தேனுண்ணுதற்கு இறாலைக் கிளர்ந்ததுபோல தலைவிமாட்டு இன்பம் நுகரக் கருதிவந்து காதலுணர்ச்சியை எழுப்பினான். ஆனால், ஈக்களுக் கஞ்சிப் பார்ப்பு

குறிஞ்சி

159

ஒதுங்கியதுபோல நம் சுற்றத்தார் பலரும் அஞ்சினான்.

உணர்ந்ததற்கு

"கருவிரல் மந்திக் கல்லா வன்பறழ்
அருவரைத் தீந்தேன் எடுப்பி அயலது
உருகெழு நெடுஞ்சினைப் பாயும் நாடன்." (ஐங் : ௨௭௨)

இனி, தலைவனை வரைந்துகொள்ளுமாறு வேண்டியும் மணந்தானில்லை. அவன் பிரிவால் அவள் நலம் அழிகின்றது. அதனைத் தோழி உணர்த்தும் முறையினைப் பார்ப்போம். "மழை பெய்தது. நீர்க்குமிழிகள் நீர்நிலைகளில் தோன்றின. ஆண் குரங்கு ஒரு சிறு பிரம்பினை எடுத்துக் கொண்டு அந்த நீர்மொக்குளை எல்லாம் அடித்து அழிக்கின்றது. அத்தன்மையான நாட்டவனே!" என்று அழைக்கின்றாள். நீர்க்குமிழி சிறிது நேரத்திலே தானே அழிந்துவிடும். அதனைக் குரங்கு கோல்கொண்டு அடித்து விரைவில் அழியும்படி செய்கின்றது. அதுபோன்று தலைவியின் எழில்நலம் அவன் வரையாமல் அழிகின்றது. அதனை அவனுடைய இடையிட்ட ஒழுக்கம் இன்னும் அதிக விரைவில் அழியுமாறு செய்கிறது என்பதை உணர்த்தினாள். இனி, நீர்க்குமிழியினைப்போல இளமை நிலையற்றது. அதனால் இளமை கழியுமுன்னர் வரைந்துகொள்ள வேண்டுமென்று வற்புறுத்தியதுமாகின்றது (ஐங் : உஎடு).

இவள் நலம் அழிவதை இன்னும் சற்றுக் கடுமையாக மற்றோர் இடத்திலே தோழி தலைவன் கேட்குமாறு சொல்லுகின்றாள். "மலைப்பிளவிலே ஒரு பெரிய தேன்கூடு. மலைச் சரிவிலே ஒரு பலாமரம். அதன் பழம் பழுத்து முற்றிய நிலையில் அந்தத் தேன் இறாலைக் கீறி அதிலிருந்த தேனும் கீழே வடியும்படியாக விழுந்தது அந்நாட்டிற்குத் தலைவனே!" என்றாள் தோழி. தலைவனுடைய உறவால் நலம்பெற்றாள் தலைவி. எவ்விதம் பலாப்பழம் தானும் பயன்படாது இறாலையும் பயன்படவிடாது அழித்ததோ அதுபோன்று அவனாற் பெற்ற நலமும் பயனில்லாது முன் அவள் பெற்றிருந்த நலத்தினையும் பயன்பட விடாது

அழித்தது என்பது உள்ளுறை. மற்றும் ஓரிடத்திலேயுள்ள பலாப்பழம் முற்றி மற்றோரிடத்திலேயுள்ள இறாலைக் கீறியதுபோல ஒரு மலையிலே உள்ள தலைவன், பால்முற்ற, மற்றொரு மலையிலுள்ள தலைவியைச் சேர்கின்றான் என்ற குறிப்பும் பெறப்படுகின்றது. மேலும் பலாப்பழம் மிகுந்த சுவையுள்ளது. ஆனால், எளிதில் செரிக்கவல்லது அல்ல. அது தேனோடு கலந்து உண்ணப்படுமேயானால் அதன் சுவையும் குன்றாது அதிகரிக்கும்; எளிதில் உண்டதும் அற்றுவிடும். பழம், தேன் இரண்டையும் வீழ்ந்து அழிய விடாது ஒருவர் முயற்சியால் சேர்த்து உண்பாரேயானால் பயனையும், சுவையினையும் அடையலாம். அதுபோன்று வரைவு என்னும் முயற்சியால் இருவரும் சேர்க்கப் படுவார்களேயானால் எந்நலமும் அழியாது பயன்தரும்.

"சாரற் பலவின் கொழுந்துணர் நறும்பழம்
இருங்கல் விடரளை வீழ்ந்தென வெற்பில்
பெருந்தேன் இறால் கீறும் நாடன்."

(ஐங் : உகச)

அவள் நலம் அழிவது கண்டும் வரைந்தானில்லை. அப்பொழுது தோழி சொல்லும் சொல் சுடக்கூடியதாகவிருக்கிறது. அதனையும் அவள் வெளிப்படையாகக் கூறாது உள்ளுறை உவமத்திற் கூறியது போற்றற்குரியது. "புதர்கள் அடர்ந்திருக்கின்ற காட்டில் ஈன்று அணிமைத்தான பெண்யானைக்குப் பக்கத்திலே அதன் சிறிய குட்டி எழுந்து நிற்கின்றது நடக்கமுயல்கின்றது. ஆனால் நடை தள்ளாடுகின்றது. ஓர் ஆண்புலி பக்கத்தில் பலாமரத்தின் நிழலிலே அந்தக் குட்டியினை வெளவுதற்கொளிந்து நிற்கின்றது. அத்தகைய நாட்டோனே!" என்று விளிக்கின்றாள். குறிப்பு, பிடியீன்ற குழவியினை வஞ்சனையாலே புலி வெளவ நினைப்பதுபோல் தலைவியினது பெண்மையினைக் களவொழுக்கத்தால் வஞ்சனையால் தலைவன் வெளவ நினைக்கின்றான் என்று குறிப்பிடுகின்றாள்.

தலைவன் ஊரார் அலருக்கு அஞ்சித் தன் மனையிலே தங்கிவிட்டான் என்பதைத் தலைமகள் சொல்லுகின்ற முறை மிகவும் பாராட்டற்குரியதாக இருக்கின்றது.

குறிஞ்சி 161

"தினைப் புனங் கொய்த அரிதாளிலே குருவிகள் படிந்திருக்கின்றன. அப்பொழுது புனவருடைய எரிகொள்ளிக்கஞ்சி மயில் சிறகினை விரித்துப் பறந்து செல்கின்றது. அம்மயிலுக்கஞ்சிக் குருவிகள் தினையினின்றும் எழுகின்றன. மயில் சென்ற பின்னர் மறுபடியும் உண்ண வருகின்றன. அது போன்று தலைவன் ஊரார் அலருக்கு அஞ்சித் தன் மனைக்குச் சென்றான். தலைவியோ குருவிகளின் நிலையில் வருந்துகின்றாள்.

தலைவி விரைவில் வரைதலை விரும்புகின்றாள். அவனோ அதனைச் செய்தானில்லை. உடன்போக்காவது நிகழ்தல் வேண்டும் என்று எதிர்பார்க்கின்றாள். தலைவன் முதலில் இணங்கினான். பின்னர் அதற்கும் இசையாது வரைவல் என்று நீட்டிக்கின்றான். அப்போது தலைவி "தினைகொய்த தாளிலே அவரை காய்த்தது. தினையினை உண்ணாது முன்னரும் விரட்டப்பட்டன கிளிகள். அத்தினை யரிதாளிலே விளைந்த அவரையினையும் கொள்ள விடாது விரட்டப்படுகின்றன; அந்நாட்டவனே" என்றாள். உள்ளுறையாவது தலைவன் முதலில் தலைவியின் வரைதல் விருப்பத்தையும் நிறைவேற்றினானில்லை. பின் உடன் போக்கிற்கும் இசைந்தானில்லை என்பது.

> "சிறுதினை கொய்த இருவி வெண்கால்
> காய்த்த அவரைப் படுகிளி கடியும்
> யாணர் ஆகிய நன்மலை நாடன்." (ஐங்: உஅசு)

## கவிதை நயம்

பிற தொகை நூற்களில் கபிலருடைய சொல் நயம், பொருணயம் காணப்படுவதுபோல, இந்நூலிலும் அவைகளைப் பார்க்கக் காண்கின்றோம். தலைவனை வரைவு கடாவுகின்றபொழுது தினை முற்றிவிட்டது. புனங்காவல் இனி இல்லை, விரைவில் வரைக என்று சொல்லியதைக் முன்னர்க் கண்டோம். மற்றோர் இடத்தில் வேறு விதமாக வரைந்து கொள்ளச் சொல்லுகின்றது மிகவும் நயமுள்ளதாக இருக்கின்றது. தலைவனை நோக்கி "இனி அவள் புனங்காத்

ஐ. சொ—11

தற்கு வரமாட்டாள். அவள் பரணிலிருந்து கிளிகளை 'சோ! சோ!' என்று விரட்டுகின்றாள். ஆனால், கிளிகள் அந்த ஓசையினைக் கேட்டு அது தம்போன்ற கிளியின் ஓசைதான் என்று எண்ணி, அச்சமில்லாது தினையைத் தின்றுகொண்டிருக்கின்றன. அது மாத்திரமல்ல; தூரத்திலுள்ள கிளிகளும் அச் சத்தத்தைக் கேட்டுக் கிளியொன்று தங்களை எல்லாம் தினைப்புனத்திற்கழைப்பதாக வெண்ணி வந்து படிகின்றன. அதனால், அவள் புனங் காப்பதிற் பயனில்லை என்று பெற்றோர் புனங் காக்கவேண்டாமென்று சொல்லி விட்டார்கள். அவளை இனிப் புனத்தில் நீ சந்திக்க இயலாது; விரைவில் மணந்துகொள்" என்கின்றாள். தலைவியின் இனிமையானதும், மென்மையானதுமான குரலினை வைத்துக் கவிஞர் செய்த கற்பனை மிகவும் படித்து இன்புறத்தக்கதாக இருக்கிறது.

"கொடிச்சி இன்குரல் கிளிசெத்து அடுக்கத்துப்
பைங்குரல் ஏனல் படர்தருங் கிளியெனக்
காவலும் கடியுநர் போல்வர்
மால்வரை நாட! வரைந்தனை கொண்மோ."

(ஐங்: உஅகூ)

இக்கருத்தினைத் திருத்தக்க தேவர் கேமசரியார் இலம்பகத்தில் கையாளுவதைக் காண்கின்றோம். சீவகனும் கேமசரியும் சோலைக்குச் சென்றார்கள். தினைப் புனத்தில் படிந்த கிளிகளைக் கேமசரி ஓட்டுகின்றாள். ஆனால் அவள் குரலினைக் கிளியின் குரல் என்று கொண்டு கிளிகள் போக வில்லை. பின்னர்ச் சீவகன் அவைகளை ஓட்டுகின்றான்.

“ தினைவிளை சாரல் செவ்வாய்ச் சிறுகிளி மாதர் ஓப்பப்
புனைவளைத் தோளி சொல்லைக் கிளியெனக் கிள்ளை போகா
நனைவிளை கோதை நாணிப் பொன்னரி மாலை ஓச்சக்
கனைகழல் குரிசில் நண்ணிக் கவர்கிளி ஓப்பி னானே.”

(சீவகசிந்தாமணி - கேமசரி: அஎ)

இனி, தோழி வேலனை இகழ்ந்து பேசுகின்றாள். அவன் வெறியாட்டு பொய் என்பதையும், அவன் ஏமாற்று



கின்றான் என்பதையும் சொல்கின்றாள். ஆனால் அவள் தெய்வ நம்பிக்கையை இகழாதபடி சொற்களை அமைத்திருப்பது கவிஞருடைய திறமையைக் காட்டுகின்றது.

“ கறிவளர் சிலம்பிற் கடவுட் பேணி
அறியா வேலன் வெறியெனக் கூறும்.”

(ஐங்: உசரு)

அவ் வேலன் வாழ்க்கையிற் கடவுளை

வணங்கி அறிந்
தசுதே இல்லை. அதனால் தலைவியின் நோய்க்கு
உண்மையான
காரணம் யாது எனப் புரிந்துகொள்ள
மாட்டாதவனாய்
முருகனால் வந்தது என்று கூறினான். அவன் கடவுளை வழிபடுகின்றவனாகவிருந்தால் உண்மைக் காரணத்தைச் சொல்லி இருப்பான் என்ற பொருளில் 'கடவுட் பேணி யறியா வேலன் வெறியெனக் கூறும்' என்று சொல்லு கின்றாள். மற்றொரு பாட்டிலும் கவிஞரது இத்திறமை யினைக் காண்கின்றோம்.

"பொய்யா மரபின் ஊர்முது வேலன்
....................................
முருகெனை மொழியும்."

(ஐங்: உ௬௧)

வழிவழியாகப் பூசாரியாக வந்தவனேயன்றி இவ் வேலன், முருகன் அருள் பெற்றமையினால் வரவில்லை. மேலும் அவனுடைய முன்னோர்களெல்லாம் வெறியாட்டில் பொய்க்காது சொல்லும் திறமைபடைத்தவர்கள்தாம். ஆனால் இவன் இல்லையென்பதையும், வயதிலேதான் முதிர்ந் தவன் என்பதையும் 'பொய்யா மரபின் ஊர்முது வேலன்' என்ற தொடரில் காட்டுகின்றார். சிலப்பதிகாரத்திலும் தோழி வேலனையும், வெறியாட்டையும் இகழ்கின்றதையும் காண்கின்றோம்.

"ஆய்வளை நல்லாய்! இதுநகை யாகின்றே
மாமலை வெற்பன் நோய்தீர்க்க

வரும்வேலன்

வருமாயின் வேலன் மடவன், அவனிற்
குருகுபெயர்க் குன்றம் கொன்றான்

மடவன்."

(வஞ்சிக்காண்டம் - குன்றக்குரவை: கக) 164

## ஐங்குறுநூற்றுச் சொற்பொழிவுகள்

தோழி வேலனையும் முருகனையும் மடவன் என்று வெளிப்படையாகவே இகழ்ந்து, எள்ளி நகையாடுவதைக் காண்கின்றோம். ஆனால் கபிலர் பாட்டிலோ வேலன் மாத்திரம் இகழப்படுகின்றான். முருகனைப்பற்றிய பேச்சே இல்லை.

இனி, தலைவனுடைய அன்பினைக் கவிஞர் வெளிப்படுத்துகின்ற முறை நன்றாக விருக்கிறது. "ஏ, கிளியே! நீயல்லவா, எனக்குத் தலைவியைக் காணும்படியான வாய்ப்பினை அளித்தாய். நீ இல்லை என்றால் தினைப்புனங்காவற்குத் தலைவி வருவதெங்கே? அவள் வரவில்லை என்றால் அவளைச் சந்திப்பதெங்கே? எல்லாவற்றிற்கும் மூலகாரணம் நீயல்லவா? நீ ஊழிக்காலம்வரை வாழ்வாயாக" என்று தலைவன் சொல்கின்றான்.

"வெள்ள வரம்பின் ஊழி போகியும்
கிள்ளை வாழிய பலவே யொள்ளிழை
இரும்பல் கூந்தல் கொடிச்சி
பெருந்தோட் காவல் காட்டி யவ்வே."

(ஐங்: உஅக)

மற்ருரிடத்தில் "கிளியே! உன்னுலல்லவா நான் தலைவியைச் சந்தித்தேன். அதற்குக் கைம்மாருக உனக்கு என்னுல் என்ன செய்யமுடியும்" என்ருன்.

"நன்றே செய்த உதவி நன்றுதெரிந்து
யாமெவன் செய்குவம் நெஞ்சே! காமர்
மெல்லியற் கொடிச்சி காப்பப்
பல்குரல் ஏனல் பாத்தருங் கிளியே."

(ஐங்: உஅஅ)

இனி, தலைவியை உடன் போக்கிற்கு உடன்படவேண்டு கின்ருள் தோழி. "குறவர்கள் சந்தன மரங்களை வெட்டி விறகாக எரித்துச் சமைக்கின்ருர்கள். அதில் எழுந்த புகை பரவக், காந்தள் மலர் அம்மணத்தோடு கலந்து வீசுகிறது. அத்தன்மை வாய்ந்தது அவர் நாடு" என்று அவன் நாட்டின் இயல்பைக் கூறுகின்ருள். சந்தனமரத்தை விறகாய் எரித்தலால் அவன் நாட்டின் பொருட்செல்வம்

புலனாகின்றது. அவ்விறகினைக் கொண்டு சமைத்து விருந்தோம்புகின்றார்கள். அது அறத்தினைக்காட்டுகிறது. காந்தள் நாறும் என்றதனால் இன்பம் கூறப்பட்டது. ஆகவே அவன்நாடு அறம், பொருள், இன்பம் மூன்றும் உடைய நாடாயிற்று. மேலும் சந்தனமரம் மேற்சொல்லியபடி அறத்திற்கும், பொருளிற்கும், இன்பத்திற்கும் பயன்பட வேண்டுமென்றால் அதனை அது இருக்கும் இடத்திலிருந்து வெட்டி அதாவது அது வளர்ந்த இடத்திலிருந்து பிரித்துக் கொண்டுவரப்படவேண்டும். அதுபோன்று தலைவியும் அறம், பொருள், இன்பம் ஆகிய இம்மைப் பயன்களையும் அவைகளின் மூலமாகப் பெறுகின்ற வீடாகிய மறுமைப் பயனையும் பெறவேண்டுமென்றால் அவள் வளர்ந்த இடமாகிய தாய் வீட்டை விட்டுத் தலைவனுடன் செல்ல வேண்டும். (உடன் போக்கிற்கு குறிப்பு.) இசையவேண்டுமென்பது

"குன்றக் குறவன் ஆரம் அறுத்தென
நறும்புகை சூழ்ந்து காந்தள் நாறும்
வண்டுஇமிர் சுடர்நுதற் குறுமகள்
கொண்டனர் செல்வர்தம் குன்றுகெழு நாட்டே."

(ஐங் : உ௫௪)

மற்ருேர் இடத்தில் அவன் நாட்டைப் பொன் போன்ற தினையினைக் கட்டளைக்கல் போன்ற நிறத்தினை யுடைய பன்றி உண்ணும் என்ருர். அதுபோன்று கட்டளை யன்ன தலைவனைப் பொன் போன்ற தலைவி பெறவேண்டு மென்பது குறிப்பு. தலைவன் நெஞ்சம் கட்டளையாகிய கல் போன்றது. தலைவியினுடையதோ மாற்றுயர்ந்த பொன் வளர்ந்து கொடுப்பதைப்போல நெகிழ்ச்சி கொள்ளும் இயல்பினது. மற்றும் கட்டளைக் கல்லிற் சேர்த்து உரைத்தாற்ருன் பொன்னின் பெருமை (இத்தனை மாற்று என்பது) உலகத்தார்க்குத் தெரியும். அது போன்று தலைவனேடு வாழ்க்கையிற் சேர்ந்தாற்ருன் தலைவியின் பெருமை உலகுக்குத் தெரியும்.





"நன்பொ னன்ன புனிறுதீர் ஏனல்
கட்டளை யன்ன கேழல் மாந்தும்."

(ஐங் : உ௬௫)

இன்ஞேரன்ன நயமிக்க பகுதிகள் பலவுள. நூலிற்குச் சென்று பார்க்க வேண்டுகின்றேன்.

அவற்றை

## பழக்கவழக்கங்கள்

இனி இத்திணை நூற்றிலிருந்து நாம் பழங்காலப் பழக்கவழக்கங்களைப்பற்றி அறியக்கிடக்கின்ற செய்திகள் பலவுள. அவைகளுள் சிலவற்றைக் காண்போம்.

தலைவன் தலைவிக்குத் தோழியின் கொடுத்தல். (உகக)

மூலம் தழை

தலைவியோடு அருவியாடுதல். (உஉச)

தலைவன் தலைவியிடம் சூள் பொய்பட ஒழுகுதலும். (உஉஎ)

உரைத்தலும், அது

தலைவன் தலைவியோடு தினைப்புனங் காத்தல். (உ௩௦)

இருவரும் உடன்போக்கிற்கு ஏற்பாடு செய்தபடி தலைவன் வருதலும் அப்பொழுது வானம் கருமை

இல்லாது தெளிவாகவிருக்க, அஃது ஏற்ற காலம்

யென்று உடன் போக்கினைத் தவிர்தலும். (உ௩௫)

இல்லை

வெறியாட்டெடுக்குங்கால் தலைவியின் நோயினைப் போக்க ஒரு படிமம் செய்து அதிற் கழற்சிக்காய் இரண்டினை இரண்டு கண்களாகப் பதித்து, வேலனிடம் கொடுக்க, அவன் அதனைத் தூக்கிக்கொண்டு வெறியாடுதல். (உ௪௫)

தலைவியின் நோயின் காரணத்தையறிய

முத்துப்

போட்டுப் பார்ப்பதுபோல வேலன்

கழற்சிக்காயினைப்

போட்டு எண்ணிப்பார்த்துச் சொல்லல்.

(உ௪அ, உ௪௯,

உ௫௦).

வரைவிடை வைத்துப் பிரிந்த தலைவன்

தான் சொல்

லிய பருவத்திற்குமுன் வருதல் (உஉ௩).



தலைவன் விரைவில் தன்னை வரையவேண்டுமென்று தலைவி மலையுறை கடவுளாகிய முருகனுக்கு வேங்கை மலரிட்டு இனிமையான உணவினைப் படைத்து வணங்குதல்

(உருசு).

தன்னை மறந்திருக்கின்ற
புப்படி செய்யும் மருந்து உண்டு

தலைவன் தன்னை விரும்
என்ற நம்பிக்கை (உசுஉ).

இக்காலத்து, கொண்டைமாலையைப் பெண்ணிற்கு மாப்பிள்ளை சூட்டுவதுபோல முன்னரும் வதுவைக்காலத்தில் தலைவியின் கூந்தலில் மலரணிதல் (உசுச).

• பெண்ணிற்கு மாப்பிள்ளை வீட்டார்

பொன்னணி
பூட்டுதல் (உசுச).

பார்ப்பனச் சிறுர் குதிரையின் தலைமயிரினைப்போன்றதாகவோ, அல்லது தலைக்குஞ்சத்தினைப் போன்றதாகவோ குடுமி வைத்திருத்தல். ("நம்மூர், பார்ப்பனக் குறுமகப் போலத் தாமும், குடுமித் தலைய மன்ற, நெடுமலைநாடன் ஊர்ந்த மாவே") (உ0உ) அக்காலத்தில் மற்றச் சிறுர்கள் குடுமி வைக்காதிருந்திருக்க வேண்டும். அல்லது அவர்களுடைய குடுமியினின்றும் வேறுபட்ட தோற்றத்தினையுடையதாய்ப் பார்ப்பனச் சிறுருடைய குடுமி இருந்திருக்க வேண்டும்.

காவற்காரன் இரவில் கண் துயிலாது

காத்தல் (உ0சு).

முருகனுக்குப் பலி
றம் வீசுதல் (உகo).

இடப்பட்டு, அக்கல் புலால் நாற்

உழுந்தமாவினை நெய்யிலே தோய்த்து
போல முறுக்குச் சுற்றுதல் (உகக).

நூல் நூற்பது

வாத்தியக்காரர்கள் ஆம்பல்
அணைசுபண்ணிக் குழல் வாசித்தல்

மலர்போன்ற வடிவில்
(உகரு).

மகளிர்க்கு நன்மை வரப்போகின்ற தென்பதனை
இடக்கண் துடிப்பது காட்டுமென்னும் நம்பிக்கை (உகஅ).

விலங்குகள் பயிர்களை அழிக்காதிருப்பதற்குப் பயிர்களின் நடுவே பொய்ம்மை வகையான் புலிசெய்து கழற்சிக் காய்களைக் கண்ணாகப் பதித்து நிறுத்திவைத்தல் (உசகூ).

மழைவேண்டி மலைவாழ் மக்களாகிய வாரித்தல் (உருக).

குறவர்கள் ஆர குறவர்கள் (உருங., உருச).

சந்தனக்கட்டையை விறகாக எரித்தல்

பிள்ளைப்பேறு வேண்டுமென்கின்றவர்கள் வணங்குதல் (உருஎ).

கடவுளை

வணிகர்கள் பெரிய பையினை வைத்திருத்தல்

(உஎக).

மாக்கள் திவெடுத்த காலத்தில் குண்டுக்கல் பயன்படல் (உஎஎ).

உராய்தற்குக்

மகளிர் வேங்கைப் பூவினைக் கொய்தல்

(உகூஎ).

# குறிஞ்சிநிலத்து முதல், கருப்பொருள்கள்

பற்றியவை

இனி, குறிஞ்சிநில இயல்பையும், அந்நிலத்துக் கருப் பொருள்களின் தன்மைகளையும் ஆங்காங்குக் காண்கிறோம்.

வள்ளிக்கிழங்கு அகழ்ந்த குழியில் வேங்கை மலரின் பொன்தாது வீழ்ந்து அதனை மறைக்கின்றது (உ0அ).

வேங்கைப்பூவினை மானினங்கள்
(உகஎ).

உண்ணுகின்றன.

மதம்பிடித்த யானை குண்டுக்கல்லினைப் பெண்யானை யென்று நினைத்துத் தழுவுகின்றது (உங கூ).

பெண்யானை

ஆண்புலி பயிர் காவலுக்கு வைத்திருக்கும் பொய்ம் மைப் புலியினைப் பெண்புலியென்று தழுவி இச்சையினைத் தீர்த்துக்கொள்ளல், (உசகூ)

தினை மேய்ந்த பன்றி துணையொடு மலைமிசைத் தூங்கு தல் (உசூஉ). புலி பெண் பன்றியினைக் கொன்றதாக ஆண் பன்றி தாயில்லாக் குட்டியினைக் காத்து வளர்த்தல் (உசூரு).

ஆண் பன்றியும் புலியும் பொருதல் (உசுசு). பன்றி வில்லோரை ஏமாற்றி ஐவன நெல் கவர்தல் (உசுஎ). பன்றி கிழங்கு எடுக்க நிலத்தை மூகத்தால் அகழ்ந்ததாக அவ்வகழ்ந்ததனையே உழுததாகக்கொண்டு குறவர் விதைத்துப் பயன்கொள்ளல் (உசுகூ). இவைகளைக் கேழலின் செயலாகக் காண்கின்றோம்.

குரங்குகள் வயிறார உண்டு பண்ட வாணிகரது பையினைப்போன்று தோன்றுதலையும் (உஎக), அவைகள் அசோகந்தளிரை உண்ணுதலையும் (உஎங), புலி குமுறுதற் கஞ்சி மரங்களின்மேல் ஏறிக்கொள்வதையும் (உஎச), அவைகளின் குறும்புகளாகத் தேன் இறாலைக் கிளர்ந்து எழுப்பி, தேனீக்களுக்கஞ்சி மலையேறிக்கொள்ளுதலையும் (உஎஉ), மழைத்துளியால் ஏற்படும் நீர்மொக்குளைக் கோல் கொண்டடிப்பதையும் (உஎரு), கருக்கொள்ளும் இளமுகிலை நறைக்கொடிகொண்டடித்துக் கருக்கொள்ளவிடாது செய்தலையும் (உஎசு), மூங்கிற் கிளைமேல் தாவுவதும், குதிப்பதுமாக இருப்பதையும் (உஎஅ), கழையேறிக் கோல்கொண்டு மதியினைப் புடைப்பதுபோலத் தோன்றுவதையும் (உஅ௦) காண்கின்றோம்.

இனிக் கிளிகள், கொடிச்சியர்கள் தட்டைகொண்டு கடியவும், புனத்தில் வந்து படிவதனையும் (உஅஉ), தினை கொய்த பின்னரும் அத்தினையினை முன்னர் உண்ட நினைவில் அப்புனத்தே வந்து சுற்றிக்கொண்டிருப்பதையும்

(உஅச), தினையிலே விரட்டப்பட்டதுபோல அதன் தாளிலே விளைந்த அவரையிலும் கடியப்படுதலையும் (உஅரு), கொடிச்சி குரல் எடுப்பி ஒப்பவும், அவள் குரலைத் தம் போன்ற கிளியின் குரலென்றெண்ணித் தினை உண்ணுதற்கு இன்னும் அதிகம் வருவதையும் (உஅகூ) காண்கின்றோம்.

வேங்கை மரத்திருக்கும் மயில் இழையணிந்த மகளிரைப்போலத் தோன்றுவதையும் (உகூச), புனவருடைய எரிகொள்ளிக்கஞ்சி மயில் பறந்து செல்ல அதனைக் கண்டு அஞ்சித் தினையரிதாளிலே படிந்திருந்த



குருவிகள் பந்தாடு மகளிருடைய பந்துகளைப் போன்று எழுவதும், விழுவதுமாயிருப்பதையும் (உகூரு), புனத்தினை மயில் கவர்தலையும் (உகூகூ), வேங்கை மீதிருந்த மயில் பூக்கொய்கின்ற மகளிரைப் போலத் தோன்றுவதையும் (உகூஎ), மழையின் வரவறிந்து மயில்கள் தோகைவிரித்தாடுவதையும் (உகூஅ) காண்கின்றோம்.

வேண்டுகோள்

நிற்க, இதுகாறும் அகவொழுக்கத்தின் பொதுவியல்பினையும், இந்நூற்றில் வரும் தலைவன், தலைவி, தோழி ஆகியவர்களுடைய இயல்புகளையும், தோழி வரைவுகடாவுதலையும், அறத்தோடு நிற்றலையும், இப்பாக்களிற் காணப்படுகின்ற உள்ளுறை உவமங்களையும், கவிநயத்தினையும், அக்கால மக்களின் பழக்கவழக்கங்களையும், குறிஞ்சிநிலக் கருப்பொருள்களின் இயல்புகளையும் பார்த்தோம்.

இனி, இக் கட்டுரையை முடிக்குமுன் ஒன்று வேண்டுகின்றேன். இருபது முப்பது ஆண்டுகளுக்கு முன் இருந்ததைக் காட்டிலும், இப்பொழுது, மக்களிடையே, சிறப்பாக மாணவர்களிடையே தமிழார்வத்தைக் காண்கின்றோம். அவர்கள் ஆங்காங்குத் தமிழன்னைக்குத் தொண்டுசெய்ய உணர்ச்சி மிக்கவராய் விழித்தெழுவதைக் காண்கின்றோம். அவ்வுணர்ச்சியும், எழுச்சியும் வரவேற்கத் தகுந்தவை. ஆனால், அன்னையினை அரியணையமர்த்த அவையிரண்டு மாத்திரம் போதா; செயலில் இறங்குதல் வேண்டும். மேற்கொள்ளவேண்டிய செயல்களிலெல்லாம் தலையாயது, மக்கள் பழைய இலக்கியங்களைப் படிப்பது. மாணவர்கள் பிழையறப் பேசி, எழுதி, சங்க இலக்கியங்களைக் கற்றுத் "தாம்பெற்ற இன்பம் பெறுகஇவ் வையகம்" என்று பிறர்க்கு எடுத்துச் சொல்வது. எல்லோரும் தமிழ் இலக்கியங்களைப் படிக்கத் துவங்கிவிட்டால், அந்நாளே தமிழன்னை அரியணையேறும் நாள்.

---

# பாலை

[திரு. அ கி. பரந்தாமனார் அவர்கள், எம். ஏ.]

இலக்கியம், வாழ்க்கையிலிருந்து மலர்கிறது. மக்கள் வாழ்க்கையில் கண்ட உண்மைகளையும் நுகர்ந்த நுகர்ச்சிகளையும் எண்ணிய எண்ணங்களையும் விரும்பிய விருப்புகளையும் மொழிவழியாக எழுத்துருவத்தில் வடித்துக் காட்டுவதே இலக்கியமாகும். ஆங்கிலப் பேரறிஞரும் கவிஞருமாக விளங்கிய மேத்யூ ஆர்னல்டு என்பார், "வாழ்க்கையை ஆராய்ந்து காட்டுவதே இலக்கியம்" என்று கூறினார். எப்படியாயினும் வாழ்க்கையைச் சித்திரித்தோ, ஆராய்ந்தோ காட்டுவது இலக்கியம் என்பதில் ஐயமில்லை. வாழும் இலக்கியம், வாழ்க்கையை விளக்குவதாகவே இருக்கும்; அதனால், அது மக்கள் உளத்தைக் கவர்கிறது.

ஒரு நாட்டின் இலக்கியம், அந்தநாட்டு மக்களின் மன நிலையையும் குணவளர்ச்சியையும் இனவுணர்வையும் காட்டும் கண்ணாடியாகும். அதனால், அந்த அந்தக் கால இலக்கியம், அந்த அந்தக் கால மக்களின் மனப்போக்கையும் பண்பாட்டையும் புலப்படுத்தும் வரலாறாக ஓரளவு விளங்குகிறது எனலாம். ஆனால், நாட்டு வரலாற்றுக்கும் நல்லிலக்கியம் காட்டும் வரலாற்றிற்கும் மிகுந்த வேறுபாடு உண்டு. நாட்டு வரலாறு மக்களது நாகரிகத்தின் புறத்தோற்றத்தை எடுத்துக்காட்டி, அம்மக்கள் கண்ட வெற்றி தோல்விகளை அறிவிக்கும். இலக்கியம் புலப்படுத்தும் வரலாறோ, மக்களுடைய நாகரிகத்தின் அகத்தோற்றத்தையும் பேரறிவையும் உள்ளத்தின் உணர்ச்சிகளையும் வெளிப்படுத்துவதோடு, ஒழுக்க நெறிகளையும் சமய வாழ்வையும் அறிவு நிலையையும் தெரிவிக்கும்.

இங்ஙனம் புலப்படுத்தும் ஒரு காலத்து இலக்கியத்தை எடுத்து நலமுற ஆராயும்போது, நாம் வியக்கத்தக்க ஒரு குடும்ப மனநிலைபோன்ற ஓர் உளநிலையை அந்தக்காலத்து இலக்கியம் அனைத்திலும் காண்பது உறுதி. ஒரு காலத்துக் கவிஞர்களுள் ஒரு சிலர் மாறுபட்டிருப்பினும், பொது வாகக் கூறுமிடத்துப் பெரும்பாலோர் ஒரே வகையான உளநிலையை வெளிப்படுத்தக் காணலாம். இதுதான் கால மனநிலை என்பது. அம்மனநிலையை ஆராயுங்காலத்து ஒரே வகையான வாழ்க்கைக் குறிக்கோள், வாழ்வுக் கருத்துக்கள், சமய எண்ணங்கள், தத்துவச் சிந்தனைகள் இவையெல்லாம் புலப்படுகின்றன. இங்ஙனம் ஒரே மனநிலை ஒரு காலத்து இலக்கியத்தில் தோன்றக் காரணம், அந்தஅந்தக் கவிஞனோ, எழுத்தாளனோ அவன் இருக்கும் காலநிலையி லிருந்து மாறுபட முடியாததேயாகும்.

இவ்விலக்கிய உண்மைகளை உளத்தமைத்து நோக்கும் போது, சங்கம் மருவிய நூல்கள் முப்பத்தாறினும் ஒரே குடும்ப மனநிலைபோன்று ஒருவகைக் கால மனநிலை தோன்றுவது விளங்கும். அந்நூல்களனைத்தும் அகப் பொருளையோ புறப்பொருளையோ சித்திரித்துக் காட்டு வதைக் காண்கிறோம். இதனைச் சங்ககால மனநிலை எனலாம்.

சங்ககால மனநிலையில் பொங்கியெழுந்தெழுந்தது ஐங்குறுநூறு. இஃது எட்டுத்தொகையுள் ஒன்று; அகனைந்திணையைக் கூறுவது; உரையாசிரியர்களால் நன்கு மதிக்கப்பட்டு மேற்கோளாக எடுத்தாளப்பட்டது.

ஐங்குறுநூறு என்பது ஐந்திணையிலும் தனித்தனி அமைந்த குறுமையாகிய நூறு நூறு செய்யுட்களைக் கொண்டது என்று பொருளாலும் அளவாலும் இந் நூலுக்கு வந்த பெயராகும். பொருள், அகப்பொருள்; ஐந்திணையாகிய குறிஞ்சி, முல்லை, மருதம், நெய்தல், பாலை இவற்றைப் பற்றியது. அளவு - குறுமை என்பது. பாக்கள் மூன்றடிச் சிற்றெல்லையும் ஆறு அடிப் பேரெல்லையும் உடையவை.



பதிற்றுப்பத்திலிருந்தே பப்பத்தாகப் பாடும் முறை தோன்றியிருத்தல் வேண்டும். ஐங்குறுநூறு அதனைப் பின் பற்றியது போலும். திருவள்ளுவர், தமது திருக்குறளில், இந் நூல்களைப் பின்பற்றினர். பின்வந்த நாயன்மார்களும் பிறரும், இந் நூல்களைப் பின்பற்றிப் பதிகம் பாடத் தொடங்கினர்கள்.

ஐங்குறுநூற்றில், ஐந்திணை முறைவைப்பு வேறுபட்டுளது. ஆசிரியர் தொல்காப்பியனர், ஆவணித் திங்களை முதலாகத் தொடங்கும் தமிழாண்டை எண்ணிக் காலத்தைப் பின்பற்றி,

"மாயோன் மேய காடுறை உலகமும்
சேயோன் மேய மைவரை உலகமும்
வேந்தன் மேய தீம்புனல் உலகமும்
வருணன் மேய பெருமணல் உலகமும்
முல்லை, குறிஞ்சி, மருதம், நெய்தல் எனச் சொல்லிய
முறையாற் சொல்லவும் படுமே"

(தொல். அகத்திணை: ௫)

என்னும் நூற்பாவில், 'முல்லை, குறிஞ்சி, மருதம், நெய்தல் எனச் சொல்லிய முறையாற் சொல்லவும் படுமே' என்று முல்லை முதலாக முறை கூறினாரேனும், அதில் 'சொல்லிய முறையாற் சொல்லவும் படுமே' என்ற உம்மையால் இங்ஙனம் சொல்லாத முறையாலும் திணைகள் நிறுத்தப் படும் என்பது போதருமாதலின், புலத்துறை முற்றிய கூடலூர்கிழார் ஐங்குறுநூற்றில் திணைகளைக் கீழ்க்கண்ட வாறு,

க. மருதம், உ. நெய்தல், ௩. குறிஞ்சி,
ச. பாலை, ௫. முல்லை.

எனத் தமக்கு வேண்டிய முறையால் தொகுத்தார்.

முல்லைக்குக் காலம் கார்காலம்; ஆவணியும் புரட்டாசியும் கார்காலமாகும்; இது பெரும்பொழுது. முல்லைக்குச் சிறுபொழுது மாலை. தமிழாண்டு ஆவணியில்

பிறக்கிறது. தமிழ்நாள் மாலையிலிருந்து தொடங்குகிறது. மாலை என்றால் பகலோன் மறைந்ததிலிருந்து கொள்ளுதல் வேண்டும். தமிழாண்டுத் தொடக்கம் கார்காலமாதலாலும், தமிழ்நாள் தொடக்கம் மாலையாதலாலும் கி. மு 4 ஆம் நூற்றாண்டில் வாழ்ந்த தொல்காப்பியர், காலத்தை ஒட்டி முல்லையிலிருந்து முறை கூறினர். பின்வந்தோர் வேறுபடக் கூறினர்.

சங்கநூல்களில் பலவாறு திணைகளைக் கோத்துள்ள முறை வருமாறு

| | | | | | |
|---|---|---|---|---|---|
| ஐங்குறுநூறு | மருதம் | நெய்தல் | குறிஞ்சி | பாலை | முல்லை |
| கலித்தொகை | பாலை | குறிஞ்சி | மருதம் | முல்லை | நெய்தல் |
| ஐந்திணை ஐம்பது | முல்லை | குறிஞ்சி | மருதம் | பாலை | நெய்தல் |
| திணைமாலை நூற்றைம்பது | குறிஞ்சி | நெய்தல் | பாலை | முல்லை | மருதம் |
| திணைமொழி ஐம்பது | குறிஞ்சி | பாலை | முல்லை | மருதம் | நெய்தல் |
| ஐந்திணை எழுபது | குறிஞ்சி | முல்லை | பாலை | மருதம் | நெய்தல் |

தொல்காப்பியனார் பாலைக்கு நிலம் கூறவில்லையே அன்றிப் பாலைத்திணையைக் குறிப்பிட்டுள்ளார் என்பதை,

"நடுவண் ஐந்திணை நடுவணது ஒழியப்

படுதிரை வையம் பாத்திய

பண்பே" (தொல்.-அகத்: உ)

என்னும் நூற்பாவில் 'நடுவண் நாற்றிணை' என்றது 'ஐந்திணை' என்றதனால் அறியலாம்.

ஐங்குறு நூற்றில், ஐந்நூறு (500) செய்யுட்கள் உள. கடவுள் வாழ்த்துச் செய்யுளைப் பாடியவர், பாரதம் பாடிய பெருந்தேவனார். இந்நூலிலுள்ள நான்காம் நூறாகிய பாலைத்திணையைப் பாடியவர் ஓதலாந்தையார். 'கருதிய பாலை ஓதலாந்தை' என்பதால், ஐங்குறுநூற்றுப் பாலைத் திணையை இயற்றியவர் ஓதலாந்தையார் என அறியலாம்.

## பாலை

175

ஐங்குறுநூற்றில், ஒவ்வொரு திணையும் நூறு நூறு பாக்களைக் கொண்டது. ஒவ்வொரு நூறும் பத்துப்பத்துப் பாக்களுடையது. ஒவ்வொரு பத்துக்கும் ஒவ்வொரு பெயர் உண்டு. பாலைத்திணை இந்நூலில் நான்காவதாக உளது.

## பாலைத்திணையின் பத்துப் பத்துகளின் பெயர்கள்

க. செலவழுங்குவித்த பத்து

உ. செலவுப் பத்து

ங. இடைச்சுரப் பத்து

௪. தலைவி இரங்கு பத்து

௫. இளவேனிற் பத்து

௬. வரவுரைதத பதது

௭. முன்னிலைப் பத்து

௮. மகட்போக்கியவழித் தாயிரங்கு பத்து

௯. உடன்போக்கின்கண் இடைச்சுரத்து பத்து

உரைத்த

௧௦. மறுதரவுப் பத்து

ஆசிரியர்

ஐங்குறு நூற்றில், நான்காவதாக உள்ள பாலைத் திணையை இயற்றியவர், கடைச்சங்கப் புலவரான ஓதலாந்தையாரெனக் கண்டோம். ஆதன் தந்தை என்னும் தொடர், ஆந்தை என மருவிற்று என்ப. இவர் இப்பாலைத் திணையைப் பாடியிருப்பதோடு குறுந்தொகையில் பாலைத் திணையைக் குறித்து இரண்டு பாக்களும், முல்லைத் திணையைப்பற்றி ஒரு பாடலும் பாடியுள்ளார். இவர் பாடிய பாடல்களை நோக்கின், பாலைத்திணை பாடுவதில் இவர் பயிற்சி மிக்கவர் என்றறியலாம். இவரது சமயம் இன்னதென அறிதற்கில்லை. பாலைத்திணை நுட்பங்களை உணர்ந்து பாடிய



திறன் இவருக்கு மிகுதியாக இருந்தது என்பதைப் பாலைத் திணையைப் படிப்போர் நன்குணர்வர்.

## பாலைத்திணை விளக்கம்

பாலைக்கு நிலம் இல்லை என்பர். ஆயின் நிலக்கலப்பே அதற்கு நிலமாகும். நால் நிலங்களும் தம் இயற்கை திரிந்து பாலையாகும் என்றலுமுண்டு.

“ நானிலம் வாய்க்கொண்டு நன்னீரறமென்று கோதுகொண்ட
வேனிலஞ் செல்வன் சுவைத்துமிழ் பாலை ”
(திருவிருத்தம்: உகூ)

என்ற நம்மாழ்வார் வாக்கானும், "அப்பாலை ஏனையபோல் ஒருபாற்படாது நால்வகை நிலத்திற்கும் உரியவாக" (அகத். உ.) என்னும் நச்சினார்க்கினியர் உரையானும் அறியலாகும்.

எனினும், முல்லையும் குறிஞ்சியும் திரிந்து பாலையாதலையே பலரும் கூறுவர்.

"முல்லையும் குறிஞ்சியும் முறைமையில் திரிந்து,
நல்லியல்பு அழிந்து, நடுங்கு துயர் உறுத்துப்,
பாலை என்பதோர் படிவம் கொள்ளும்"

(சிலப் - காடுகாண்: கசுகூ)

என்னும் சிலப்பதிகார அடிகளால் முல்லை நிலமும் குறிஞ்சி நிலமும் நூற்றுக்கணக்கான ஆண்டுகளாக வெயிலின் கொடுமையால் தம் தன்மை கெட்டுக் கொடிய பாலை நிலமாகும் என்றறிக. பாலை என்பது நீரும் நிழலுமற்று எங்கும் ஆங்குப் ஓவ்வொரு குடியிருப்புத் தொண்டதும், கடத்தற்கு அரிய வழியையுடையதுமாகிய கடிய நிலமாகும்.

## பாலைத்திணைக்கு முதல் கரு உரிப்பொருள்கள்

ஒவ்வொரு திணைக்கும் முதற் பொருள், கருப்பொருள், உரிப்பொருள் என மூன்று உண்டு. இங்கே பாலைத்திணைக்கு மட்டும் இவற்றைக் காண்போம்.

முதற் பொருளாவது, நிலமும் பொழுதும் என இரு வகைப்படும்.

நிலம்—பாலை.

பொழுது என்பது பெரும்பொழுது, சிறுபொழுது என இருவகையாகும்.

பெரும்பொழுது—வேனில்; அஃதாவது, இளவேனிலும் முதுவேனிலும். இளவேனில் – சித்திரைத் திங்களும் வைகாசித் திங்களும்; முதுவேனில் - ஆனித் திங்களும் ஆடித் திங்களும்.

பின்பனிக்காலமும் பாலைக்கு உரித்தென்று கூறுவர். வேனில் போலப் பின்பனிக்காலம் சிறப்பிற்றன்று. மாசித் திங்களும் பங்குனித் திங்களும் பின்பனிக்காலமாகும்.

சிறுபொழுது - வேனிற்காலத்து வரும் நண்பகற் பொழுது. நண்பகலாவது பகற்பொழுதின் நடுக்கூறு.

கருப்பொருளாவன-நிலத்துக்குரிய தெய்வம், உணவு, மா, மரம், புள், பறை, தொழில், யாழ் முதலியன. தொல்காப்பியர், கருப்பொருளில் மக்களைக் கூறவில்லை. பிறவும் என்னும் சொல்லால் மக்களையும் சேர்த்துக் கூறல் பொருந்தாது.

"தெய்வம் உணாவே மா மரம் புள்பறை
செய்தி யாழின் பகுதியொடு தொகைஇ
அவ்வகை பிறவும் கருவென மொழிப"

என்னுந் தொல்காப்பிய நூற்பா இக்கருத்தை வலியுறுத்துவதறிக.

பாலைக்குத் தெய்வம் இன்று என்றும், கலந்த நிலத்துத் தெய்வமே பாலைக்குத் தெய்வம் என்றும் கூறினும்; ஆதித்தனையும் துர்க்கையையும் பாலை நிலத்துத் தெய்வம் எனக்கொள்வர். உணவு-ஆறலைத்தனவும் சூறை கொண்டனவும்; மா - வலியழிந்த யானையும் புலியும் செந்நாயும்; மரம் - வற்றின இருப்பையும் ஓமையும்; "வேனிற் காலத்

தும் வாடுதலின்றி நிற்பதாம் பாலை என்பதோர் மரம் உண்டாகலின்" என்று இளம்பூரணர் கூறுவதால் பாலை மரமும் கொள்க. புள் - கழுகும் பருந்தும் புறாவும்; பறை - சூறைகோட் பறையும் நிரைகோட் பறையும்; யாழ் - பாலையாழ்; பூ - மரா குரா பாதிரி இவற்றின் பூ; நீர் - அறு நீர்க் கூவலும் சுனையும்; ஊர் - பறந்தலை; பண் - பஞ்சுரம்.

உரிப்பொருளாவது ஒழுக்கம். பாலைக்கு உரிப்பொருள் - பிரிவு உணர்த்துவனவும், செலவழுங்குவனவும், பிரிந்துழி இரங்குவனவுமாம். இவை கற்பொழுக்கத்தில் நிகழ்பவை. தலைமகளை உடன்கொண்டு தமர்வரைப் பிரிதலும் பாலையில் சேரும். பிரிதற் குறிப்பு நிகழ்த்தலும் பாலைக்குரிய பொருளாம்.

பிரிவின்கண் தலைவி கவலுங்கால் நிழலும் நீரும் இல்லாததும் ஆறலை கள்வருடையது மாகிய வழியில் ஏகினர் எனக் கவலுமாகலின், தலைவன் பிரிவிற்குப் பாலை சிறந்ததாயிற்று.

சிறுபான்மை, எல்லாப் பொருளும் எல்லாத் திணைக்கும் உரித்தாகவும் கொள்ளப்படும்.

ஒன்றன் திணை மற்றொன்றில் மயங்கி வருதலுமுண்டு. திணை என்பதனை முதல் கரு உரிப்பொருள் மூன்றும் கொள்க.

## ஐங்குறு நூற்றுப் பாலைத் திணையில் கூறப்பட்டிருப்பவை : (1)

செலவழுங்குவித்த பத்து

தலைவன் பிரிந்து செல்வதில் தனக்கு விருப்பமின்மையை உணர்த்திச் செலவு தவிருமாறு தோழி செய்தலைக் கூறும் பத்து அகவற்பாக்களைக் கொண்டது செலவழுங்குவித்த பத்தாகும். இங்குத் தலைமகனுக்கும் தோழிக்கும் உரையாடல் நிகழ்கிறது. வாழ்க்கை நாள் சிலவாதல் ஏதுவாகப் பொருள் செய்தல் குறித்தாரை இளமையது அருமை இன்பத்தின் கண்ணே ஈர்த்து ஒன்றுமையும்,



முடியின்மை ஏதுவாகப் பொருள் செயல் குறித்தாரை யாதானும் ஓராற்றால் பொருள் செய்யலாகாது தத்தம் நிலைமைக்கு ஏற்பச் செயல்வேண்டும் என்னும் கருகியது அமைதி ஒன்றுமையும், இன்மையான் வரும் இளிவரவு நினைத்துப் பொருள் செய்ய நினைந்தாரைப் பொருளுடைமைக் காலத்து நிகழும் உயர்ச்சி அதற்கு இடையூறாகிப் பொருள் நசை உள்ளத்தைத் தடுத்து ஒன்றுமையும், பிரிந்துழி நிகழும் அன்பினது அகலம் காரணமாகப் பொருள் செய்யக் குறித்தாரைப் பிரிவாற்றுமை இடை நின்று தடுத்து ஒன்றுமையுமாய், ஒன்று ஒன்றனோடு ஒன்றாது வரும் பொருளைத் தேடுதற்காகப் பிரிந்துபோக விரும்பித் தலைமகன் தன் பிரிவைத் தோழியிடம் சொல்ல, தோழி தலைவன் பிரிந்துபோதலைப் பல காரணங்கள் கூறித் தடுத்து நிறுத்த முயல்கிறாள். இப்பத்தின் கருத்துக்களைப் பலரும் எளிதில் தெரிந்துகொள்ளுதற் பொருட்டு உரையாடல் முறையில் எழுதுகிறேன். கருத்துத் தெளிவிற்கு இம்முறை மிகவும் பயன்படும்.

தலைமகன்: தோழி! நான் பொருள் தேடுதற் பொருட்டுச் சிலநாள் தலைவியை விட்டுப் பிரிந்துபோக விரும்புகிறேன்.

தோழி: மைவரை நாட! நீ செல்லும் வழி மிகவும் வெம்மையுடையது. வெள்ளோத்திரத்துக் குளிர்ச்சியுடைய மலரை வெம்மை தணிய வழிச்செல்வோர் அணிந்து செல்வர். அத்தகைய வெப்பம் மிகுந்த வழியை நீ கடப்பையாயின், தலைவி வருந்துவாள்; செலவொழிப்பாயாக. (செய்யுள்: ௩௦௧)

தலைவன்: பொருளீட்டவன்றோ போகின்றேன்!

தோழி: இவ ளழும்வண்ணம் பிரிந்துசென்று தேடக் கருதும் அரும்பொருள் ஈட்டும் தொழிலும் கைகூடாமற் போதலுமுண்டு; தலைவியும் தடுத்தற்கு உரியள். செல்லாயாயின் நன்று. (௩௦௨)



தலைவன்: போகவேண்டுமே!

தோழி: விடலையே! புதிய மட்பாண்டம் போலும் கனியை யுடைய ஆலமரம் பறவைகளைப் போகவிடாது தடுக்கின்ற வேனிற் காலத்தில் அருஞ்சுரம் தண்மையுடையதாகவும் இனிமையுடையதாகவும் இருக்க வேண்டுமாயின், தலைவியுடன் செல்லலாமே! (௩௦௩)

தலைவன் : விரைவில் மீண்டுவிடுவேன் ; தனியே போதலே
இனிது.

தோழி : இடையர்கள் கோலினால் தோண்டிய பள்ளத்தினுள்ள நீரை யானைபருகும் பல கவர் வழிகளையுடையது அவ்வழி. நீ செல்லின் மெல்லியல் தலைவி வருந்துவாள். வயமான் தோன்றல், நீ எல்லாம் வல்லவனாயினும், அவ்வழிச் செல்லும் வல்லமை உனக்கு இராது; போகாதே (௩0௪)

தலைவன் : இல்லை. தனியே போதலே நன்று.

தோழி : விடலையே! ஆண்யானை, பெண்யானையைத் தழுவி வேற்றிடத்துக்குப் போகாது. பசி அறிவை வருத்த வருந்தும் பசுமையற்ற குன்றத்துச் சுடர்த்தொடிக்
குறுமகள் வருந்த நீ செல்லுதல் யாது தரும்? (௩0௫)

பயன் தலைவன் : பொருள் தேடி வந்துதானே வாழவேண்டும்?

தோழி : வெல்போர்க் குரிசில்! நீ அகன்ற சுரத்தைக் கடந்து செல்வையாயின், தலைவி புல்லாங்குழலினும் அழுது இரங்குவாள். (௩0௬).

தலைவன் : பொருளின்றி ஒன்றும் செய்வதற்கு முடியாதென்று நீ அறியாயோ? அறத்தையும் இன்பத்தையும் அளிக்கவல்லது அரும்பொருளே என்றுணர்வா

யாக.

தோழி: நீபோகும் வழியில், காட்டு மூங்கில் ஒன்றோ

டொன்று உராய்ந்து எரிவதால், காட்டுத் தீ மிகுந்து

பாலை

181

எரியும். புலியும் அக்காட்டுத் தீயைக்கண்டு அஞ்சும். நின் துணைவியை விட்டுப் பிரிந்துபோய் அவ்வழி யைக் கடந்து அரிதிற் கொண்டுவரும் பொருள் நன்மை தருவதின்று. (௩0௭).

தலைவன்: அப்படி எண்ணுதே! அப்பொருளின்றி இப்புவி வாழ்வில் இன்பம் இல்லை. போய் விரைவில் மீள் கின்றேன்.

தோழி: பிரியா திருக்தல் நன்று. பிரிவதென்றால், முரு கப் பெருமான் எழுந்தருளியுள்ள மாமலை எங்களை விட்டுப் பிரிந்தால் நீயும் பிரியலாம். (௩0௮)

தலைவன்: பொருள் தேடவே போகிறேன். இன்பமனைத் தும் இப்பொருளாலே மன்னுதல் என்றறியாயோ?

தோழி : மலைநாட்டுக் குரிசிலே! நின்னையே விரும்பிவாழும் தலைவியின் தலைமகனுடைய முறுவலைக் காண்டலினும், அவளை விட்டுச் சென்று சுரத்தைக் கடந்து தேடிக்கொண்டுவரும் பொருள் வேண்டுதற்குரிய இனிமையுடையதோ? இல்லையே. (௩0௯)

தலைவன் : பிரிந்து சென்று பொருளை ஈட்டியே வருதல் வேண்டும். விடுப்பதன்றித் தடுக்காதே.

தோழி : விடலையே! ஒன்று கூறுவேன். கைவளைகள் கழலும் வண்ணம் காரிகை நின்பிரிவால் கவினிழந்து மெலிந்து விடுவாள். பொருளை இழந்தாலும், திரும்பவும் அதனைத் தேடிக்கொள்ளமுடியும். தலைவியினது அழகு நிறைந்த நெற்றியழகு அழிந்துவிட்டால், மீட்டற்கு முடியுமோ! (௩௧0)

## (2) செலவுப் பத்து

தலைவன் பிரிந்து சென்றதைக் கூறும் பத்துப் பாக்களையுடையது செலவுப் பத்து.



தோழி : தலைவியே! நின் தலைவர்
னது என்று கவலையுறுதே.

சென்ற வழி கடுமையா
அவர் அவ்வழியைக்
கடந்து சென்றிருப்பார்.

தலைவி: தோழியே! வேங்கைப் பூவைக் கள் பாலைப் பண்ணைப் பாடினும்,

கொய்கின்றவர்
அரிய வழியிற்

செல்வோர் அவ்வழியே போதற்கு மிகவும் அஞ்சும் படியான காட்டை என் காதலர் கடந்திருப்பார். அவர் அவ்வழியைக் கடந்து சென்றதற்கு நான் வருந்தவில்லை; சென்ற இடத்தில் அவர் நீண்ட நாள் தங்கிவிடுவாரோ என்றுதான் வருந்துகின்றேன். (ரு௧௧)

தோழி: அவர் சென்ற வழியைக் குறித்துக் யாது?

கூறுவது

தலைவி: பேயும் போக அஞ்சும்படியானதும், காக்கையும் கழுகும் விசும்பில் பறந்து கொண்டிருப்பதால் ஒலி மிகுந்திருக்கும்படியானதும், சிறுகண் யானைகள் வழிச் செல்வோரை அடித்துக்கொன்று திரிந்து கொண்டிருக்கும்படியானதுமான காட்டு வழி, என் தோளை வெறுத்துச் சென்ற என் தலைவர் போன வழி என்று பலரும் கூறுவர். (ரு௧௪)

தோழி: சொல்லாது போயினர் என்று வருந்துகின்றாய். நின் தலைவர் சொல்லாது சென்ற அப்பொழுது, நீ உறங்கிக்கொண்டிருந்தாய். அவர், இப்பொழுது, நின் அழுகையைக் கேளாதவாறு நெடுந்தொலைவிலுள்ளார். (௩௧௫)

தலைவி: என் செய்வது!

தோழி: நீ வாடுமாறு, ஓமை மரங்கள் இருப்பதும், புலிகள் நடமாடுவதுமாகிய வழிகள் பொருந்திய காட்டு வழியிலன்றோ அவர் தனிமையாகப் போனார்! (௩௧௬)

தலைவி: தோழி, என்மனம் அரிய சுரத்தைக் கடந்து சென்றவர்பால் இன்று தூது போயுளது. திரும்ப



மறுக்கிறது;

என்ன காரணம்? ஆராய்வோம், வா. (௩௧௭)

என் தலைவர் என்னை விட்டுப் பிரியார் என்று எண்ணியிருந்தேன். என் பருத்த தோளணி கழலுமாறு யான் மெலிந்து விட்டேன். இப்படியாகுமாறு என்மேல் சிறிதும் அன்பின்றிப் பிரிந்துபோனாரே! (கூகஅ).

தோழி: இங்ஙனம் உன்னிடம் சொல்லாமல் அவர் பிரிந்து போவார் என்று ஒருநாளும் நான் நினைக்கவில்லையே!

தலைவி: என் தலைவர் என்னிடம் சொன்னதை மறந்து இன்று என்னை விட்டுப் பிரிந்துபோனார். எவ்வழிச் சென்றார்? மரங்கள் காய்ந்து பட்டுப்போகும் கடுமையான காட்டு வழியையன்றோ கடந்து சென்றார்? (கூகக)

போன வழி எத்தகையது என்று நினைக்கிறாய்? காட்டுத் தீ அசைதலால் உண்டாகிய காற்று எடுக்க, வானத்தில் உண்டாகும் இடியில் தோன்றும் பொறிகள் நிலத்தில் வீழ்பவைபோல் இலவ மரத்தின் பெரிய பூக்கள் நிலத்தில் விழும் பிளவுவழி பொருந்திய காட்டு வழியாகவன்றோ போயுள்ளார்? நமக்கு அவர் நீங்காத வருத்தத்தை நல்கிச் சென்றார். (கூ௨0).

இச்செலவுப் பத்தில் உடன்போயின் தலைமகள் மீண்டு வந்துழி, 'நின் ஐயன்மார் பின் துரந்து வந்தவிடத்து நிகழ்ந்தது என்ன?' என்ற தோழிக்கு நிகழ்ந்தது கூறி, தலைமகன் மறைதற்கு உதவி செய்த மலையை வாழ்த்தியதும் கூறப்பட்டுள்ளது. தலைமகள் புணர்ந்துடன் போகிய வழிச் செவிலி (வளர்த்த தாய்) ஆற்றுமை கண்ட நற்றாய் (பெற்ற தாய்) 'நம்பெண் நம் மனம் துடித்து வருந்தஉடன் சென்றுவிட்டாளே. அவள்மீதுள்ள அன்பை மறந்துவிடவேண்டியதுதான்' என்று சொல்லியதும் இப்பத்தில் கூறப்பட்டுள்ளது.



## (3) இடைச்சுரப் பத்து

தலைவன் இடைச்சுரத்துத் தலைவியின் குணம் நினைந்து இரங்கிச் சொல்வதைக் கூறுவது. இதில் கூறப்பட்டுள்ளனவற்றைத் தலைவன் தனிமொழியால் அறிக.

### தலைவன் தனிமொழி (Soliloquy)

"காய்ந்த தலையினையுடைய உளிபோன்ற வாயைக் கொண்ட பெண் பருந்து, உச்சி காய்ந்துள்ள ஓமை மரத்தின் கவட்டில் ஏறி உட்கார்ந்து தனிமையாகக் கூவுகிறது. காட்டு வழியில் கடக்கமுடியாத பல மலைகளைக் கடந்து வந்துள்ளேன். என்றாலும், என் காதலியின் குணம் என் உளத்தைவிட்டு நீங்கவில்லையே! என்செய்வேன்! (௩உக) முன்னே பாலைவழிகள் நெடிய மூங்கில் உலர வேனில் நீடித்துக் கடுங்கதிர் ஞாயிறு கல்லும் பிளக்க அழித்தலின் வெம்மையுடையவாயிருந்தன; இன்று என்னருமைக் காதலியை நினைக்குந்தோறும் குளிர்ச்சியுடையனவாயுள. (௩உஉ) செந்நாய் கருப்பத்தையுடைய தன் பெண் நாய்க்கு உணவுவேண்டிக் கள்ளிமரங்கள் பொருந்திய காட்டில் பன்றியைத் தேடுகின்ற பிளவுபட்ட வழியைக் கொண்டது இவ்வழி. வெப்பமும் மிகுந்தது இவ்வழி. நெஞ்சமே நீ எப்படி இத்தகைய வழியைக் கடந்து வந்திருக்கிறாய்? அறிவேன். நீ விரும்பியோளது பண்புகள் உன்னோடு இவ்வழியைக் கடந்து வந்துள்ளன. (௩உ௩) ஆ! என்ன கடுமையான வழி இது! காட்டழல் விளங்கும் அகன்ற இவ்விடத்தில் நிழல் இல்லையே. நிழலைக் காணாது பெண்மான் தன் குட்டியுடன் வாடுகிறது. நீரும் இல்லை. துன்பம் மிகுந்த வழி இது. 'இன்னா சுரமே. இனிய யான் ஒழிந்தோள் பண்பே'. (௩உ௬) யானை நிலத்தைத் தும்பிக் கையால் தீண்டவும் நடுங்குகிறது. வெயிலால் உலர்ந்த சோலையையுடைய மூங்கில்கள் உயர்ந்த காடு பொருந்திய வழி இவ்வழி. இத்தன்மையவாய அரிய காட்டு வழியே யாயினும், என் தலைவியின் பண்புகள் குளிர்ச்சியைச் செய்தன. என் தலைவியின் குணம் நினைக்கும் மாத்திரத்தே

சுரம் தண்மையாக உளது. என்ன வியப்பு! (௩௨௭) என்னுடன் வந்தோர், 'மழை வீழ்தலால் சுரம் தண்ணிய தாயிற்று. இனி வருத்தமின்றிப் போகலாம்' என்கின்ற னர். ஆமாம்! குளிர்ச்சியுடையதாக இருப்பது உண்மை தான். நறுமலர்களும் பரந்து மணம் வீசுகின்றன. எனி னும் என் துணைவி என்னுடன் இல்லாததால் இவ்வழி வெப்பம் மிகுந்ததாயுளதே! என்னென்று கூறுவேன்! வியப்பாயிருக்கிறது. (௩௨௮) மனமே நில். திரும்பிப் போக எண்ணுகிறாயே! (உடன் வந்தவர்களை நோக்கி) நண் பர்களே, என் நெஞ்சம் என் தலைவியிடம் போய்விட்டது. ஆதலால், மேலும் செல்ல வலிமை யற்றுவிட்டது. என் செய்வேன்! (௩௨௯) வெயிலால் வெந்துகளாகிய வெயிற் கடம் நீந்தி வந்தனமாயினும் மனமே, இனிமேற்கொண்டு செல்வதை ஒழித்திடுவோமாக. என் தலைவி அழுத கண்ண ளாய் நலம் சிதையக் கதிர் தெறும் வெஞ்சுரம் நினைத்து வருந்துவாள். மேற் செலவை விடுவோமாக!' (௩௩௦)

பிரிந்து வந்த தலைமகன் தலைமகளை நலம் பாராட்டக் கண்ட தோழி 'இவள் குணத்தினை மறந்து எப்படியிருந் தாய்?' என்று வினவியதற்குத் தலைவன், 'ஒருபோதும் மறந்ததில்லை' என்று கூறிய துறையும், பிரிந்து வந்த தலை மகன், 'சுரத்தின் வெம்மையை எங்ஙனம் ஆற்றினீர்?' என்ற தோழிக்கு, 'எம் விருப்பத்தையுடைய காதலியது பண்பைத் துணையாகப் பெற்றுச் சேறலின் வெப்பத்தை யுடைய அரிய காடு என்னைத் துன்புறுத்தவில்லை' என்று செப்பிய துறையும் இப்பத்தில் உள்ளன.

## (4) தலைவி இரங்கு பத்து

தலைவி வருந்துதலைக்

யது என்பது பொருள்.

கூறும் பத்துப் பாக்களையுடை

**தலைவி:** தலைவர் செல்லும் வழியிடத்து மலையில் உள்ள பூக்களின் நறுமணத்தால் என்னை நினைந்து முடியச் செல்லாமல் திரும்பிவிடுவாரோ?



**தோழி:** தலைவியே, வெண்கடம்பு மரத்தினது வெண்ணி றப் பூவானது அரிய சுரத்தில் செல்வோர் தாம் விட்டுப் பிரிந்தோரை நினைத்தற்பொருட்டு நறு நாற்றம் வீசும் மலையின்கண் நந்தலைவர் சென்ற வழி செல்லுதற்கு அரியதாகலின் இன்னாமையுடையது என்பர். (௩௩௧)

**தலைவி:** தோழி, வாழி! மலைகள் பொருந்திய காட்டில் இருக்கும் விலங்குகள், 'கொடிதே காதலியைப் பிரிதல். செல்லாதே' என்று சொல்லக்கூடாதா? அவ் விலங்குகள் சிறிதும் அறம் இல்லாதன. என் செய் வேன்! (௩௩௨)

பறவைக் கூட்டமாவது, 'யாங்கள் எங்கள்

துணைப்பெண் பறவைகளோடுள்ளோம். நீ எப்படி நின் துணையை விட்டுப் பிரிந்திருக்கின்றாய்?' என்று சொல்லலாகாதோ? மனம் வருந்துகிறேன். (௩௩௩)

தோழி, வாழி! நெல்லிமரங்கள் நீண்ட—கல் காய்ந்த—காட்டின்கண் என் பேதை மனம் பின் செ- சென்றோர், என் கண்கள் நீர்விட்டு அழக் கல்லினும் மனம் மிக வலியர். (௩௩௪)

தலைவர் சென்றவழி, இரத்தம்போல் சிவந்த செவியையுடைய கழுகுகள் புலால் நாற்றத்தை அறிந்து ஆரவாரிக்கும் அரிய கொடிய வழி என்பர். (௩௩௫)

ஆ! நினைக்கும்போதே மனம் வேகிறது. முன்னெல்லாம் அவர் பிரியார்போன்று இருந்தவர் இன்று மிகவும் நிலையில்லாத பொருள்மேற் சென்ற விருப்பம் நிறைவேற வெயில் நீடித்த காட்டைக் கடந்து சென்றாரே! (௩௩௬)

தோழி! என்னைத் தழுவி இன்புறுதலைக் காட்டிலும் அவர் தேடக் கருதிய பொருள் பெரிதும் இனியதாம். பிரிவிற்கு அழாமல் என் செய்வேன்! (௩௩௭)

தோழியே! அவர் எப்படிப்பட்ட காலத்தில்பிரிந்தார்! மலைச் சாரலில் இலையில்லாதனவாய் மலர்ந்திருக்கின்ற உயர்ந்த தோற்றத்தை உடைய இலவமரம் மலையில் பற்றி எரிகின்ற தீப்போன்று தோன்றும் காட்டிடத்தில் பிரிவரிய காலத்தில் பிரிந்து சென்றாரே. இப்படிச் செய்தலில் வல்லவர் தலைவர். (௩௩௮)

தோழி : சொல்லிச் சென்ற பருவம் வந்துவிட்டதே.

தலைவி : தோழி! சிறிய இலைகளைக்கொண்ட குறுங்கிளைகளையுடைய வேப்பமரத்தின் பழங்களைத் தின்பதற்கு வௌவால் உயரப் பறக்கின்றது. இதனால் மாலைக் காலம் நெருங்கிவிட்டது அறிகிறோம். அவர் சென்ற நாட்டிலும் இப்பொழுது மாலைக்காலந்தானே இருக்கும். (௩௩௯)

சொன்ன பருவமும் வந்துவிட்டது. என் தலைவர் கடிதின் வருவார் என்று கருதி ஆற்றியிருந்தேன். இன்னமும் வரவில்லை. என்னை நினைக்கமாட்டார் போலும். மூங்கிலில் தோன்றிய தீயைப்போல ஊரின் கண் அலர்எழ யாம் மருளுற்றனம். இரங்காமல் என்ன செய்வது! தோழி, சொல். (௩௪௦)

## (5) இளவேனிற் பத்து

தலைவன் பிரிந்துழிக் குறித்த இளவேனிற் பருவம் வரக்கண்ட தலைமகள் இரங்கிக் கூறிய பத்துப்பாக்களையுடையது இளவேனிற் பத்து. 'அவரோ வாரார் தான் வந்தன்றே' என்னும்அடி, பாத்தொறும் முதலடியாகவந்து இப்பத்தைப் படிக்குந்தொறும் படிக்குந்தொறும் இன்புறுத்துகின்றது.

தலைவியின் தனிமொழி: (அழுகிறாள்) அவரோ வரவில்லை. ஆனால், குயிற்பேடை அகவ, நீர் குறையும் காலமாகிய இளவேனில் வந்துவிட்டது. (௩௪௧)



அவரோ வரவில்லை. ஆனால், வண்டுகள் தேனையுண்டு மயங்கிப் பண்ணைப் பாடும்படியானதும் நுணமரப் பூக்கள் மணம் வீசுவதுமான இளவேனிற் காலமோ வந்துவிட்டது. (௩௪௨)

அவரோ வரவில்லை. ஆனால், கோங்கமரங்கள் பூவிட்டு மலரும் காலமாகிய இளவேனிலோ வந்துவிட்டது. (௩௪௩)

அவரோ
கொய்யும்
(௩௪௪)
வரவில்லை. ஆனால், குரவமரப் பூவைக்
இளவேனிற் காலமோ வந்துவிட்டது.

அவரோ வரவில்லை. ஆனால், அவராற் குறிக்கப்பட்ட புதிய பூக்களையுடைய புனலிக் கொடியானது பரத்தலினாலே கருமணலானது
கதுப்பைப்போல
அழகு கொள்ளுகின்ற இளவேனிலோ
வந்துவிட்டது.
(௩௪௫)

அவரோ வரவில்லை. ஆனால், இளமுலைகள் பொலிவுடைய நெற்பொரி போலும் பூவினையுடைய புன்க மரத்தின் தளிரை அப்பும் இளவேனிலோ வந்துவிட்டது. (௩௪௭)

அவரோ வரவில்லை. ஆனால்,
வலமாகச் சுழித்த
வெண்கடம்பினால் அலங்கரிக்கப்பட்டு நம்முடைய நறுமணம் வீசும் குளிர்ந்த சோலை மலரும் இளவேனிலோ வந்துவிட்டது. (௩௪அ)

அவரோ வரவில்லை. ஆனால், மாமரத்தின்கொம்பு மறைய நெருப்பைக் கக்கும் இளந்தளிரை ஈனும் இளவேனிலோ வந்துவிட்டது. (௩௪௯)

அவரோ வரவில்லை. ஆனால், அவராற் குறிக்கப்பட்ட வேம்பினது பூ உதிர, இன்சொல்லினரான என் தலைவர் என்னைத் தெளிவிக்கும் இளவேனிலோ வந்துவிட்டது. (௩௫௦)

## (6) வரவுரைத்த பத்து

பிரிந்த தலைமகன் வரவினை உரைத்த பத்துப்பாக்களை யுடையது.

தோழி : மடந்தையே! காட்டு வழியிலுள்ள வெயிலால் வாடிய பலாவினது சிறுகாயை அருஞ்சுரம் செல்கின்றவர்கள் அருந்திச் செல்கின்ற காடு பின்னே கழிய, நின் தலைவர் வந்துவிட்டார். வாடுதல் ஒழிக. (௩௫௧)

தோழி! குற்றமில்லாது தொடுத்தலில் வல்ல வீரர் வில்லினின்றும் அம்பை எய்வதனால் இறந்தோரது பெயர் பொறிக்கப்பட்ட நடுகல்லைப்போன்ற பெரிய சருச்சரையையுடைய பெரிய கையையுடைய யானை கோபம் மிகுந்து செல்வோரைக் கொல்லும் வெஞ்சுரம் கடத்தற்கு அரியது என்னாது கடந்து திரும்பிவந்தார். வருந்துவதை விடுக. (௩௫௨)

தோழி! சோதி வல்லிக்கொடி சூழ்ந்த சிவந்த மலைபோல் ஒளி பொருந்திய ஆபரணம் விளங்கும் தமது மார்பை நீ விரும்பி முயங்கத் திரும்பி வந்தார். இனி நீ வருந்தவேண்டியதில்லை. (௩௫௩)

பெண்ணே! அன்பினையுடைய பெண்

நாய்

புணர்ந்த ஆண்செந்நாயானது குட்டியையுடைய பெண்மானைக் கொன்று கொள்ளாது போகும் தீதற்ற அரிய சுரத்தைக் கடந்து விரைந்துவந்தார் நின் தலைவர். (௩௫௪)

தோழி! குரவம்மலராக் கடம்பமரம் பூப்ப, சுரமானது பொருந்திய காட்டைக்கண்டு பொருள் மேற்கொண்ட ஆசையால் வரும் செலவு (செல்வதை) அழுங்குக என நினைந்து நினது அழகிய நிறம் அழகு பெறத் திரும்பி வந்தார் நின் தலைவர். (௩௫௭)

தோழி! பெரிதும் அவர் பிரிந்திருத்தலை எண்ணித் துடைக்குந்தோறும் துடைக்குந்தோறும்



உடைத்தெழு வெள்ளமாகிய
நீட்டிக்கவிடுமோ! விடாதே.
(௩௫௮)

கண் அவரை அங்கே
இதோ வந்துவிட்டார்.

[இதுவரை தலைவிக்கும் தோழிக்கும் நடைபெற்ற உரையாடல் மாறுகிறது. தலைவனும் தலைவியும் உரையாடுகிறார்கள்.]

**தலைவி :** என்னை நினையாமல் நீண்ட நாட்கள் களே! அறமாகுமா?

தங்கிவிட்டேர்

**தலைவன் :** அரிவையே! யான் பிரிந்துவிடத்து நின் அழகை நினைந்து அரிய செயலையுடைய பொருள்மேற் கொண்ட ஆசை ஒழியட்டும் என்று நினைந்து நண்பர்கள் விலக்குவர் எனக் கருதி அவர்களிடம் சொல்லாது, நினைந்த அளவு வரைக்கும் பொருள் தேடுவதை விடுத்துப் பெற்ற பொருள்கொண்டு யானை திரிகின்ற குறுக்குவழி அமைந்த காட்டுவழியாகவன்றோ வந்தேன்! தாமதித்து வந்ததாகக் கூறுகிறாயே? (௩௫௫)

**தலைவி :** பொருள் மீதன்றோ எண்ணம் இருந்திருக்கும்? என்னை எங்ஙனம் நினைந்திருக்கக் கூடும்?

**தலைவன் :** என் அன்பே! நின்னை எங்ஙனம் மறப்பேன்? செல்வர் யானைகட்டிய பொற்கயிறுபோலத் தீப்பற்றி எரியும் காட்டுவழியில் நின் குணங்கள் என்னைப் பிணித்தன. நின் பண்புகள் அங்கே உள்ளுதற்கு இனியவாய் இருந்தன. (௩௫௬)

**தலைவி :** எங்ஙனம் அந்த நீண்ட வழியைக் கடந்தீர்களோ?

**தலைவன் :** அணியிழை அணங்கே! அரும்பொருள் வேட்கையமாகி நின்னைத் துறந்து பெருங்கல் அதரிடைப் பிரிந்த காலைத் தவநனி நெடியவாயின வழிகள்; இனியே(இப்போது)நின்னை உள்ளி வருதலின் சுரத்திடை வழிகள் தவநனி இனியவாயின. பிரிந்த போது சேய்மையாக இருந்த வழிகள் திரும்பிய காலத்து அணிமையாயின. (௩௫௭)

தலைவி : அரிய வழிகளின் தொல்லை பாராது களே! அதுவே போதுமானது!

வந்துவிட்டேர்

தலைவன் : நெடுமான் நோக்கி! ஆசை பொருந்திய நெஞ்சம் முயங்குதலை மிக விரும்பி விசையினையுடைய குதிரை பூண்ட தேரைச் செலுத்தி நின்னை நினைத்து யான்வர, எரிகவர்ந்துண்ட வெயில் பொருந்திய நீண்ட வழிகள் அருமையுடையவாயினும் எளிமை யுடையனவாயின. (௩௯0)

## (7) முன்னிலைப்பத்து

முன்னிலைப்படுத்திக் கூறியவை இருத்தலால் இது முன்னிலைப்பத்து எனப்பட்டது.

உடன்போக்கின் கண்ணும் பிறண்டும் கூறிய கூற்றுக்கள் இப்பத்தில் கூறப்பட்டுள்ளன இஃது உரையாடல் முறையில் அமையாதென விடப்பட்டது.

## (8) மகட்போக்கிய வழித் தாயிரங்குபத்து

உடன் போக்கின்கண் நற்றாய் இரங்குதலைக் கூறும் செய்திகளையுடையது. செவிலிகூற்று

நிகழ்தலும் உண்டு
போலும்.

“ தன்னும் அவனும் அவளும் சுட்டி
மன்னும் நிமித்தம் மொழிப்பொருள் தெய்வம்
நன்மை தீமை அச்சம் சார்தல் என்று
அன்ன பிறவும் அவற்றொடு தொகைஇ
முன்னிய காலம் மூன்றுடன் விளக்கித்
தோழி தேஎத்தும் கண்டோர் பாங்கினும்
போகிய திறத்து நற்றாய் புலம்பலும்
ஆகிய கிளவியும் அவ்வழி உரிய.” (தொல், அகத்திணை: ௩௬)

தலைவியும் தலைவனும் உடன்போய காலத்து அம் மகட் பயந்த நற்றாய் தன்னையும் தலைவனையும் தன்மகளை யும் குறித்துக் காலம் மூன்றுடன் நிலைபெற்றுவரும் நல் வினை தீவினைக்கு உரிய செயல்களைத் தன் நெஞ்சிற்கு

விளக்கி வருந்திக் கூறுதலும், அச்சம் சார்தல் என்று கூறப்பட்டவற்றையும் அவைபோல்வன பிறவற்றையும் பல்லி முதலிய சொல் நற்சொல் தெய்வம் கட்டினும் கழங்கினும் இட்டு உரைக்கும் அத்தெய்வப்பகுதி என்றவற்றோடு கூட்டி வருந்திக் கூறலும், தோழியது ஆற்றுமையைக் கண்டுழியும் தலைவியைத் தேடிப்போய்க் காணுது வந்தாரைக் கண்டுழியும் வருந்திக் கூறலும் அவ்வுடன் போக்கிடத்துச் சான்ருேராற் புலனெறி வழக்கம் செய்தற்குரியவாய் வரும் கிளவிகளும் உடன்போகிய திறத்துக்கு உரிய. (அகத்திணை : ௩௬)

இந்நூற்பாவில் குறிப்பிட்டவாறு உடன்போக்கு நடந்தபோது தாயர் வருந்திக் கூறியனவற்றை இப்பத்து அறிவிக்கிறது.

நற்ருய் (பெற்ற தாய்) தன் நெஞ்சொடு கூறுகிருள்:

நெஞ்சமே! கேள். மறவர் பறை முழக்கினல் இடிமுழக்கம் என எண்ணி மயில்கள் ஆடும் மலைகளில் உண்டாகிய மேகங்கள் மழை பொழிந்து கற்புநெறி இதுவென்று தெளிந்துவிட்ட என்மகள் போன

வழியை இனியதாக்குக! அவளது தாயிருப்பதாக! (௩௭௧)

எதிர்காலம் இனி

மூதூரிடத்து அலர் எழக் காளையுடன் பல மலை களைக் கடந்து சென்ற என்மகள் என்னை அங்கு நினைப்பாளோ? (௩௭௨)

என் மகளைக் கொண்டு சென்றானே. கொண்டு தலைக் கழிந்த கொடுமையை என்னென்பேன்! புலி யால் கொல்லப்படுதலுக்குப் பிழைத்த கவைக்கோட்டு முதுக்கலைமான் தன் பிணைமான் அணைய ஆண்குர லால் விளிக்கும் வெஞ்சுரத்தில் என் மகளைக் கொண்டு சென்ற அந்த விடலையின் தாய், யான் என் மகளை நினைக்குந் தோறும் அழுகின்ற துயரத்தை அடைவா ளாக. (௩௭௩)



என்மகள் கடுவனும் புகுந்தறியாத காட்டுவழி யாகக் கடுமையான வேனிலில் காளைபின்னே ஏகினளே. அவள் இளையளாயினளே. அவளது இளமைப் பருவம் வேனிலிலே காட்டுவழி செல்லும் துன்பத்தைத் தாங்காதே. (௩௭௪)

சேரியும் அயலும் தேடிக் காணாது வந்தாரை நோக்கிச் சேரியிலும் பிற இடங்களிலும் தேடி வந்தீர்கள். ஐயோ! என்செய்வேன்! காணவில்லையே! இங்கே பாருங்கள். இஃது என் பாவைபோன்ற மகளின் விளையாட்டுப் பாவை. இது கிளிமொழியாளாகிய என்மகள் எடுத்த பைங்கிளி. இவற்றை நான் காண்டொறும் காண்டொறும் கலங்க என்மகள் என்னை விட்டு நீங்கினளோ? என்செய்வேன்! (௩எ௫)

என் தீவினையை என்சொல்வேன்! நல்வினை நெடுநடுநகர் கல்லெனக் கலங்க என்மகளைக் காட்டின்கண் போகுமாறு செய்த அறனில் பாலே (தீவினை) காட்டிலுண்டாகும் தீயைப்போலக் கொதிப்பதாக! (௩எ௬)

என்மகள் விளையாடிய பந்து முதலிவற்றைக் கண்டாலே என்மனம் வெந்து கலங்குகிறது. அவற்றைக்கண்டு மனம் புண்படுமாறு அவள் நீர்வேட்கையினால் வருத்தமுற்ற யானை நெடு வங்கியம் என்னும் வாத்தியம் போல நெட்டுயிர்ப்புக் கொள்ளும் காட்டின்கண், அவள் பந்தையும் பாவையையும் கழங்கையும் இங்கே எமக்கு விட்டுச் சென்றனளே. (௩எஎ)

என் மகளின் தோழியும் அவளைக் காணாது அழுகின்றாள். தோழியின் ஆற்றாமையைக் காண என் நெஞ்சம் கலங்குகிறது. வெளவால் உயரப் பறக்கும் மாலைக்காலத்தில் யாம் வாடச் சென்ற அவள்மேற் கொண்ட அன்பின் காரணமாக நான் வருந்துகின்றேன். தோழியாகிய இவளும் அவளைக் காணாது ஏங்குகின்றாள். (௱௭௮)

என் மகள் தன் காதலனுடன் வெளியேறியபின் பன்றே, “அவனை அவள் காதலித்த காரணத்தால்





உடன்போயினள்” என்று இப்போது அறத்தொடு நிற்பாளாயினள் தோழி. முன்னமே கூறியிருந்தால் நாமே திருமணத்தை முடித்திருக்கலாம். பனிவரை இனக்களிறு வழங்குஞ் சோலையில் காதலனுடன் கூடிச் செல்வது, தன்னை விரும்பி ஒழுகும் ஆயமொடு செய்யும் நன்மண நுகர்ச்சியினும் அவட்கு இனிமையுடையது போலும். (௱௭௯)

[சிலர் செவிலித் தாயைத் தெருட்டுமாறு முயல்கின்றனர்.]

தெருட்டுவார்: அன்னையே, நீ ஏன் வருந்துகிறாய்? தாதே!

வருந்

செவிலித்தாய்: காட்டின் நீளிடை அவளொடு மடவரலின் தாயர் என்னும் பெயரே யான்

போகிய
வல்லாறு
எடுத்தேன். அவளுடைய ஆயத்தார் எனக்கு அப் பெயரைக் கொடுத்தார்கள். வளர்த்த அன்பால் வாடுகிறேன்.

(9) உடன்போக்கின்கண் இடைச்சுரத்து உரைத்த

பத்து

இப்பத்து உடன்போக்கின்கண்
நிகழ்ந்தனவற்றைக் கூறுவது.

இடைச்சுரத்தில்

தலைவனும் தலைவியும் செல்கின்றார்கள்.

இடம்:—இடைச்சுரம்

[வெண்கடம்பு மரத்தடியில் நிழலில் இருவரும் நிற்கின்றனர்.]

கண்டோர்: பைங்காய் நெல்லியைப் பலாக்காயுடன் தின்று வெண்கடம்ப மரத்தின் நிழலில் நிற்பவர்கள் யாராக இருக்கலாம்? மகன்றிலை ஒக்கும் ஈருடம்பிலே ஓருயிர் கலந்த தன்மைக் காதலர்கள் இவர்கள் போலும்! மகிழ்ச்சியாகப் போவார்களாக. (௩௮௧)

[அவ்விடத்தை விட்டுச் சென்று பகலில் இருவரும் இடைச்சுரத்தில் உள்ள ஓர் ஊரில் தங்குகிறார்கள். ஊர்ப்பெண்டிர் பார்த்து இரங்குகின்றனர்.]



கண்டோர்: காளையும் அவனுடைய

காதலியும் உடன்
போக்கில் ஈடுபட்டு இங்குவந்து இவ்வூரில் இப்பகற் பொழுதில் சிறிதுநேரம் தங்கியிருக்கிறார்கள். மகளிரைப் பெற்ற மனைக்கண் வாழும் பெண்டிர் இவர்களைக் கண்டு 'உடன்போக்குத் தகாதே
வருந்துகிறார்கள். உண்மைதானே!

' என்று உளம்
(நஅஉ)

[உடன்போகிய தலைவன் காட்டில் கடம்ப மரத்தின் கிளையை வளைத்து நிற்கிறான்.

தலைவி பூப்பறித்துத் தன் பாவைக்கும் தனக்கும் வகுத்துக்கொள்கிறாள்.]

கண்டோர்: (தங்களுக்குள்) இவள் தனக்கும் தனது தண்டான்கோரையாற் செய்த பாவைக்கும் பூப் பறித்து வகுத்துக் கொள்ளும்படி இவளுடைய காதலனை தலைவன் கடம்ப மரத்தின் சிறிய கிளையைப்

பற்றி வலமாகச் சுரித்த வெள்ளிய பூங்கொத்தைக் கொய்தற்குக் கொடுத்துநின்று மகிழ்வதைப் பாருங்கள். (௩௮௩)

[உடன்போகிய தலைவி ஆண்டுவரும் அந்தணர்களைக் கண்டு கூறுகிறாள்.]

தலைவி: சேட்புலம் கருதிப் பைய நடக்கும் அந்தணீர், நும்மை வேண்டிக்கொண்டு ஒன்று கூறுகிறேன். என் ஊர்க்குச் செல்லும்போது என்னை இழந்து வருந்தும் என் தோழிமாரைக் கண்டு யான் அரிய வழியைக் கடந்து சென்றதாகக் கூறுமாறு வேண்டுகிறேன். (௩௮௪)

[வரைவு மறுத்ததனால் உடன்போய தலைவி இடைச்சுரத்தில் தன் ஊரினர் சிலரைக் காண்கிறாள்.]

தலைவி: இவ்வழிப் போகின்றவர்களே, என்னை அப்போதெல்லாம் பாராட்டி இப்போது என் விருப்பப்படி என் காதலனை யான் மணக்க மறுத்ததனால் என்னை இழந்து வருந்தும் என் அறனில் யாய்க்கு, 'நின் மகள் காளையுடன் தேரேறிக் காட்டைக் கடந்து சென்றாள்'



என்று கூறுமாறு வேண்டுகிறேன். என் உடன்போக்கை உணர்த்தி விடுங்கள். (௩௮௫)

தலைவியின் இல்லம்.

[தலைவியை இடைச்சுரத்துக் கண்டார் தலைவியின் தாயைக் காண்கிறார்கள்.]

**இடைச்சுரத்துக் கண்டார்:** அன்னையே, நீர்தாம் தாய் போலும். நெடுஞ்சுவர் நல்லில் மருண்ட இடும்பை உறுதலுடையாளே, நின் கடுஞ்சூல் மகளைச் சுரத்திடைக் கண்டோம். அவள் யானையுடன் புலி வாழ்கின்ற அரிய வழியைத் தன்னை விரும்பிய காதலனுடன் கூடிச்சென்றாள். இதனை அறிவிக்குமாறு வேண்டினாள்.

[செவிலி வழியில் அந்தணரைக் கண்டு வினவுகிறாள். அவர்கள் அவளுக்குக் கூறுகிறார்கள்.]

**செவிலி:** அறம்புரி அருமறை நவின்ற நாவின் திறம்புரி கொள்கை அந்தணீர், உங்களுக்கு வணக்கம். ஒரு பெண் இவ்வழியாகப் போயினளோ?

**அந்தணர்:** 'அறம்புரி அருமறை நவின்ற நாவின் திறம்புரி கொள்கை அந்தணீர் தொழுவல்' என்று சொல்லி ஒண்டொடியைக் குறித்து வினவும் பேதையாகிய பெண்ணே, காட்டின்கண் அவளைக் கண்டோம். இனிய துணைவன் அவளை இனிது பாராட்ட மலைகளைக் கடந்து சென்றாள். முத்து, யாழ், சந்தனம் பிறர்க்குத்தான் பயன் படும் என்று நீ அறியாயோ? தேடிச் செல்லுதல் ஒழிக. (கஅஎ)

[செவிலி இடைச்சுரத்தில் வேறு சிலரைக் காண்கிறாள்.]

செவிலி : இவ்வழிச் செல்லும் ஐயன்மீர், இவ்வழியாக ஒரு மகனும் ஒரு மகளும் போதல் கண்டீரோ?

வழிச்செல்வோர் : கண்டோம் அன்னாய்! இந்த யா மரத்தினது நிழலில் சிறிது தங்கிப் பின்னர்ச் சிறிது கடந்



தால் காளையும் மடந்தையும் கடந்துடைக் காண்பாய். (௩அஅ)

சென்ற காட்

செவிலி : ஐயன்மீர், காளையொடு கொல்லிப்பாவைபோலும் அழகிய தொடியணிந்த என் மகள் சென்றாள் என்னீர். வியக்கத்தக்க அவளது அழகிய சிலம்பு பணியும் தாள்கள் கடத்தற்குப் பொருந்தியிருந்தனவோ? (௩அகூ)

[செவிலி வேறு சிலரைக் கண்டு வினவுகிறாள்.]

செவிலி: பெரியீர், வணக்கம். இவ்வழியாக ஒருத்தியும் செல்லக் கண்டீரோ?

ஒருவனும்

வழிச்செல்வோர் : பலரையும் கைதொழுது பலமுறை மறுக்கமுற்று 'இவ்வழி ஒருத்தியும் ஒருவனும் சென்றமை கண்டீர்களோ?' என்று வினவுவோயே, அவளைத் திண்டோள் வல்விற் காளையோடு ஐயமின்றிச் சுரத்திடை யாம் கண்டனம். (௩௯0)

## (10) மறுதரவுப் பத்து

இது தலைவி மீளுவது பற்றிய பத்துப்பாக்களைக் கொண்டது.

[தலைவி மீடற்பொருட்டுத் தாய் காகத்திற்குப் பராய்க்கடன் உரைக்கிறாள்.]

தாய் : சிறுகருங் காக்கையே, அன்புடை மரபின் நின் கிளையோடு உண்ணும் பொருட்டுப் பச்சூன் பெய்த பசிய நிணமாகிய உணவைப் பொன்னாற் செய்யப்பட்ட ஏனத்தில் வைத்துத் தருவேன். காதலனோடும் என் மகள் திரும்பி வீடு வரும் வண்ணம் கரைவாயாக. (அன்பிணையுடைய என் சுற்றத்தார் மகிழ அவர்கள் வந்து சேரவேண்டும். வந்தால் மணச்சிறப்பு நடைபெறும். நீயும் உன் சுற்றத்தோடு உணவு உண்டு மகிழலாம். காளையொடு அஞ்சில் ஓதியை வரக் கரைவாயாக.) (௩௯௧)

[உடன்போய் மீண்டு வந்த தலைவி வழிவரல் வருத்தங் கண்டு ஆற்றாளாகிய தோழிக்குக் கூறுகிறாள்.]

தலைவி: தோழி, வாழி! வேய்வனப்பிழந்த தோளும் வெயில்தெற அழகு தொலைந்த நுதலும் நோக்கி வருந்தாதே. நீ வருந்தினால் என் தலைவனோடு வந்த காரணம் எல்லையில்லாத துன்பத்தைத்தரும். (நடூஉ)

[அயலார் நற்றாய்க்குத் தலைவியின் வரவைக் கூறுகின்றனர்.]

அயலார்: அன்னாய், நின்னைத் துறந்து சென்ற அவளை நினைத்துக்கொண்டு துன்பம் வருத்த மெலிந்து நல் வினையைப் பழித்து வருந்தும் தாயே, இதோ வந்து கொண்டிருக்கிறாள் நின்மகள். தலைவன் பின்னே இங்கேவர, நின்மகள் முன்னாக வந்து நிற்கிறாள். வருத்தத்தை விடுக. (நடூந)

[தாய் தன் மகள் திரும்பி வந்துவிட்டதைச் சுற்றத்தாருக்கு உரைக்கிறாள்.]

நற்றாய்: சுற்றத்தாரே, வம்மின். மாண்பில் கொள்கையொடு மயங்குதுயர் செய்த அன்பில் அறனும் அருள் செய்தது. மகளும் தன் காதலனுடன் மீண்டு வந்து விட்டாள். துன்பம் ஒழிந்தது! (நடூச)

[தலைவி உடன்போய் மீள்வாள் தன்னூர்க்குச் செல்கின்றாரைக் கண்டு கூறுகிறாள்.]

தலைவி: எங்கள் ஊருக்குச் செல்லும் பெரியீர், ஒன்று வேண்டுவன். கவிழ்ந்து தொங்குகின்ற மயிர் பொருந்திய கழுத்தையுடைய ஆண் செந்நாயானது குருளை (குட்டி) பொருந்திய பன்றியைக் கொன்று கொள்ளாது போகும் சுரத்திடைப் பெரிதும் வருகின்றாள் உங்கள் தோழி என்று, விரைந்து செல்கின்ற நீவிர், எங்களுக்கு முன்னேபோய் இனிய புன்சிரிப்பையுடைய எனது ஆயத்தார்க்குச் சொல்லுவீராக. (௩௯௭)

[தலைவி மீண்டுவந்துழி அவட்குத் தோழி கூறுகிறாள்.]

பாலை

## 199

தோழி: தலைவியே, புட்களும் அறியமாட்டாத பலாப்பழம் பழுத்து மடமானும் அறியமாட்டாத தடநீர் நிலை உடையதாய் அச்சுரம் மிக இனியவாகுக என்று சுரத்தின் கொடுமையை நினைக்குந்தோறும் அழும் என்னினும் நம்மூர் மிகவும் புலம்பினது. (௩௯௮)

[உடன் கொண்டுபோன தலைவன் மீண்டு தலைவியைத் தன் இல்லத்துக் கொண்டு புக்குழி அவன்தாய் சிலம்புகழி நோன்பு செய்கின்றாள் எனக் கேட்ட நற்றாய் ஆண்டுநின்று வந்தார்க்குக் கூறுகின்றாள்.]

நற்றாய்: என் மகளுடைய தலைவன் தாய் என் மகளுக்குச் சிலம்புகழி நோன்பு செய்கின்றாள் என்று கூறுகின்றீர். காளையைப் பெற்ற தாய்க்கு நும்மனைச் சிலம்பு கழீஇ அயரினும் எம்மனையில் வதுவை நன்மணம் கழிக எனச் சொல்லின் யாதோ? (௩௯௯)

[உடன்போய் வதுவை அயரப்பட்ட தலைவி, 'தலைவனொடு இன்று வருவாள்' என்று சொல்லக்கேட்ட செவிலித்தாய் நற்றாய்க்குக் கூறுகிறாள்.]

நற்றாய்: தோழியே, நம்மகளைப் பற்றி ஏதாவது செய்தி அறிவாயோ?

செவிலித்தாய்: தாயே, வேனிற் காலத்தில் காதல் புணர்ந்தனளாகி ஆய்கழல் காளையொடு இன்று நம்மில்லம் வருவாள் என்று தூது வந்தது. இதுதான் மகிழ்ச்சியான செய்தி. (௪00)

தலைவன் உடன்போக்கின்கண் இடைச்சுரத்தில் தலைவிக்கு, 'இன்னாமையுடைய அரிய சுரத்தைக் கடந்தனம், இனிப் பையச்செல்க' எனக் கூறிய துறையும், 'நமதூருக்குப் பகல் விருந்தினராகப் புகுவோம், காட்டின் வழியைக் கடந்த வருத்தத்தை, மடந்தையே, தணித்துக் கொள்க' என்று கூறிய துறையும் இப்பத்தில் அமைந்துள்ளன.

நாடக அமைப்பின் வழியாக ஐங்குறு நூற்றின் பாலைத்திணைச் செய்திகளைச் செவ்விதின் உணரக்கூடும். நூறு செய்யுள்களின் பொருளும் ஒருவாறு இங்கே கூறப்பட்டுள்ளது.

## செய்யுள் நயம்

இனிப் பாலைத்திணையின் செய்யுள் நயத்தைக் காண்போம். செய்யுளைக் குறித்துப் பலர் பலவாறுகூறியுள்ளனர். 'சிறப்புமிக்க மகிழ்ச்சி நிரம்பிய உள்ளங்களின் மாண்பு மிகுந்த உவகை நிறைந்த அமயங்களின் பதிவே கவிதை.' 'வாழ்க்கையின் படப்பிடிப்பே கவிதை' என்பர் ஆங்கிலக் கவிஞர் செல்லி. (Shelly). 'அழகினைச் சந்த அமைப்பில் புனைவதே கவிதை' என்பர் எட்கார் ஆலன்போ என்பார். 'கவிதை என்பது இசைக்கருத்து' எனக் கூறுவர் ஜான்சன். 'உணர்ச்சி, கற்பனை இவற்றின் மொழியே கவிதை' என்று கூறுவர் ஜார்ஜ்-ஓ-நீல் என்பார். 'வாழ்வின் ஆராய்ச்சியே கவிதை' என்றும், 'கருத்திலும் சொல்லிலும் இயற்கையாக உணர்ச்சியுடன் அமைவது கவிதை' என்றும் மேத்யூ ஆர்னல்டு கூறுவர். சங்க இலக்கியச் செய்யுளை நோக்குங்காலத்து மேத்யூ ஆர்னல்டு கூறுவது ஒருவாறு பொருந்தும் எனலாம். நல்ல மனப்பான்மை, எளிய இனிய சொற்கள், எதையும் ஊடுருவிப் பார்க்கும் அறிவுக்கூர்மை, மக்களினத்தை இயக்கும் தலைமை, அழகுணர்ச்சி, இசை, இவைற்றுடன் வாழ்க்கையைச் சித்திரித்துக்காட்டுவதுதான் உண்மைக் கவிதை என்று முடிவு கட்டலாம், பாலைத்திணைப்பாக்கள் எளிமையும் அழகும் இசையும் பொருந்த மக்களினத்தை இயக்கும் தலைமை பூண்டு மறைந்த அன்றைய தமிழக வாழ்வை இன்றும் காணும் முறையில் அமைந்துள்ள சிறப்பைப் படிக்குந்

இன்புறாமல் இருத்தல் முடியாது.

இளவேனிற்பத்தைப் படிப்பார் செய்யுள் இன்பத்தைக் காணலாம். கீழ்வரும் செய்யுட்களைக் காண்க.



## இளவேனிற் பத்து

அவரோ வாரார் தான்வந் தன்றே
குயிற்பெடை இன்குரல் அகவ
அயிர்க்கேழ் நுண்ணறல் நுடங்கும் பொழுதே.

(௩௪௧)

அவரோ வாரார் தான்வந் தன்றே
சுரும்புகளித் தாலும் இருஞ்சினைக்
கருங்கால் நுணவம் கமழும் பொழுதே.

(௩௪௨)

அவரோ வாரார் தான்வந் தன்றே
திணைநிலைக் கோங்கம் பயந்த
அணிமிகு கொழுமுகை அடையும் பொழுதே.

(௩௪௩) அவரோ வாரார் தான்வந் தன்றே

நறும்பூங் குரவம் பயந்த
செய்யாப் பாவை [1]கொய்யும் பொழுதே.

(௩௪௪) அவரோ வாரார் தான்வந் தன்றே
புதுப்பூ அதிரல் தாஅய்க்
கதுப்பறல் அணியும் காமர் பொழுதே. (௩௪௫)

அவரோ வாரார் தான்வந் தன்றே
அஞ்சினைப் பாதிரி அலர்ந்தெனச்
செங்கண் இருங்குயில் அறையும் பொழுதே. (௩௪௬)

அவரோ வாரார் தான்வந் தன்றே
எழில்தகை இளமுலை பொலியப்
பொரிப்பூம் புன்கின் முறி திமிர் பொழுதே.
(௩௪௭)

அவரோ வாரார் தான்வந் தன்றே
வலஞ்சுரி மராஅம் வேய்ந்தநம்
மணம்கமழ் தண்பொழில் மலரும் பொழுதே. (௩௪௮)

அவரோ வாரார் தான்வந் தன்றே
பொரிகால் மாஞ்சினை புதைய
எரிகால் இளந்தளிர் ஈனும் பொழுதே. (௩௪௯)

---

1. செய்யாப்பாவை என்பது பூ. அது பாவை போலிருப்ப தனால் பாவை எனப்பட்டது.

அவரோ வாரார் தான்வர் தன்றே
வேம்பின் ஒண்பூ உறைப்பத்
தேம்படு கிளவியவர் தெளிக்கும் பொழுதே.

(கூ௫௦)

காலஞ்சென்ற நமது நாட்டுக் கவிஞர் சுப்பிரமணிய பாரதியார் சப்பான் நாட்டுக் கவிதையைப் பற்றி எழுதிய கட்டுரையில், "அருமையான உள்ளக் காட்சிகளை எளிமை கொண்ட நடையினிலே எழுதுவது நல்ல கவிதை" என்றும், "பாட்டிலே வலிமை, தெளிவு, மேன்மை, ஆழம், நேர்மை இருக்கவேண்டும்" என்றும், "ஒரே அடியாய்க் கவிதை சுருங்கிப் போய்விடுதல் நல்லதன்று" என்றும் குறிப்பிட்டுள்ளார். சுப்பிரமணிய பாரதியார் கூறிய அப் பண்புகள் அனைத்தும் இப்பத்துப் பாக்களில் மிளிரக் காணலாம். எத்தனை முறை படித்தாலும் தெவிட்டாத வகையில் இளவேனிற்பத்து இருக்கிறது. இதுதான் தலை சிறந்த கவிதைக்குரிய இனிய பண்பாகும். மிகக் குறுகிய மூன்று அடிகளில், "அவரோ வாரார் தான்வர் தன்றே" என்னும் அடி பத்துப்பாக்களிலும் முதலடியாக வருமாறு அமைய, இளவேனிற் பருவம் இனிய காட்சி அளிக்கச் சித்திரித்துக் குறித்த பருவத்தில் தன் தலைவன் வாராமை யால் தலைவிக்கு ஏற்படும் அகத்துணர்ச்சியை வெளிப்படுத் திப் படிப்பார் உள்ளம் கொள்ளை கொள்ளும் முறையில் ஓதலாந்தையார் இப்பத்தைப் பாடியிருப்பது அவருடைய ஒப்புயர்வற்ற கவித்திறனைப் புலப்படுத்துகிறது. அருஞ் சொற்கள் மிக இன்றி, வெறுஞ்சொற்கள் அறவே இன்றி, இசையின்பத்தோடு சொற்சுருக்கம் மலிய, ஒரே அடியாய்க் கவிதை சுருங்காது, பொருள் நயம் பொலிய இப்பத்துப்

பாக்களும் பெருவிருந்தளிக்கக் காணலாம். பல பாக்களைக் கொண்டு ஒரு கவிஞரது கவித்திறம் அறியவேண்டுவதில்லை; சில பாக்களாலே தெரிந்துகொள்ளலாம். அம்முறையில் இவ்விளவேனிற் பத்து ஒன்றே பாலைத் திணை பாடிய கவிஞரது கவித்திறனை எடுத்துக் காட்டப் போதுமானது.



இவ்விளவேனிற் பத்தின் நயங்களைச் செவ்விதின் கண்டின்புற வேண்டுமெனில் முதலில் இப்பத்துக்கு எழுதியுள்ள உரைப்பகுதியைப் படித்தல்வேண்டும்; பின்னர் இப்பத்துப்பாக்களைப் படித்தல்வேண்டும் இங்ஙனம் செய்யின் இப்பாக்களில் மிளிரும் எளிமை, இனிமை, அழகு இசை, வலிமை, தெளிவு, மேன்மை, ஓரே அடியாய்ச் சுருங்காமல் சுருங்கியிருக்கும் தன்மை, ஆழம் முதலிய பல்வேறு நயங்களைக் கண்டு இன்புறுதல் கூடும். ஒருவருக்குத் தனிமையை இனிமையுறச் செய்ய வல்லது கவிதை இன்பம் ஒன்றே என்றறிக.

## காதற் கருத்துக்கள்

அமிழ்தினும் இனிய தமிழ் இலக்கியத்தைக் கற்பதன் நோக்கம் நம் முன்னோர்களுடைய பொன்போன்ற அரிய கருத்துக்களைத் தெரிந்துகொள்வதேயாகும். இப் பாலைத் திணையிலிருந்து நம் முன்னோர்கள் காதலைப்பற்றி எண்ணிய கருத்துக்களைத் தெள்ளிதின் அறிந்து கொள்ளலாம்.

தலைவனுக்குத் தலைவியின் குணம் இனிமையாயிருத்தலைக் கீழ்வரும் பாக்கள் விளக்கிக் காட்டும்:

நெடுங்கழை முளிய வேனில் நீடிக்
கடுங்கதிர் ஞாயிறு கல்பகத் தெறுதலின்
வெய்ய வாயின முன்னே; இனியே
ஒண்ணுதல் அரிவையை உள்ளுதொறும்
தண்ணிய வாயின சுரத்திடை யாறே. (௩௨௨)

அரும்பொருள் வேட்கைய மாகிநின் துறந்து
பெருங்கல் அதரிடைப் பிரிந்த காலைத்
தவநனி நெடிய வாயின; இனியே
அணியிழை உள்ளியாம் வருதலின்
அணிய வாயின சுரத்திடை யாறே. (௩௰௯)

இவ்விரு பாக்களும் தலைவனுக்குத் தலைவியின்பால் உள்ள எல்லையற்ற அன்பைச் செவ்விதின் புலப்படுத்து



கின்றன. தலைவியை விட்டுப் பிரிந்து சென்றபோது நீண்டதாயும் வெப்பம் மிக்கதாயும் இருந்த வழியானது தலைவியை நினைத்துத் திரும்பியகாலைத் தலைவனுக்கு அணிமையுடையதாயும் தண்ணியதாயும் இருந்தனவாம். தலைவனுக்குத் தலைவிபால் உள்ள அன்பு என்னே!

கீழ்வருஞ் செய்யுளடிகள் உடன்போக்கே அறநெறி எனக் கூறுகின்றன.

'அறநெறி இதுவெனத் தெளிந்தவென்
பிறைநுதற் குறுமகள் போகிய சுரனே'.

(௩௭௧)

இவ்வடிகளில் நற்றாய் தன் மகள் தன் காதலனுடன் செல்வது கற்புநெறி என்று தெளிந்து விட்டதாகக் கூறுவது காண்க.

## உவமை நயம்

பிற்காலத்து உவமைகளைப் போல இராது சங்க இலக்கியத்திலுள்ள உவமை. சங்கநூல் உவமை இயற்கையாகவே இருக்கும் என்பதை ஐங்குறு நூற்றில் காணலாம்.

'புதுக்கலத் தன்ன கனிய ஆலம்,'

(௩0௩)

கவிஞர், புதிய மட்பாண்டத்தின் நிறத்தை ஆலம் பழத்துக்கு ஒப்பிடுகிறார். உண்மையில் ஆலம்பழநிறம் கவிஞர் சொன்ன புது மட்கலத்து நிறத்துக்குச் சிறிதும் மாறுபடாதிருக்கும்.

பருந்தின் அலகை உளிக்கு உவமையாகக் கூறியிருத்தலை 'உலறுதலைப் பருந்தின் உளிவாய்ப் பேடை' என்னும் (௩௨௧) ஆம் பாட்டின் முதலடியில் காணலாம். இது பொருத்தமான உவமை.

இலவம் பூவானது இடியிடிக்கும்போது நிலத்தில் விழும் தீப்பொறிக்கு உவமிக்கப்பட்டிருக்கிறது. இதனைக் கீழே காண்க :

பாலை



முள்ளரை இலவத்து ஒள்இணர் வான்பூ
முழங்கழல் அசைவளி எடுப்ப வானத்து

உருமுப்படு கனலின் இருநிலத்து உறைக்கும்.
(கஉ0)

இவ்வடிகளில் கவிஞர், 'முட்பொருந்திய அரையினை யுடைய இலவமரத்தின் ஒள்ளிய பெரிய பூக்கள், முழங்கி எரியும் காட்டுத் தீ அசைதலால் உண்டாகிய காற்று எடுக்க வானத்தில் உண்டாகும் இடியில் தோன்றும் பொறிகள் நிலத்தில் வீழ்பவை போல் பெரிய நிலத்தில் வீழ்ந்து கிடக்கின்றன' என்கிறார். இலவம் பூவை இடியில் தோன்றும் பொறிகள் நிலத்தில் வீழ்பவைகளுக்கு உவமை கூறியது படித்தின்புறுதற்குரியது. தொலைந்தோர் எழுத்துடை நடுகல் (கூ௫௨) ஆம் பாட்டில் யானையின் சருச்சரையை யுடைய துதிக்கைக்கு உவமை கூறப்பட்டிருப்பதும் காண்க.

பொன்புனை கயிறு

தலைவியின்
புனை கயிற்றைப்

குணம் செல்வர் யானை பிணித்த பொன்
போன்று பிணிப்பதாகக் கூறும் உவமை

நயம், படிக்குந்தோறும்
வல்லது. உவமையை
உவமை,
படிக்குந்தோறும் இன்ப மூட்ட
நோக்குக. இஃது இல்பொருள்

உள்ளுதற்கு இனிய மன்ற செல்வர்

யானை பிணித்த பொன்புனை கயிற்றின்
ஒள்ளெரி மேய்ந்த சுரத்திடை
உள்ளம் வாங்கத் தந்தநின் குணனே.

(நடுகூ)

வினைமுற்றி மீண்டுவந்த தலைவன் தலைவிக்கு அவள் குணத்தைப் புகழ்ந்து கூறியது.

தலைவியினுடைய குணம் செல்வர்களாகிய அரசர்கள் யானை கட்டிய பொன்புனை கயிறுபோல், தன்னைக் கட்டி விட்டதாகத் தலைவிக்குக் கூறுகிறான் தலைவன். தலைவன், தன் தலைவியின் குணமாகிய பொற்கயிற்றால் கட்டுண்டதாகக் குறிப்பிடுகிறான். தலைவியின் குணம் பொற்கயிற்றுக்கு உவமிக்கப்பட்டுள்ளது.



[1] நற்றிணையில் தேய்புரிப் பழங்கயிறு உவமை கூறப் பட்டுள்ளது. இங்கே பொன்புனை கயிறு வந்துள்ளது.

உவமையாக

உள்ளுறை உவமம்

புலவன் சொல்லுகின்ற உவமத்தோடு ஒத்துக் கூறக் கருதிய பொருள் வந்து முடியுமாறு அமைந்திருப்பது உள்ளுறை உவமம். இது தெய்வம் நீங்கலாக மற்றைக் கருப்பொருள் நிலைக்களனாக வரும். இது பிறிதுமொழிதல் அணியை ஒத்தது.

இறைச்சியினின்றும் வேறுபட்டது உள்ளுறை உவமம். புலவன் கூறிய செய்யுளின் பொருளுக்குப் புறத்தே தோன்றுவது இறைச்சி.

இரண்டுக்குமுள்ள வேறுபாடு இதுவே.

களிறு பிடிதழீஇப் பிறபுலம் படாது
பசிதின வருந்தும் பைதறு குன்றத்து.

(௩௦௫)

பொருள்: 'ஆண்யானை தன் பெண்யானையைத் தழுவி வேற்றுப் புலத்தின்கண் செல்லாதாய்ப் பசி அறிவை வருத்த வருந்துகின்ற பசுமையற்ற மலைவழிக்கண்' உள்ளுறை உவமம்-'நீ வேற்று நிலத்துக்குப் போகாமல் இவளோடு இருந்து வறுமையினால் வருந்துதலும் அமையும்' என்பது உள்ளுறை உவமத்தால் போந்தது. இது பாலைத் திணையில் உள்ளுறை உவமைக்கு ஓர் எடுத்துக் காட்டு.

பாலைத்திணையில் ஒரு பாட்டு

கீழ்வரும் பாக்களின்
காண்க:

அடிகளிலும் உள்ளுறை உவமம்

1. "..............................................

ஒளிறேந்து மருப்பிற் களிறுமாறு பற்றிய
தேய்புரிப் பழங்கயிறு போல

வீவது கொல்லென் வருந்திய உடம்பே."
(நற்றிணை : உஅச)



ஈர்ம்பிணவு புணர்ந்த செந்நாய் ஏற்றை
மறியுடை மான்பிணை கொள்ளாது கழியும்
அரிய சுரன்.

(கஉச)

புலிக்கோட் பிழைத்த கவைக்கோட்டு முதுகலை
மான்பிணை அணைதர ஆண்குரல் விளிக்கும்
வெஞ்சுரம்.

(கஎக)

திருந்திழை அரிவை நின்நலம் உள்ளி
அருஞ்செயல் பொருட்பிணி பெருந்திரு வுறுகெனச்
சொல்லாது பெயர்தந் தேனே பல்பொறிச்
சிறுகண் யானை திரிதரு
நெறிவிலங்கு அதர கானத் தானே.

(௩௫௫)

நினைந்த எல்லையளவும் பொருள்தேட முடிவுகொண்ட எண்ணத்தைக் கைவிட்டு, பெற்ற பொருள் கொண்டு தலைவியை நினைந்து மீண்ட தலைவன் தலைவிக்குச் சொல்லியது.

'திருந்திய அணியையுடைய பெண்ணே, நின் அழகை எண்ணி அரிய செயலையுடைய பொருள்மேற்கொண்ட

ஆசை பெரிய செல்வத்தை அடைருக
நட்பினர் விலக்குவர் எனக் கருதி

என்று நினைந்து,
அவர்களிடத்தும்
பேசாது, பல புள்ளி பொருந்திய முகத்தையும் சிறு கண்களையும் கொண்ட யானை திரிகின்ற குறுக்குவழிகள் பொருந்திய காட்டு வழியே வந்தேன்' என்பது பொருள்.

'பொருட்பிணி பெருந்திரு வுறுக' என்றது குறிப்பினால் வெகுண்டுரைத்தது. பொருள்மேற் கொண்ட ஆசை பெரிய செல்வத்தை அடையட்டும். 'போதும்' என்றது தலைவன் பிரிவை யுணர்ந்து, வரக்கூடியதாகக் கருதும் பெருந்திரு வேண்டியதில்லை என்பதைக் குறிக்கும்.

'சொல்லாது பெயர்தந் தேனே' என்றது நட்டோருக்கும் உடன் சென்றோருக்கும் சொல்லாமையைக் குறிக்கிறது.

## பாலைநில வழியின் பான்மை

பாலைநிலம் அருஞ்சுரம் என்றும், கடுமையான காட்டு வழி என்றும், கல்லாக் கோவலர் கோலினால் தோண்டிய பள்ளத்திலுள்ள நீரை வேட்கையால் யானை பருகும் பல கவர் வழிகளையுடைய மலைப்பாங்கான வழி என்றும், களிறு பிடியைத் தழுவிப் பிறபுலம் படராது பசி தின வருந்தும் பசுமையற்ற வழி என்றும், ஒன்றோடொன்று உராய்ந்த மூங்கிலிடத்துப் பிறந்து ஒலிக்கின்ற காட்டுத் தீக்குப் புலியானது அஞ்சுகின்ற மலைபொருந்திய அரிய காட்டு வழி என்றும், வேங்கைப்பூக் கொய்கின்றவர்கள் பாலைப் பண்ணைப் பாடினும் அரிய வழியிற் செல் வோர் போதற்கு மிக வெருவும் காட்டுவழி என்றும், பேய் போதற்கு வருந்தக் கருங்கண் காக்கையொடு கழுகுகள் விசும்பில் பறந்து ஒலிசெய்ய யானைகள் அவ்வழிச் செல்வோரை அடித்து வீழ்த்தித் திரி கின்ற கொடிய இடர் மிகுந்த காட்டுவழி என்றும், கண்கள் கூசும் வண்ணம் விளங்கிய கதிர் தெறப்பெற்ற வைப்பினதாகிய மண்ணிடத்துப் புரை பெருகியிருக்கும் மரங்கள் காய்ந்து போயுள்ள காட்டுவழி என்றும், இலவமரப் பூக்கள் வானத்து இடியில் தோன்றும் பொறிகள் நிலத்தில் வீழ்பவைபோல் பெரிய நிலத்தில் விழும் கவர் வழி பொருந்திய காட்டுவழி என்றும், காய்ந்த தலையினை யுடைய பருந்தினது உளிபோன்ற வாயையுடைய பேடை, காய்ந்த உச்சியைக் கொண்ட ஓமை மரத்தினது அழகிய கவட்டின்கண் எறித் தனிமையுறக் கூவும் நிலம் காய்ந்த காட்டுநெறி என்றும், கடுங்கதிர் ஞாயிறு கல்பிளக்குமாறு காயும் வழி என்றும், செங்காயானது கருப்பத்தையுடைய

தன பணுவதற்கு உணும்வண்டிக் கள்ளி மரங்கள் பொருந்திய காட்டின்கண் பன்றியைத் தேடும் வெய்ய வழி என்றும், வேனிற் காலத்து அரை மரத்தினது இலையொலிக்கு அஞ்சிப் பறவை தன் உணவை உண்ணாது வேற்றுப் புலத்திற்குச் செல்லும் வெப்பத்தையுடைய அரிய காட்டு நெறி என்றும், காட்டுத்தீ எரியும் அகன்ற இடத்தில்



நிழலையுடைய இடம்பெறாமல் மடமான்பிணை தன் கன்றோடு வாட நீரற்ற வழி என்றும், புள்ளி பொருந்திய பல நிறங்களைக் கொண்ட தும்பிக்கை வெந்துபோகும் என்றஞ்சிச் சிறுகண் யானை நிலம் தொடல் செல்லா வெயிலால் பட்டுப்போன சோலைகளையுடைய மூங்கில் உயர்ந்த காட்டுவழி என்றும், ஆள்வழக்கற்ற பாழ்படு நனந்தலை வெம்முனை அருஞ்சுரம் என்றும், நெய்த்தோரை (இரத்தம்) அன்ன சிவப்பு நிறத்தையுடைய காதுகளைக் கொண்ட கழுகு மலைப்பக்கங்களில் புலால் நாற்றத்தை அறிந்து ஆரவாரிக்கும் காட்டு வழி என்றும், எரிகவர்ந் துண்ட என்றூழ் (வெயில்) நிறைந்த நீளிடை என்றும், புலியால் கொலையாதல் தப்பிய கவைத்த கொம்புகளை யுடைய முதுகலை தனது பிணைமான் அணைய ஆண் குரலால் விளிக்கும் வெய்ய சுரம் என்றும், நீர் வேட்கைக்கு ஊக்கிய வருத்தமுடைய யானை நெடுவங்கியம் என்னும் வாத்தியம்போல் நெட்டுயிர்ப்புக்கொள்ளும் அத்தம் (வழி) என்றும், புன்கண் யானையொடு புலிவழங்கு அதர் (வழி) என்றும் ஐங்குறு நூற்றில் பாலை வழி வருணித்திருப்பது காண்க.

பாலைத்திணையில் கூறப்பட்ட மரம், பூ முதலியன

வெள்ளோத்திரத்து மலர் - வெண்பூவுள்ள ஒருவகை
மரம்.

ஓமை மரம் - ஒருவகை மரம்.

விசை - ஒருவகை மரம்.

முள் இலவம்பூ - இது செந்நிறமுடையது.

கள்ளி - இது பாலை நிலத்துக்குரியது.

அரை மரம் - ஒருவகை மரம்.

கடம்பமரம் - இதுவும் ஒருவகை மரம்.

நெல்லி மரம் - இதுவும் ஒருவகை மரம்.

குரவமரம் - இதுவும் ஒருவகை மரம்.

ஐ. சொ.—14

## பாலைத்திணையில் கூறப்பட்ட பழக்கவழக்கங்கள்

அருஞ்சுரம் செல்வோர், வெயிலால் வெம்பிய சிறு பலாக்காயின் சுளையையும் நெல்லிக்காயையும் தின்பதுண்டு (௩௫௧, ௩௪௧). சிலம்பு கழித்துப் பெண்ணுக்கு மணஞ் செய்தல் பண்டை வழக்கு. சிலம்பு கழித்தலைக் கால்கழுவி வீட்டினுள் பெண்ணை அழைப்பதைக் குறிக்கும் என்பர் ஒரு சாரார். சிலம்பு என்பது ஆகுபெயராகக் காலைக் குறிக்கும். (௩௬௬) வேங்கைப்பூக் கொய்பவர்கள் பண்டைக் காலத்தில் பாலைப் பண்ணைப்பாடுவது வழக்கம். (௩௧௧)

### பாலையில் திணை மயங்குதல்

“ திணைமயக் குறுதலும் கடிநிலை இலவே
நிலன் ஒருங்கு மயக்குதல் இன்றுஎன மொழிப
புலன்நன்கு உணர்ந்த புலமை யோரே ”

என்னும் தொல்காப்பிய அகத்திணை ௧௨ ஆம் நூற்பாவால், திணைமயங்கி வருதல் பெறப்படும். “‘மாயோன் மேய காடுறை உலகமும்’ (அகத்திணை : ௫) என்பதனுள், ஒரு நிலத்து ஓரொழுக்கம் நிகழுமென நிரல்நிறுத்துக் கூறிய ஒழுக்கம் அந்நிலத்துக்கே உரித்தாய் ஒழுகாது, தம்முள் மயங்கி வருதலும் நீக்கப்படுவதில்லை. அங்ஙனம் ஒருநிலத்து இரண்டு ஒழுக்கம் தம்முள் மயங்குதலன்றி, இரண்டு நிலம் ஓரோர் ஒழுக்கத்தின்கண் மயங்குதல் இல்லை என்று நிலனும் ஒழுக்கமும் இயைபுபடுத்திச் செய்யும் புலனெறி வழக்கினை நன்கு உணர்ந்த அறிவினையுடையோர் கூறுவர்” என்பது பொருள்.

ஒரு நிலத்தின்கண் இரண்டு உரிப்பொருள் மயங்கி வரும் என்பதூஉம், நிலன் இரண்டு மயங்காதெனவே காலம் இரண்டும் தம்முள் மயங்கும் என்பதூஉம் கூறினா ராயிற்று. உரிப்பொருள் மயக்குறுதல் என்றது திணை மயக்குறுதலும் என்றார், ஓர் உரிப்பொருளோடு ஓர் உரிப்பொருள் மயங்குதலும், ஓர் உரிப்பொருள் நிற்றற்கு உரிய இடத்து ஓர் உரிப்பொருள் வந்து மயங்குதலும்,

பாலை

211

இவ்வாறே காலம் மயங்குதலும், கருப்பொருள் மயங்கு தலும் பெறும் என்பதற்குக் கூறினார். திணை என்றது முதல், கரு, உரி என்னும் மூன்றினையும் கொண்டே நிற்றலின், அங்ஙனம் கூறினார். இவ்வாறு கூறியவர் நச்சினார்க்கினியர். இளம்பூரணர், திணை என்பதற்குத் திணைக்குரிய முதற்பொருள் எனக்கூறி, அம்முதற் பொருளுள் நிலம் மயங்காதெனவே, காலம் மயங்கும் என்றார்.

இப்பாலைத்திணையில் திணைமயங்குதலைக் காணலாம்.

அன்னாய் வாழிவேண் டன்னைஎன் தோழி
பசந்தனள் பெரிதெனச் சிவந்த கண்ணை
கொன்னே கடவுதி யாயின் என்னதூஉம்
அறிய ஆகுமோ மற்றே

முறியிணர்க் கோங்கம் பயந்த மாறே.

(௩௬௬)

'அன்னையே, வாழி வேண்டுகின்றேன். அன்னையே, என் தோழி இப்போது பெரிதாகப் பசப்புற்றாள் என்று அச்சமுண்டாகச் செலுத்துவாயாயின், சிறிதும் அதனை யாம் அறிய முடியுமோ? முடியாது. முன் தளிர்பொருந் திய பூங்கொத்தினையுடைய கோங்கினாலாய தன்மை இது வாகும்' என்பது பொருள்.

இது தலைவியை நோக்கி இவ்வேறுபாடு எதனால் ஆயிற்று என்று வினவிய செவிலிக்குத் தோழி அறத் தொடு நின்றது அறத்தொடு நின்றது — களவொழுக்கம் வெளிப்படக் கூறியது.

இது தலைவன் முன்னாள் தந்த கோங்கம்பூவால் விளைந்ததெனப் பூத்தரு புணர்ச்சி கூறியவாறாயிற்று. பாலை யில் குறிஞ்சி மயங்கிற்று. எனவே இது பாலையிற் குறிஞ்சி.

இப்பாட்டில் கோங்கு கூறினமையாற் பாலையாயிற்று. பயந்த மாறே என்றதனால் புணர்ச்சி பெறப்படும். பசந்த னள் என்றதனால் பிறவு பெறப்படும். ஆதலின், நச்சினார்க்



கினியர் உரிப்பொருளோடு உரிப்பொருள் மயங்கிற்று

என்றார். இது கருப்பொருளாற் பாலை என்றார் நூற்றின் பழைய உரையாசிரியர்.

ஐங்குறு

பொரியரைக் கோங்கின் பொன்மருள் பசுவீ
விரியிணர் வேங்கையொடு வேறுபட

மிலைச்சி

விரவுமலர் அணிந்த வேனிற் கான்யாற்றுத்
தேரொடு குறுக வந்தோன்
பேரொடு புணர்ந்தன் றன்னைஇவள் உயிரே.

(௩௬௭)

பொருள்: அன்னையே, பொரிந்த அரையையுடைய கோங்கமரத்தினது பொன்போலும் பசிய பூவை விரிந்த கொத்தையுடைய வேங்கைப்பூவோடு வேறுபடச் சூடிப் பரந்த மலர் அணிந்த வேனிற்கண் கான்யாற்றிடத்தில் யாம் அழுந்தழித் தேரொடு குறுகவந்தவன்பால் கலந்தது இவளுயிர்.

நொதுமலர் வரைவின்கண் தோழி செவிலிக்கு அறத்தொடு நின்றது இது.

'கான்யாற்றுத் தேரொடு குறுக வந்தோன்' என்றது கான்யாற்றில் யாங்கள் அழுந்தழிக் குறுகவந்தோன் என்றவாறு. எனவே, புனல்தரு புணர்ச்சி கூறியவாறு. 'பேரொடு புணர்ந்தன்று இவளுயிர்' என்றது அன்று தொட்டு இவளுயிர் இன்னான் தந்த உயிரென அவன் பேரோடு பட்டது என்றவாறும்.

இது 'முல்லையும் குறிஞ்சியும் முறைமையில் திரிந்து நல்லியல் பிழந்து நடுங்குதுய ருறுத்துப் பாலை யென்பதோர் படிவம் கொள்ளும்' என்பதற்கியையக் குறிஞ்சிக் கருப் பொருளாகிய வேங்கையும் முல்லைக் கருப்பொருளாகிய கானயாறும் பாலையின் முதற்பொருளாகிய வேனிலும் கருப்பொருளாகிய கோங்கும் கூறியிருத்தல் காண்க. எனவே, இது காலத்தாற் பாலை. வேங்கைபூக் கூறியதனால் இவளைக் கூடியுள்ளன் என்றும், கோங்கம்பூக் கூறியதனால் பிரிந்திருக்கின்றான் என்றும் கூறியவாறு.

## 213

பாலை

வளமலர் ததைந்த வண்டுபடு நறும்பொழில்
முளைநிரை முறுவல் ஒருத்தியொடு நெருநல்
குறிநீ செய்தனை என்ப அலரே
குரவ நீள்சினை உறையும்
பருவ மாக்குயில் கௌவையிற் பெரிதே. (௩௬௯)

பொருள்: செழித்த மலர் நெருங்கிய வண்டுகள் ஒலிக்கின்ற பொழிலின்கண் முளைபோலும் நிரையாய பற்களையுடைய ஒருத்தியொடு நேற்றுத் தங்கி விளையாடினை என்று கூறுவர். அக்கூற்றாகிய அலர் குரவினது நீண்ட சினைக்கண் தங்கும் வேனிற்பருவத்துக்குரிய குயிலினது ஒலியினும் பெரிது.

பரத்தையொருத்தியுடன் பொழிலகத்துத் தங்கிவந்த தலைவன், தலைவி வினவியவழி, 'யாரையும் அறியேன்' என்றானாக அவள் கூறியது.

'குறிநீ செய்தனை' என்பது

முதலியவற்றால் ஊடல்

பெறப்படும். இதனுள் குரவமரமும்

பாலையாயிற்று.

குயிலும் கூறலின்

இது பாலைக்கண் மருதம் மயங்கிற்று.

வண்சினைக் கோங்கின் தண்கமழ் படலை
இருஞ்சிறை வண்டின் பெருங்கிளை

மொய்ப்ப

நீநயந் துறையப் பட்டோள்
யாவ ளோவெம் மறையா தீமே.

(கஎ0)

பொருள்: வளப்பமான கிளைகளையுடைய கோங்கம் பூவாலான குளிர்ந்த மணமுள்ள மாலையைக் கரிய சிறகையுடைய வண்டுக்கூட்டம் மொய்க்க அணிந்த நீ விரும்பித் தங்கியவள் யாவளோ? மறையாதே சொல்.

பரத்தையொருத்திக்குப் பூவணிந்தான் என்று கேட்ட தலைவி, 'அஃது இல்லை' என்று அவனுக்குக் கூறியது.
தலைவன்
மறுத்த



யாவள் என்பதனால் ஊடல் பெறப்படும். இது பாலைக்குரிய கருப்பொருளாகிய கோங்கு கூறினமையாற் பாலையாயிற்று. இதுவும் பாலைக்கண் மருதம் மயங்கிற்று.

அம்ம வாழி தோழி சிறியிலைக்
குறுஞ்சினை வேம்பின் நறும்பழம் உணீஇய
வாவல் உகக்கும் மாலையும்
இன்றுகொல் காதலவர் சென்ற நாட்டே.

(௩௩௧)

பொருள்: தோழி, நமது காதலர் சென்ற நாட்டின் கண் சிறிய இலைகளைக் கொண்ட சிறிய கிளைகளையுடைய வேப்பமரத்தின் நறிய பழத்தை உண்ணுதற்கு வௌவால் உயரப் பறக்கின்ற மாலைக்காலமும் இன்றுகொல்?

தலைவன் குறித்த பருவவரவின்கண் மாலைப்பொழுது கண்டு ஆற்றாளாகிய தலைவி தோழிக்குச் சொல்லியது.

இதில் பாலைக்கண் மாலை வந்தது. இது காலத்தானும் உரிப் பொருளானும் பாலையாயிற்று. வேம்பு பழுக்குங் காலம் முதுவேனில் மாலை என்றதனால், அதன்கண் மாலை வந்தது பெறப்படும்.

## பாலைத்திணையில் இயற்கை

ஒரு நூலில் கவிஞன் இயற்கையைப் பயன்படுத்தும் முறையை (Treatment of Nature) ஆங்கில இலக்கியத்தில் ஆராய்ந்து பார்ப்பதொன்று. இயற்கையழகில் ஈடுபட்டு அதனை வருணிப்பது ஒருமுறை; இயற்கையை உவமையாகப் பயன்படுத்துவது மற்றொரு முறை; இயற்கையைப் பிற்புலமாக (Back - ground)க் கொள்வது இன்னொரு முறை. இங்ஙனம் கவிஞர்கள் இயற்கையைத் தங்கள் பாடல்களில் பலவாறு பயன்படுத்துவதுண்டு.

ஓதலாந்தையார் இயற்கையை உவமைக்கும் பிற்புலத்திற்கும் பயன்படுத்தியுள்ள முறையைப் பாலைத்திணையிற் கண்டு இன்புறலாம்.

பனிமலர் நெடுங்கண் என்னும் தொடரில், இயற்கையைக் கண்ணுக்கு உவமையாக்கியதைக் காண்க. ஓர் இயற்கையை மற்றோர் இயற்கைக்கு உவமையாகவும் கூறியுள்ளார். தரையில் விழுந்துகிடந்த முள்ளிணர் இலவம் பூக்களுக்கு, வானத்தில் உண்டாகும் இடியில் தோன்றும் பொறிகள் நிலத்தில் வீழ்ந்துகிடந்ததைக் கூறியது இதற்கு எடுத்துக்காட்டாகக் கூறலாம்.

இயற்கையைக் கவிஞர் பிற்புலமாக வருணித்து ஒன்றின் தன்மையைப் பெருக்குவதையும் இப்பாலைத் திணையிற் காண்கிறோம். அருஞ்சுரத்தின் கடுமையைக் கூற,

"அவிர்தொடி கொட்பக் கழுதுபுக அயரக்
கருங்கண் காக்கையொடு கழுகுவிசும்
பகவச்
சிறுகண் யானை ஆள்வீழ்த்துத் திரிதரு
நீளிடை அருஞ்சுரம் என்ப"

(நகச)

என்னும் அடிகள் இதற்கு எடுத்துக்காட்டாகக் கூறலாம். இங்ஙனம் பல இடங்களில் இயற்கையைக் கவிஞர் பயன் படுத்தியிருப்பதைப் படித்து இன்புறுக.

குறுந்தொகைபோன்று ஐங்குறுநூறு சிறந்து விளங்கவில்லையெனினும், சொற்சுவையிலும் பொருட்சுவையிலும் குன்றாது இலங்குகிறது. செய்யுட்கள் இனிய ஓசைநயம் வாய்ந்து சிறந்துள்ளன; படிக்குந்தொறும் படிக்குந்தொறும் இன்பமளிப்பன. பாலைத்திணையில் பழந்தமிழ் நாட்டு மக்களின் வாழ்க்கைப்பண்புகளையும், இயல்புகளையும், இயற்கைக் காட்சிகளையும் பார்க்கலாம். எளிய சொற்களால் அமைந்து இனிய நயத்தை அளிக்கவல்ல இந்த ஐங்குறுநூற்றைப் பலரும் படித்து இன்புறுவார்களாக.

## பாலை

புதுக்கலத் தன்ன கனிய ஆலம்
போகில்தனைத் தடுக்கும் வேனில் அருஞ்சுரம்
தண்ணிய இனிய ஆக
எம்மொடும் சென்மோ விடலை நீயே. (௩
0௩)

சூழ்கம் வம்மோ தோழி பாழ்பட்டுப்
பைதற வெந்த பாலை வெங்காட்டு

அருஞ்சுரம் இறந்தோர் தேஎத்துச்
சென்ற நெஞ்சம் நீடிய பொருளே.
(௩ கள)
நுண்மழை தளித்தென நறுமலர் தாஅய்த்

தண்ணிய ஆயினும், வெய்ய மன்ற;
மடவால் இன்றுணை ஒழியக்

கடமுதிர் சோலைய காடிறந் தேற்கே.
(௫௨அ)

அம்ம வாழி தோழி நம்வயின்
மெய்யுற விரும்பிய கைகவர் முயக்கினும்
இனிய மன்ற தாமே,
பனியிருங் குன்றம் சென்றோர்க்குப் பொருளே.

(௫௫எ)

அவரோ வாரார்; தான்வந் தன்றே;
திணிநிலைக் கோங்கம் பயந்த
அணிமிகு கொழுமுகை உடையும் பொழுதே. (௫௬௫)

# முல்லை

[வித்துவான், வீ. குமாரசாமி ஐயர் அவர்கள்]

உயர்மதில் கூடலம்பதியில் சங்கச் சான்றோர்களால் ஆராயப்பெற்ற ஒண்தீந்தமிழ்ப்பனுவல்கள் பத்துப்பாட்டு - எட்டுத்தொகை - பதினெண் கீழ்க்கணக்கு என்பனவாம். அவற்றுள் — நற்றிணை, குறுந்தொகை, ஐங்குறுநூறு, பதிற்றுப்பத்து, பரிபாடல், கலித்தொகை, அகநானூறு, புறநானூறு என்னும் எட்டுத்தொகை நூல்களுள் ஒன்றாக வைத்து எண்ணப்படும் சிறப்பினையுடையது, இன்பப் பொருளினை நுவலும் ஐங்குறுநூறு என்னும் செந்தமிழ்ச் செந்நூல். இந்நூல் அன்பினைந்திணை யொழுக்கங்களைச் செவ்விதின் இலக்கியச் சுவைபட விளக்குவது. பண்டைய தமிழ்நாட்டின் பழக்க வழக்கங்களையும் ஒழுகலாற்றினையும் நன்கு தெரிவிப்பதாம்.

இந்நூலைப் பாரதம் பாடிய பெருந்தேவனார் கடவுள் வாழ்த்துடன், மருதம் - நெய்தல் - குறிஞ்சி - பாலை - முல்லை ஆகிய திணைகளை ஓரம்போகியார் முதலிய ஐந்து புலவர்கள் பாடியுள்ளனர். ஒவ்வொரு திணையும் பத்துப் பத்தாக வுள்ள உட்பிரிவுடன் நூறு நூறு செய்யுள்களைக் கொண்டது. மூன்றடிச் சிற்றெல்லையாகவும் ஆறடிப் பேரெல்லையாகவுமுள்ள அகவற்பாக்களால் இயற்றப்பெற்றது. இம் முறையான் இதனைத் தொகுப்பித்த சேரமன்னர் யானைக்கட் சேய் மாந்தரஞ் சேரலிரும் பொறையும், தொகுத்த புலத்துறை முற்றிய கூடலூர் கிழாரும் இங்ஙனம் ஒரு நூல் அமைக்க வேண்டுமென்ற குறிக்கோளுடன் செய்தமைத்தனர் என்பது புலனும். ஒரு கூற்றினைப் பத்துப் பாடல்களால் தெரிவிக்கும் முறை திருக்குறள், பதிற்றுப்பத்து முதலிய நூல்களிற் காணப்படுதல்போல இந்நூலுள்ளும் காணப்

படுதலால், பண்டைநாளில் நூல் இயற்றும் முறைகளுள் இஃதொன்றாக அமைந்திருந்தது போலும்.

ஆசிரியர் தொல்காப்பியனார் "மாயோன் மேய காடுறை யுலகமும்" என்ற நூற்பாவினுள், "முல்லை குறிஞ்சி மருதம் நெய்தலெனச், சொல்லிய முறையாற் சொல்லவும் படுமே" என நிலங்களை முல்லை முதலாக முறைப்படுத்திக் கூறியிருக்க, இவ்வைங்குறு நூற்றினைத் தொகுத்த புலவர் பெருமான் முல்லைத்திணையை இந் நூலின் இறுதிக்கண் வைத்துள்ளார். ஐந்துநிலங்களும் தத்தமில் உயர்வுடையன என அறிவித்தற்கே பண்டைய ஆசிரியர்கள் நிலங்களை ஒருமுறைப்படாது பிறழவைத் துரைத்தனர் என்பதற்கு இஃதொரு சான்றாம்.

முல்லைத்திணையைப் பாடிய ஆசிரியர் பேயனார் என்னும் புலவராவர். சேரநாட்டுக் கல்வெட்டுக்களில் பேயன் என்னும் பெயர் பெரும்பான்மையாகக் காணப்படுவதாலும், இந்நூலைத் தொகுப்பித்த மன்னரும் தொகுத்த புலவரும் சேரநாட்டினராயிருப்பது கொண்டும், இந்நூலின் முதற்பகுதியாகிய மருதம் சேரமன்னற்கே யுரியதாயிருத்தலாலும் இறுதியில் நிற்கும் இம் முல்லையைப் பாடிய இவ்வாசிரியர் சேரநாட்டினராக இருக்கலாமென்று திருவாளர் வித்துவான் ஔவை. சு. துரைசாமிப்பிள்ளையவர்கள் கூறுவர். இவர் முல்லைத் திணையை அழகுறப் பாடியமைத்துள்ளார். இவர் பாடிய பாட்டுக்கள் இந்நூலிலுள்ள நூறு அகவற்பாக்களும், குறுந்தொகையிலுள்ள நான்கு பாட்டுக்களுமாகும். இனிய செஞ்சொற்களால் ஓசை நயத்துடன் பாக்கள் இயற்றுதல், முல்லை நிலத்தில் காணப்படும் கருப்பொருள்களின் இயற்கை நுட்பங்களை யுணர்ந்து கூறுதல், தலைவன் தலைவியர் மாட்டுப் பிரிவிலும் இருத்தலிலும் காணப்படும் காதற்சிறப்பினை யெடுத்துரைத்தல், சொல்லுவனவற்றைப் படம்பிடித்தாற்போல் கற்போர் மனத்திரையில் பதியச்செய்தல், சுருங்கச் சொல்லல் ஆகிய இத்தகு கவித்திறன்கள் மிளிர்தலை இவருடைய பாட்டுக்களால் நன்கு உணரலாம்.



இவர் இத் திணையைப்பற்றிப் பாடிய அகவற்பாக்கள் நூறு. அவற்றுள் மூன்றடி கொண்ட பாக்கள் 12; நான்கடி கொண்ட பாக்கள் 43; ஐந்தடி கொண்ட பாக்கள் 44; ஆறடி கொண்ட பா 1.

ஈண்டு அதிகரித்த பொருள் முல்லைத்திணையாதலின், அந்நிலத்தைப்பற்றி முதற்கண் அறிவாம்.

## முல்லை நிலம்

இது தமிழ் இலக்கண நூலார் நுண்ணுணர்வால் வகுத்தமைத்த ஐந்நிலப்பகுப்புள் ஒன்று. கொன்றை - குருந்து-காயா-முல்லை முதலிய நிலத்திணைப் பொருள்கள் செழித்துப் பசுமை நிறத்ததாய்க் காட்சியளிக்கும் காடும் அதனைச் சார்ந்த நிலப்பகுதியுமாம்.

## பொழுது

இந்நிலத்திற்குக் கார்கால முதும் மாலைப்பொழுதும் உரியன என்பர். "காரும் மாலையும் முல்லை" என்றார் தொல்காப்பியர். கார்காலம், ஆவணியும் புரட்டாசியு மாகிய மாதங்கள் ஒன்று சேர்ந்த பருவம். மாலை, நாளின் ஒருபகுதியாகவுள்ள அந்திப்பொழுது. இவ்விருகாலங் களும் இந்நிலத்திற்கு எவ்வாற்றான் உரியன என்பதை நாம் உணர்ந்துகோடல் முதன்மையாகும். அதனை உண ருங்கால் நம் முன்னோர் எத்துணை ஆய்வுத்திறன் உடைய ரென்பது நன்கு விளங்கும். இதனைத் தொல்காப்பியப் பெருநூலிற்கு உரைவகுத்த நச்சினார்க்கினியர் தெளிவு படுத்தியுள்ளார். அவரது செவ்விய உரை மூலமாக யாமுணர்தலே நன்றாம். "வினைவயிற் பிரிந்து மீள்வோன், விரைபரித் தேரூர்ந்து பாசறையினின்று மாலைக்காலத்து ஊர்வயின் வரூஉங் காலம் ஆவணியும் புரட்டாதியும் ஆத லின், அவை வெப்பமுந் தட்பமும் மிகாது இடைநிகர்த்த வாகி ஏவல் செய்துவரும் இளையோருக்கு நீரும் நிழலும் பயத்தலானும் ஆர்பதம் மிக்கு நீரும் நிழலும் பெறுதலிற்

களிசிறந்து மாவும் புள்ளுந் துணையோடின்புற்று விளையாடுவன கண்டு தலைவற்குந் தலைவிக்குங் காமக் குறிப்பு மிகுதலானுமென்பது. புல்லை மேய்ந்து கொல்லேற்றோடே புனிற்றுக்கன்றை நினைந்து மன்றிற் புகுதரவுந் தீங்குழலிசைப்பவும் பந்தர் முல்லை வந்து மணங்களுற்றவும் வருகின்ற தலைவற்கும் இருந்த தலைவிக்கும் காமக்குறிப்புச் சிறத்தலின் மாலைப்பொழுதும் உரித்தாயிற்று" என்பர்.

## கருப்பொருள்

இந்நிலத்திற்குரிய கருப்பொருளாவன :—தெய்வம் : திருமால்; உணவு: வரகும் சாமையும்; வாழும் விலங்கு : முயலும் சிறுமானும்; மரம் : கொன்றை குருந்து முதலியன; புள் : கானங்கோழியும் மயிலும் சிவலும் ; பறை : ஏறுகோட்பறையும் முரசும்; தொழில் : வரகு களை கட்டலும் அவறறை அறுத்தலும், கடாவிடுதலும், ஆநிரை மேய்த்தலும் ஏறுகோடலும்; பண் : முல்லை ; தலைவன் : குறும்பொறை நாடன்; தலைமகள் பெயர்: கிழத்தி, மனைவி; பூ : முல்லையுந் தோன்றியும்; நீர் : கான்யாறு; ஊர் : பாடியும் சேரியும்; மக்கள் - இடையர் இடைச்சியர், ஆயர் ஆய்ச்சியர்.

## உரிப்பொருள்

ஒழுக்கத்தினையே திணையென்றும் உரிப்பொருள் என்றும் சொல்வர். ஊழ்வயத்தான் தலைமக்கள் ஒருவரை யொருவர் கண்டு காதலித்துப் புணர்ந்து வாழ்வுழி வினை வயின் தலைவன் பிரிய நேருங்கால், ஒருவரை யொருவர் உன்னி ஆற்றியிருத்தலும் அதன் நிமித்தங்களுமே முல்லைக் குரிய வொழுக்கமாகும்.

இனி, நூலின் ஒரு பகுதியாகவுள்ள முல்லையை நோக்குவோம்.

## பத்துப்பத்து

புலவர் பேயனார் இம்முல்லைத் திணையைச் செவிலி கூற்றுப்பத்து, கிழவன் பருவம் பாராட்டுப்பத்து, விரவுப்



பத்து, புறவணிப்பத்து, பாசறைப்பத்து, பருவங்கண்டு கிழத்தி யுரைத்த பத்து, தோழி வற்புறுத்த பத்து, பாணன் பத்து, தேர் வியங்கொண்ட பத்து, வரவுச் சிறப் புரைத்த பத்து என முறைப்படுத்தியுள்ளார்.

### (1) செவிலி கூற்றுப்பத்து

தலைவி அன்பிற் கெழுமிய தலைவனை மணந்து கற்பொழுக்கத்தில் ஒழுகுகின்றாள். இல்லறத்தின் அருங்கலனென ஆன்றோர் புகலும் புதல்வனையும் பெற்றுத் தலைவனுடன் இனிது வாழ்கின்றாள். தலைவனும் தலைவியைப் பிரியாது அன்புடன் உறைகின்றான். அவள் வாழும் மனை பல்வளமும் நிறைந்து பொலிவுடன் விளங்குகின்றது. இத்தகு தலைவியின் கடிமனைவாழ்க்கையைக் கண்ட செவிலித்தாய், அவளது மனைமாட்சியைக் கண்டு மகிழ்வுற்றாள். அதனை நற்றாய்க்கு எடுத்துரைக்கின்றாள். இதனை அறிவிக்கும் பகுதியே செவிலி கூற்றுப் பத்தாம்.

ஆசிரியர் தொல்காப்பியனார் களவியலில் "களவலராயினும்" (தொல். களவியல் உச சூ-ம்.) என்னும் நூற்பாவில், செவிலி கூற்றாக வரும் கிளவி பதின்மூன்றெனவிதந்துரைத்து, கற்பியலில்,

"கழிவினும் வரவினும் நிகழ்வினும் வழிகொள
நல்லவை யுரைத்தலும் அல்லவை கடிதலும்
செவிலிக் குரிய வாகு மென்ப"

என்னும் நூற்பாவில் செவிலி கூற்றினை எடுத்துரைத்துப் பின்னரும் செவிலி கூற்றுகச் சான்றோர் இலக்கியங்களில் வருவனவற்றையும் கொள்ளவைத்தார். இதனை நச்சினார்க்கினியர், "ஆகும்" என்றதனான் செவிலி நற்றாய்க்கு உவந்துரைப்பனவுங் "கொள்க" என்றுரைத்து ஐங்குறுநூற்றில் இம்முல்லைத் திணையில் "மறியிடைப் படுத்த" (ச0க) "வாணுத லரிவை" (ச0ச) என்ற இரு செய்யுள்களையும் உதாரணமாகக் காட்டியுள்ளார். இப்பத்தில் முதல் ஒன்பது செய்யுள்கள் "நற்றாய்க்கு உவந்த உள்ளத்தளாய் உரைப்பன"வும் பத்தாவது செய்யுள் "கன்

னுள்ளே உவந்து சொல்லியதாக''வும் இருத்தலின், செவிலி கூற்றாக இலக்கியங் கண்டு இலக்கணம் அமைத்துக் கோடற்குரிய சிறப்பினையுடையது இப்பத்தாம்.

இதன்கண்,

" தாய் புதல்வனை மார்பின்கண் தழுவிக்கொண்டாள்; அதனால் தலைவன் ஆகத்தைத் தழுவாமல் தலைவியின் புறத்தை முயங்கினன்; அங்ஙனம் புறத்தே முயங்கினனாயினும், தலைவியினிடத்து விருப்ப முடையவனாகவே யுள்ளான். அந்நிலையைப் பார்க்குங்கால், பாணர் நரம்பினைத் தடவ, நரம்பு இன்னோசையை யுண்டாக்கியது போல இனிதாயிற்று; பண்பும் உடைத்து;'' (ச0உ)

" ஒளி பொருந்திய நெற்றியினையுடைய தலைவி மகனுக்கு முலைப்பாலை யுண்பித்தலால், தலைவன், அவளது மெல்லிய புறக்கழுத்தை அணைந்தான்;'' (சOச)

" மகரந்தப் பொடியினை அருந்திய வண்டுகள் ஊதுகின்ற மலர்கள் நிறைந்துள்ள முல்லை நிலத்தைச் சார்ந்த நாட்டினையுடைய தலைவன், காதலையுடைய மகன் விளையாட

அதனைக் கண்டும் காதலியைத் தழுவிக்கொண்டும் இனிதாக (இல்லத்து) இருந்தான்." (௪0௫) ("தாதார் பிரசமூதும் போதார் புறவினாடு கிழவோன்" என்றதால், தலைவன் பரத்தையிற் பிரிவொழிந்து மனைக்கண் இருந்தானென்பது குறிப்பிற் பெறப்பட்டது.)

"தந்தை புதல்வனைத் தழுவினான்; மென்மையான மொழியினையுடைய புதல்வன் தாயோ (பரத்தையிற் பிரிந்ததால் உண்டான ஊடல் நீங்கி) இருவரையும் தழுவிக் கொண்டாள். அவர்கள் அங்ஙனம் துயிலுதல் இனிமையுடையது; அதற்கு மிகப் பெரிய பரப்பினையுடைய இவ்வுலக முழுவதும் ஒப்பாகாது." (௪0௯)

இன்னோரன்ன சிறந்த பொருள்கள் நிறைந்த பாட்டுக்கள் செவிலி கூற்றுக்களுள்ளன.



### (2) கிழவன் பருவம் பாராட்டுப் பத்து

பால்வழியான் ஒருவரை யொருவர் எதிர்ப்பட்ட காலந்தொடங்கி எழுபிறப்புந் தொடரும் அன்பால் உரிமை செய்து ஒழுகுதலான் கிழவன், கிழத்தி என்று தலைமக்கள் அழைக்கப் பெற்றனர். (கிழவன் - உரிமையுடையோன்; கிழத்தி - உரிமையுடையவள்.)

பொருள் தேடுங்காரணமாகவோ, வேந்தனுக்கு உதவி புரிதலை மேற்கொண்டோ, தலைவியை விட்டுப் பிரிய நேர்ந்தபொழுது தலைவன் கார்காலத்தில் வந்துவிடுவதாகக் கூறிச் சென்றான். சென்றவன் பருவம் வருவதற்கு முன்னரே வந்தான். தலைவியை நோக்கி,

"தாழ்ந்த கரிய கூந்தலையுடையோய், மிக்கு ஒலிக்கின்ற மேகம் மிகுந்த மழையைப் பெய்யக் கார்காலம் தொடங்கிற்று; அழகிய முல்லைநிலத்தின்கண் விழுகின்ற புதுப்புனலில் நீராடுவோம்; விரைந்து வருவாயாக." (சுகக)

"பெரிய அமர்த்த கண்ணையுடையோய், இப்புறவு காயா - கொன்றை - நெய்தல் - முல்லை - செம்முல்லை - பிடவம் முதலிய மலர்கள் மலர்ந்து அழகு பெற்று விளங்குகிறது; நாம் இப்பொழிலின்கண் விரைந்து விளையாடுவோம்." (சுகஉ)

"மிக்க நல்லிலக்கணம் பொருந்தியவளே! உனது நெற்றியின் மணம்போல முல்லை மணம் வீசுகின்ற குளிர்ச்சி பொருந்திய இம் முல்லை நிலத்தில் உன்னைப்போல மயில் மகிழ்ச்சியால் ஆரவாரித்து ஆட, நாம் விரும்பும் வண்ணம் கார்காலம் தொடங்கிற்று." (சுகா)

"மென்மைத் தன்மை பொருந்திய மடந்தை, பறவைகளும் விலங்குகளும் கூடி இனிமையுடன் குதித்து விளையாட, கிளையிலுள்ளனவும் கொடியிலுள்ளனவுமாகிய பூக்களோடு பல பழங்களும் பழுத்து வளம்பெற்ற மணம் வீசுகின்ற முல்லை நிலத்தை நாம் கண்டோம்" (சுகச) எனத் தலைவியை நோக்கிக் கூறும் கூற்றாகவும்,

"புறவே, நீ பொன்போல் மலர்ந்த கொன்றை, நீல மணிபோன்ற இனிமை பொருந்திய காயா, இதழ்விரிந்த செங்காந்தள் பூ ஆகிய இவற்றுடன் கூடிக் கண்ணுக்கினிய அழகினைப் பெற்றுள்ளாய். யாம் உன்னைக் காணவேண்டி ஒளிபொருந்திய நுதலினையுடைய தலைவியுடன் விரும்பும் அழகினைப் பெற்று வருவோம்," எனப் புறவை நோக்கிக் கூறுவதாகவும் வரும் பாட்டுக்கள் தலைவன் கூறும் கூற்றாக இப்பத்தின்கண் உள்ளன. தலைவன் பருவத்தைச் சிறப்பித்துக் கூறும் பொருள் பெற்றிருத்தலின் இஃது இப்பெயர்த்தாயிற்று.

### (3) விரவுப்பத்து

கண்டோர், தலைவன், தோழி முதலியவர் கூற்றுக்களையுடையது இப்பத்து. விரவுதல் - கலத்தல்.

"கடுமையாக விரைந்து செல்லுதலையுடைய நெடிய தேரினது உருளையை ஓட்டுதலில் வல்ல குதிரைகளை நீண்ட கொடிகளில் மலர்ந்துள்ள முல்லையும் செம்முல்லையும் அதிர்ச்சியால் உதிர, விரையும்படி செலுத்தி நாம் மனையகத்தை யடைவோமாயின் வரிசையாக இடப்பட்ட வளைகளையணிந்துள்ள முன்கையினையுடைய தலைவி வருந்தாள்" (அங்ஙனம் செல்லாவிடின் நிரைவளை கழல உடல் மெலிந்து வருந்துவாள்) என்று வினைமுடித்து மீள்கின்ற தலைமகன் தேர்ப்பாகன் கேட்பச் சொல்லியதாகவும், (௪௨௨)

"கரிய மேகம் இடித்து மழைநீர்த்துளியைச் சொரிந்தது. (கார்காலம் வந்தது) தலைவியின் ஒளிபொருந்திய நுதல் பசலைநிறமடைய நீ பிரிந்து செல்லுதலை விரும்பினாய். யாங்கள் நின்னைப் பிரிந்து வாழோம். பிரிவை யறிந்த தலைவியின் அழகிய நீல மலர்போன்ற கண்களும் நீரால் நிறையப் பெற்றன" என்று கார்காலத்தே பிரியக் கருதிய தலைமகனுக்குத் தோழி தலைமகளது ஆற்றுமை கூறிச் செலவினைத் தடுத்ததாகவும், (௪௨௩)

"பெரிய மலைமேலுள்ள சிறிய அடியினையுடைய கொன்றைமரம் பொன் தகட்டினையொத்த ஒளியினையுடைய

மலரைக் கொடுக்கும். (கார்காலம் வந்தது) அதனால் நின்னைப் பிரிந்து செல்லுதலைத் தவிர்ப்பேன். வருந்தற்க'' (ருஉ0) என்று பிரிவானோ என்று ஆற்றாளாகிய தலைமகளுக்குத் தலைமகன் பருவ வரவுகூறி 'இது காரணத்தாலும் பிரியேன்' எனச் சொல்லியது ஆகிய பொருள்களமையப் பெற்ற பாட்டுக்களையுடையது இப்பத்து.

## (4) புறவணிப்பத்து. புறவு - முல்லை நிலம்

தலைவன் பிரிந்து செல்லுதற்குத் தலைவி உடன்பட்டாள்; பிரிவுடம்பட்டும் பின்னர் ஆற்றாதவளானாள். அதனைக் கண்ட தோழி, "பிரிவுடம்பட்டும் ஆற்றாயாகின்றது யாது காரணம்?" என்று வினவினள். அதற்கு அவள் "தலைவர் போன சுரம் போகற்கரியது என்று ஆற்றேனாகின்றேன்'' என்றுரைக்க, "நீ கருதுவதுபோல் இல்லை. வேனிற் காலம் கழிந்தது; கார்ப்பருவம் தொடங்கிற்று. ஆதலின், அவர் சென்ற வழி நன்று'' என்று கூறி ஆற்றுவித்தாள்.

"காதலர் சென்றவழி நன்மையுடையதே; எவற்றா னெனில், அந்நெறி, அழகிய நிறத்தையுடைய பெரிய மலைமீது நீலமணிபோலும் நிறத்தனவாகிய மயில்களையு முடையது; (௪௩௧) பொன் ஆபரணங்களை யணிந்து கொண்டு கல்யாணத்திற்குச் செல்பவர்களைப்போல, சுடப் பட்ட பொன்னையொத்த கொன்றை மாலைகளை யணிந்து கொண்டு செல்லும் வீரர்களையுமுடையது; (௪௩௨) மேகம் நீர் பெருகும்படி பெய்யும், அங்ஙனம் மழை பொழிதலை யேற்றுக்கொண்ட கானகத்தையுமுடையது; (௪௩௩) குட்டிகளையுடைய பெண்மான்கள் குதித்து விளையாடும்படி குளிர்ந்த மழையைச் சொரிந்ததாலுண்டான இன்பத்தையு முடையது; (௪௩௪) நிலத்தை அழகுசெய்யும் நெய்தற் பூவும் பொன்போல் அழகிய கொன்றையும் பிடவமும் மலரப் பெற்றுள்ளது; (௪௩௫) மாற்றுயர்ந்த பொன்னை யொத்த ஒளியினையுடைய பூங்கொத்துக்களோடு கூடிய கொன்றை மரங்களையும் பூக்கள் மலர்ந்துள்ள குருந்த

மரங்களையுமுடையது; (சங்கூ) ஆலங்கட்டியோடு குளிர்ச்சி பொருந்திய மழை பெய்ததால் வெண்ணிறத்தனவாய் மலர்ந்த முல்லை மலர்களையுமுடையது; (சங்எ) பசிய புதரில் பல நிறத்த மலர்கள் பூத்திருத்தலால் கண்டு இன்புறத்தக்க அழகினையுமுடையது; (சங்அ) குருந்த மலர்களாலான மாலையைத் தலையிலணிந்துள்ள இடையர்கள் வாழ்கின்ற பெரிய, குளிர்ந்த இடங்களையுடைய பாக்க மாகிய ஊர்களையுமுடையது; (சங்கூ) குளிர்ந்த மேகம் அருள்செய்த (மழையைப்பெய்த) இக்கார்காலத்தில் விளக்கினது சுடர்போல் மலர்ந்த செங்காந்தட் பூவினையும் செம்முல்லையையுமுடையது; (சசo)" என்று கார்காலத்தில் காட்சியளிக்கும் முல்லைநிலத்தின் அழகினைத் தோழி கூறித் தலைவியின் பிரிவாற்றாமையை ஆற்றுவித்தலைத் தெரிவிப்பதாம் இப்பத்து.

நச்சினார்க்கினியர்

"நடுவு நிலைத்திணையே"

இப்பத்திலுள்ள முதற்பாட்டினை

(தொல் - அகத்திணை - கூ) என்ற

நூற்பா உரையில் காட்டி "இப்பாட்டு முதலியன பத்தும் முல்லையுட் பாலை" என்பர். மனைவி பிரிந்திருந்து வருந்துதலின் அங்ஙனம் உரைத்தார்.

முல்லை நிலமும் குறிஞ்சி

திரிந்து முறையே மென்பாலை

நிலமும் வேனிற்காலத்தில்

- வன்பாலை என்ற பெயரி

னைப் பெறும். அதுவே சுரம் என்றும்

வழங்கப்பெறும்.

ஆதலின், தலைவி தலைவன் சென்ற நெறியினைச் சுரம் என்று கருதி ஆற்றாதவளானாள். அந்நிலமே மழை பெய்தவுடன் தன் இயல்பான நிலையினை யடைந்ததால் தோழி அதனைப் புறவாக அணிந்துரைக்கின்றாள்.

## (5) பாசறைப்பத்து

பாசறை - பகைமேற்சென்ற அரசன் படை தங்கும் இடம். பண்டைநாளில் பாசறை அமைத்த முறையினை முல்லைப்பாட்டு விளக்கிக் கூறுகின்றது. பாசறையை இவ்வாசிரியர் கட்டூர் (சசு) என்றும் கூறுவர்; போர் சூழ்த்துச்சென்ற அரசனும் படைகளும் தங்கியிருந்தற்குப்

பல நிறத்தாலான திரைகளை மதில்போல் அமைத்தும் கூடாரங்கள் அமைத்தும் ஊர்போல் ஆக்கிக்கொண்டிருத்தலின். இது கூதிர்ப்பாசறை, வேனிற்பாசறை என்று இருவகைப்படும். அவை கூதிர்க்காலத்தில் சென்றிருக்கும் பாசறை, வேனிற்காலத்தில் சென்றிருக்கும் பாசறை என்று பொருள்படும். இப்பத்தில் "கார்நாளுருமொடு கையறப் பிரிந்தென, நோய் நன்கு செய்தன" (சசக) "மெல்லவன் மருங்கில் முல்லை பூப்ப, பொங்குபெயற் கனை துளி கார்எதிர்ந் தன்றே" (சசஅ) என்று கார்காலத்தைக் கூறலின் அதற்கு முன்னதாகிய வேனிற்காலத்திலே பாசறைக்கண் தங்கியிருந்தான் என்பது பெறப்படும். ஆதலின், இது வேனிற் பாசறையாயிற்று; ஆசிரியர் தொல்காப்பியர் பாசறைப் புலம்பல் "கிழவி நிலையே வினையிடத் துரையார், வென்றிக் காலத்து விளங்கித் தோன்றும்" (தொல் - பொருள் : கஅசு) என்றார். ஆதலின் இக்கூற்று

வெற்றி நிகழுமிடத்தும் தான் குறித்த பருவம் தூது கண்டுழியும் வருத்தம் விளங்கிக் கூற்றுத்

வந்துழியுந் றாகச் செய்யுள்
தோன்றிற் கினியர் உரை

செய்ப என்று அந்நூற்பாவிற்கு நச்சினார்க்
வகுத்தார். இப்பாசறைப் பத்து, சென்ற

வினை முடியாமையிற் கார்காலம் வந்த இடத்து
பெறாத தலைமகன் தலைமகளிடத்தினின்றும் வந்த

மீளப்

தூதர்
வார்த்தை கேட்டு இரங்கியதாகவும், வேந்தற்குற்றுழிப் பிரிந்தோன் வினை முடியாமையின் (மேற்கொண்ட காரியம் நிறைவேறாமையின்) பாசறைக்கணிருந்து பருவ வரவின் கண் சொல்லியது முதலாகிய பல்வகைப்பட்ட கூற்றுக்களை யுடையது. இதன்கண் உள்ள "புகழ்சால் சிறப்பின்" (சசஙு) "முல்லை நாறுங் கூந்தல்" (சசசு) "நனி சேய்த் தென்னது" (சசரு) 'முழங்கு குரன் முரசம்" (சசஅ) "ஐய வாயின" (சசக) "முரம்புகண் ணுடைய' (சசகூ) ஆகிய ஆறு பாட்டுக்களை "ஒன்றாத் தமரினும்" (தொல் - அகத்திணை: சக) என்ற நூற்பாவுரையில் நச்சினார்க் கினியர் எடுத்தாள்வர். இதனால் இப்பத்தின்கண் அமைந் துள்ள பாட்டுக்கள் எத்துணைச் சிறப்புடையனவாய் ஆன் றோர்களால் ஆளப்பட்டுள்ளனவென்பது நன்கு புலப்படும்



"பெருஞ்சின வேந்தன் அருந்தொழில் (சசஉ) என்றும், "விண்ணுயர் அரண்பல தணியின்"
வெளவிய,

மண்ணுறு முரசின் வேந்து தொழில் விடின்" என்றும், "வென்வேல் வேந்தன் பகை தணிந்து,

(சசரு)
இன்னுந்

தன்னொட்டு முன்னுதல் பெறின்'' (சுசுசு) என்றும், "தழங்கு குரல் முரசங் காலை யியம்பக், கடுஞ்சின வேந்தன் தொழிலெதிர்ந் தனனே" (சுசுஅ) என்றும் வேந்தனைப் படர்க்கையாகக் கூறுதலானும், "பாசறை யருந்தொழில் உதவி" (சுசுகூ) என்பதனாலும் தலைவன், வேந்தற்கு உற்றுழிப் பிரிந்தவன் என்பது பெறப்படும்.

## வேந்தற்கு உற்றுழிப் பிரிந்த தலைமகன்

பாசறைக்

கண் தங்கியிருக்கின்றான்; கார்ப்பருவம் வந்துற்றது. அவ்வமயம் தலைவி தனித்திருத்தலை எண்ணுகின்றான். அங்ஙனம் எண்ணியவன், "இருண்டு தோன்றுகின்ற வானத்தின்கண் உயர்ந்த நிலையையுடைய தேவருலகத்துள்ள அருந்ததியை யொத்த கற்பினையுடைய குரும்பை போன்ற வடிவுள்ள மணிகளை யுடைய கிண்கிணியணிந்துள்ள புதல்வன்றாய், பகைவர்மீது மிக்க சினத்தையுடைய வேந்தன் மேற்கொண்டுள்ள அரிய போர்த்தொழில் முடிவுறின் விருந்தோம்பலாகிய மனையறத்தை மிகப் பெறுதற்குரியவளாவள்'' (சுசுஉ) என்று கூறுகின்றான். (தலைவர் மீண்டுவரின் தலைவியர் விருந்தயர்தல் மரபு).

தலைவி, தலைவனுடன் உள்ள காலத்தில் விருந்தோம்பலாகிய அறத்தை நன்கு புரிதல் கூடும். கோவலனைப் பிரிந்துறைந்த கண்ணகி "விருந்தெதிர் கோடலும் இழந்த வென்னை'' (சிலப்பதிகாரம்) என்று கூறுதல் ஈண்டறியத்

தக்கது. 'இருண்டு தோன்று விசும்பு' என்றதால் தலைவன் பாசறைக்கண் கார்காலத்தில் இருந்தான் என்பது பெறப்பட்டது. போர்த்தொழிலை, 'அருந்தொழில்' 'விழுத் தொழில்' என்ற தொடர்களால் சஉசு, சஉடு, சசடு, சசசு, சடு0, சசுசு என்ற செய்யுள்களில் குறிப்பிடுதல் ஈண் டறியத்தக்கது. இரவும் பகலும் போர்க்குரிய தொழில்கள்



நடைபெறுதலின் போர், அருந்தொழில், விழுத்தொழில் என்று சிறப்பித்துச் சொல்லத்தக்கதாயிற்று.

இதனை,

“ நள்ளென் யாமத்தும் பள்ளி கொள்ளான்
சிலரொடு திரிதரும் வேந்தன்
பலரொடு முரணிய பாசறைத் தொழிலே ”
(நெடுநல்வாடை

: கஅசு-அ)

(நள்ளென்னும் ஓசையையுடைய நடுயாமத்தும் பள்ளி கொள்ளானாய்ச் சில வீரரோடே புண்பட்டோரைப் பரிகரித்துத் திரிதலைச் செய்யும் அரசன் சேரன் செம்பியன் முதலிய எழுவரோடே மாறுபட்டுப் பொருகின்ற பாசறையிடத்துப் போர்த்தொழில்)

> "ஒருகை பள்ளி யொற்றி யொருகை
> முடியொடு கடகஞ் சேர்த்தி நெடிது நினைந்து"
>
> (முல்லைப்பாட்டு - எடு-சு)

(ஒரு கையைப் படுக்கையின்மேலே வைத்து ஒரு கையிற் கடகத்தை முடியோடே சேரவைத்து இப்படை நொந்த அளவுக்கு நாளை எவ்வாறு பொருமென்று நெடிதாக நினைந்து)

என்னும் செய்யுளடிகள் நன்கு தெரிவிப்பன.

"ஆகாயமளவும் உயர்ந்த பகைவரது பல அரண்களைக் கொண்ட கழுவி யலங்கரித்த முரசினையுடைய வேந்தன், மேற்கொண்ட போரினை விடுவானாயின், ஊர் மிகச் சேய்மையிலுள்ளது என்று கருதாமல் நல்ல தேரின்மீது இவர்ந்து சென்று, விளங்குகின்ற நிலவினையுடைய இளஞ் சந்திரனைக் காண்பதுபோல (மாலைப்பொழுதில்) தலைவியின் விளங்குகின்ற ஒளிபொருந்திய நுதலினைக் காண்பேன்" (சசங)

என்று வேந்தற்கு உற்றுழிப் பிரிந்தோன் குறித்த பருவத்து வினைமுடியாமையிற் புலம்பிக் கூறுகின்றான்.

"இளம்பிறைபோலக் காண்குவென்" மாலைக்காலமாயிற்று.

என்றதனால்

இவ்வாறு பிரிந்து சேட்புலத்திலுறையும்

தலைமகன்

தலைவிமாட்டுக் கொண்ட அன்பின்பெருக்கை பாட்டுக்களையுடையது இப்பத்து.

அறிவிக்கும்

## (6) பருவங்கண்டு கிழத்தியுரைத்த

பத்து

வேந்தற்கு உற்றுழிப் பிரிந்த தலைமகன் பாசறைக்கண் பகைமேல் முயல்கின்றானாகலின், கார்ப்பருவம் வந்தும் வந்திலன். அதனைக் கேட்ட தலைமகள் ஆற்றாளாய்க் கூறும் கூற்றுக்களையுடையது இப்பத்து.

"முழங்குகின்ற ஒலியினையுடைய மேகம், வேனிலால் வறண்ட உலகம் செழிக்குமாறு பெய்து, கார்காலத்தைச் செய்தது; ஆனால், விருப்பத்தக்க தலைவர் பகைவர் திறை தரச் செய்யும் முயற்சியோ எனது மெல்லிய தோளின் மிக்க அழகு மறையும்படி பொன்னிற்செய்தாலொத்த பீர்க்கம் பூவினது நிறத்தையுடைய பசலையைக் கொடுத்தது." (௪௫௨)

"தோழி! பள்ள நிலத்தில் தேரைகள் ஒலிக்க, மேட்டு நிலத்தில் விருப்பத்தக்க குரலினையுடைய பறவைக் கூட்டம் ஒலிக்கக் கார்காலம் வந்தது. அதனை நீ காண்க. அத்தகு கார்காலம் தோன்றியதால் எனது நீண்ட கண்களோ அவரது பிரிவால் நீரைச் சொரிந்தன. ஆனால், நம்பால் நம் தலைவர் தேர்வரத் தொடங்குதல் இல்லை." (௪௫௩)

"கொத்தான காய்களையுடைய கொன்றை மரத்தில் குழல்போன்ற பழங்கள் முதிர்ந்தன. (பருவ முதிர்ச்சியறிவித்தது) ஒலித்தலையுடைய மழைக்கு எதிர்ந்து (நீர்த்துளிகளைப் பெற்றுச்) சிந்துதலையுடைய குளிர்ச்சி பொருந்திய கொன்றைமலர் தலைவன் பிரிந்ததால் சிறந்த அழகினை இழந்த என் கண்கள் போன்றன." கொன்றைப்பூ, நீர் நிறைந்து பசலைபெற்றுள்ள தலைவியின் கண்களுக்கு உவமையாயிற்று. (௪௫௮)

"பகைவர் மீது மிக்க சினத்தையுடைய வேந்தனும் பாசறைக்கண் தங்கியிருத்தலை வெறுக்கமாட்டான். (போரினையே மேற்கொண்டிருப்பான்) போரின்கண் புரியும் வீரச் செயலால் மிகப் புகழ்ந்து பேசுதலாகிய ஆரவாரத்தை யுடைய தலைவன் வருதலையறிவிக்கும் தூதும் தோன்றா. நெருங்கிய இலைகளையுடைய வாழையின் பெரிய அடி அசையும்படி வீசும் இன்னாத வாடைக்காற்றும் துன்புறுத் தும். அளிக்கத்தக்க யான் என்னாவேன்!" (சகூ0)

வாடைக்காற்றுப் பிரிந்தார்க்கு இன்னாததாகத் தோற் றும். வாழைஇலை நெருங்கியிருத்தலால் வாடை அதனை நலிகின்றது; இலை நெருங்கியில்லாத வாழைக்கு வாடையால் நலிவில்லை; என்பதால் யான் தலைவனிடம் அன்பு மிகப் பெற்றுள்ளதால் இவ்வாடைக்காற்று என்னை நலி கின்றது என்ற குறிப்புப்பொருள் தோன்றுதல் காண்க.

மேற்காட்டியனபோன்ற பொருள் செறிந்த தலைவி யின் கூற்றாகவுள்ள பாட்டுக்கள் இப்பத்தில் உள்ளன.

## (7) தோழி வற்புறுத்த பத்து

வினைவயிற் பிரிந்த தலைமகன் குறித்த பருவத்தில் வாரானாயின் தலைவி பருவங்கண்டு ஆற்றாது வருந்துவள். அப்பொழுது தோழி, தலைவரது வருகையைத் தலைவிக்குப் பலவகையான் வற்புறுத்திக் கூறுவாள். இதனை அறி விப்பது இப்பத்து. வற்புறுத்துதல் - மீண்டும் மீண்டும் கூறி அறிவுறுத்தல்.

"தோழி! மேகம் சிதறின நீர்த்தொகுதியால் பிடா மலரின் மொட்டுக்கள் அழகுற்றுத் தோன்ற, காடு மழைத் துளியைப் பெற்றுத் தவலையாகத் தூவ, கார்காலம் வந்தது ஆதலின், வெற்றியையுடைய வேந்தனது பாசறைக்கண் உள்ள நம் தலைவர் உன்னைப்பிரிந்து தங்கியிரார்; சிறிதும் வருந்தற்க" (சுகூக) என்ற உரையால் தோழி, தலைவியை "பருவம் வந்ததால் தலைவர் வருவர்" எனத் தெளிவித்தாள்.



"நினது நல்ல தோளினைச் சேர்தற்குக் களவொழுக்கத்தில் சுழலுபவராகிய தலைவர், தலைவனைப் பிரிந்த மகளிர் கண்ணைப்போலக் காக்கணம்பூ மலர, படருகின்ற கொடியினையுடைய பீர்க்குப் பெரிய புதரில்பொன்போல மலரும் படியான முன்பனிக் காலத்தை மறவார்" (சுகூச) எனத் தோழி தலைவர் முன்புகொண்ட அன்புடைமையும் பருவம் வந்துற்றதை மறவார் எனவும் எடுத்துரைத்துத் தலைவரது வருகையை வற்புறுத்தினாள். கருவிளை (காக்கணம்பூ) தலைவரைப் பிரிந்த மகளிரது கண்ணினையும், பீர்க்குப் பிரிவால் மேனியில் பசலை படர்தலையும் நினைப்பித்தலால் வருவர் என்ற குறிப்புத்தோன்றத் தோழி கூறுகின்றாள். இங்கு "காதலர்ப்பிரிந்த கையறு மகளிர், நீர்வார் கண்ணில் கருவிளை மலர.........அற்சிர அரைநாள்" (அகம் : உகூச) என்ற அடிகள் ஒப்பிடத்தக்கன.

"தோழி! போரில் விருப்பங்கொண்ட தலைவன் பகைவர்மீது கொண்ட சினந் தணிந்தான். ஆதலின், நீரின் தாழ்ச்சியையொத்த கிளர்ந்த செலவினையுடைய குதிரைகள் பூட்டிய பெரிய தேரினை மழை பெய்தலைச் செய்யும் காடு பின்னதாக வேகமாகச் செலுத்திப் பல மலர்கள் கலந்த மாலையையணிந்த தம் மார்பினை நீ இனிது தழுவத் தலைவர் இன்னேவருவர்" என்ற உரையால் தோழி, 'தலைவர் வருவர்' எனத் தலைவியைத் தெளிவித்தாள். (சகூரு)

'நீரிகுவன்ன' என்ற உவமையால் தலைவருடைய தேர் இடைவழியில் தங்காமல் விரைந்து வரும் என்பதை அறிவிக்கின்றாள்.

இத்தகைய பொருள் செறிந்த பாட்டுக்களை இப்பத்து உடையது.

## (8) பாணன் பத்து

பருவ
பாணனைத்

வரவின்கண் தலைவன்வரக் காலம் தாழ்ப்பின் தூதாகத் தலைவிபால் அனுப்பி வைப்பான்.

அப்பொழுது பாணனிடத்துத் தோழியும் தலைமகளும் கூறும் கூற்றுக்கள் நிகழும். தலைமகள் விட்ட தூதாய்ச்

சென்ற பாணனிடத்துத் தலைமகன் கூறுவதாகவும் கூற்று நிகழும்.

"பண்ணை வாசித்தலில் வல்ல பாணனே! பலரும் புகழும் சிறப்பினையுடைய நும் தலைவர்பால் பரிசு பெறுதலை யெண்ணி, அவர் சென்ற நாட்டிற்குச் செல்லுதலை நீ விரும்பினையாயின், எம்மிடத்து இன்னாத பிரிவுத் துன்பத் தைச்செய்த பொய்ம்மை கூறுதலில் வல்ல தலைவர்போல் எம்மை மறவாதே" (சஎ௩) என்று பாணற்குத் தலைமகள் கூறுவதாகவும், (குறித்த பருவத்தில் வாராமையால் வேறு படுத்தி நும் தலைவன் என்றாள் தலைவி.)

"சிறிய யாழினையுடைய பாணன், தோள்வளை நெகிழ மெலிந்த என் தோளினையும் மா வடுவின் அழகினை இழந்த என் கண்ணினையும் நோக்கி மிக வருந்தினன். எமது விருப்பம் பொருந்திய அன்போடு பிரிந்த தலைவர்போல் இல்லை இவன். (நம்பால் அன்பில்லாதவனாக இல்லை) நம்பால் மிக்க அன்பினை யுடையான்." (சஎ௫)

தொடிநிலை கலங்கத் தோள் வாடியதாலும், கண் வடி நல மிழந்ததாலும் பிரிவின்கண் வேறுபட்டாள் என்பது பெறப்படும். தலைவியின் உடல் நலமிழந்ததைக் கண்டு

புலம்பியதால் பாணன் பேரன்புடையன் ஆனான். ஆதலின் தலைவி, தன் மெலிவு கண்டு இரங்கிய பாணனைத் தோழிக்கு மகிழ்ந்து இவ்வாறு கூறியதாகவும்,

" பாணனே!
நீண்ட கண்களில்

குளிர்ச்சி பொருந்திய மலர்போலும்
பசலைபடர வெறுப்புமிக்க துன்பத்
துடன் பிரிவாகிய நோயால் வருந்துபவளின் செயலற்ற மனத்துக்கு உசாவுதலையுடைய துணையாகச் சிறிது பொழுது தங்குவையாயின் அவண் எம் தேரைக் காண்பாய்'' (௱௭௭) என்று தலைமகளிடத்துப் பாணனைத் தூதாக விடுத்த தலைமகன் தான் விரைந்துவருதலை அறிவிக்கும் கூற்றாகவும்,

" முல்லைப்பண்ணை வாசிக்கின்ற நல்ல யாழினையுடைய பாணனே! குறித்த பருவம் வந்தும் யாம் வராது காலந்



தாழ்த்தோமென்று எங்காதலி மிக நினைந்து
கொடுமை
பலரறியக் கூறி, ஒளியிழந்த நெற்றியினை யுடையவளாய், பிரிவுத்துன்பம் மிகுவதால் உடல் மெலிந்து, சொல்லிய திறத்தை நீ எமக்குக் கூறுவாய். அஃது என் வருத்தந் தணிக்கும் மருந்தாகும்'' (௱௭௮) என்று பிரிந்துறையும் தலைமகன், தலைமகள் விட்ட தூதாய்ச் சென்ற பாணனை நோக்கி, 'அவள் சொல்லிய திறம் கூறு' எனக் கேட்டதாகவும் வரும் பாட்டுக்கள் இப் பத்தின்கண் உள்ளன.

## (9) தேர் வியங்கொண்ட பத்து

வேந்தனது வினைமுற்றி மீளுந் தலைவன், "காலம் கழிந்தது; கார்காலந் தொடங்கிற்று.

வேனிற் • பிரிவாற்றாமையால் எம்மைக்
காதலி வாகும். ஆதலின், புட்போல

கருதும் பொழுது இது
நிலந் தீண்டாத செலவினை
யுடைய கலித்த குதிரை பூட்டப்பட்ட தேரினை விரைவிற் செலுத்துக" என்று பாகனை ஏவுவதாகக் கூறப்படும் பாட்டுக்களைக் கொண்டது இப் பத்து.

"தேரினை
தேர்ப்பாகனே!

விரைந்து செலுத்தும் அறிவினையுடைய
இக் கார்காலம் பிரிந்தோரை நினைந்து

வருந்துங் காலம்; நிறைந்த வளையலை
யின் உள்ளம் மகிழ்ச்சியுறத் தேரினை
வாயாக" (சூஅஎ) என்றும்,
யணிந்துள்ள தலைவி
விரைந்து செலுத்து

"இடி மின்னலாகிய தொகுதியையுடைய மேகம் மழை பெய்தலைத் தொடங்கிற்று. கற்பினாலுண்டான வெற்றியையுடைய காதலி என்னை எண்ணுங் காலம் இது வாகும். ஆதலின், விரிந்த தலையாட்டத்தினையுடைய நல்ல குதிரைகளைப் பூட்டித் தலைவியின் பிரிவுத்துன்பம் நீங்கும் வண்ணம் தேரினை விரையச் செலுத்துவாயாக" (சஅஅ) என்றும், வரும் இன்னோரன்ன பொருள் செறிந்த பாட்டுக்கள் இதன்கண் இன்பம் பயப்பனவாயுள்ளன.

## (10) வரவுச் சிறப்புரைத்த பத்து

வினைமுற்றிக் குறித்த காலத்தில் (கார் காலத்தில்) மீண்ட தலைவன் தலைவிக்கு உரைப்பதாகவும், தலைமகன்



வந்தபொழுது தோழி தலைமகட்குச் சொல்லியதாகவுமுள்ள கூற்றுக்களைக் கொண்டது இப் பத்து. தலைவனது வருகைச் சிறப்பினை எடுத்துரைத்தலின் இப் பெயர்த்தாயிற்று.

"அழகிய நெற்றியையுடைய தலைவியே! உன்னைப் போலவே சாயலையுடைய மயில் ஆரவாரித்து ஆட, உனது அழகிய நுதல்போல மணக்கும் முல்லை மலர, உன்னைப் போலவே மான் மருண்டு நோக்க, (இவை நினக்குப் பிரிவுத் துன்பத்தைச் செய்யும் கார் காலத்தையும் மாலைப்பொழுதினையும் உனது மருண்ட நோக்கினையும் நினைவுபடுத்தலால்) உன்னையே நினைந்து மழையைப் பெய்யும் மேகத்தினும் விரைந்து தேரினைச் செலுத்தி வந்தேன்" (சகூஉ) என்று தலைமகன் தலைவிக்குக் கூறுவதும்,

"உயர்ந்த தந்தங்களைப் பெற்றுள்ள யானைகளையுடைய வேந்தனது வினை முற்றியதால் விரைந்து செல்லுதலையுடைய தேரினைச் செலுத்தி மலைகளை யுள்ளிடத்தே யுடைய நாட்டின் தலைவன் வந்ததால் தலைவியின் தோள்கள் வனப்புற்றன; அவளது முன்கையில் வளையல்களுக்கு முன்னர் அணிந்துள்ள தொடி கழலாமல் நின்றன; நீண்ட செவ்வரிகளையுடைய நெடுங்கண்கள் ஒளியோடு கூடி அழகுடையவாயின" (சகூஅ) என்று தோழி தலைமகட்குச் சொல்லுவதாகவும்,

"வெல்லும் போரினையுடைய அகன்ற பெரிய பாசறைக்கண் தங்கியிருந்த வெற்றி பொருந்திய குதிரையை யுடைய தோன்றலே! நீ குறித்த காலத்தில் இவள் நலந் துய்த்தற்பொருட்டு வந்தால், பிரிவுக்காலத்தில் கொன்றைப் பூவைப்போலப் பசலை படர்ந்திருந்த கண்கள் குன்றின் உள்ளிடத்தேயுள்ள பெரிய

மையுண்ட மலர்ந்த
சுனைக்கண் திருந்த)

நீலமலர்போல முன்னிருந்த (புணர்ச்சிக் காலத் பழைய வனப்பினைப் பெற்றன" (ரு00) என்று

தலைமகனுக்குத் தோழி கூறுவதாகவுமுள்ள செய்யுள் களும் பிறவும் படித்து இன்புறத்தக்கன வாயுள்ளன.



## பாட்டின்பம்

சான்றோர் இயற்றிய பாட்டுக்களைப்
படிக்குந்தோறும்
புத்தம் புதிய இன்பந் தோன்றுதலைத்
தமிழறிவார் நன்
குணர்வர். அதனாலன்றே திருவள்ளுவர் "நவில்
தொறும்
நூல்நயம் போலும் பயில்தொறும், பண்புடை
யாளர்
தொடர்பு" என்றருளினர். அத்தகு இன்பம்
உவமை
முதலிய அணி வகையானும், சுருங்கச்சொல்லல்
முதலிய
வனப்புவகையானும், நகை அழுகை முதலிய
சுவை வகை
யானும், அறம் பொருள் இன்பம் வீடு ஆகிய
உறுதிப்

பொருள்களை யுணர்த்தும் சிறப்பானும்
பிறவற்றானும்
உண்டாதல் கூடும். அவ் வின்பம் பாட்டினைப் பயில்வார் மனத்திற்குப் புது விருந்தாகி மகிழ்வை யுண்டாக்கும். இவ் வியல்பினைப் பெற்றிருப்பதே பாட்டெனப்பட்டு,

"சொல்லென்னும் பூம்போது தோற்றிப்
பொருளென்னும்
நல்லிருந் தீந்தாது நாறுதலால்—மல்லிகையின்
வண்டார் கமழ்தாம மன்றே மலையாத
தண்தாரான் கூடல் தமிழ்"

என்று சிறப்பித்துக் கூறும் மணமிக்க
மல்லிகை மாலை
யாகத் திகழும். அல்லாதவை மணமற்ற இலையால் தொடுத்த மாலையும் மாலையெனப்பட்டுச் சிலரால் விரும்பப்படுதல் போலச் செய்யுளெனச் சொல்லப்பட்டு இலக்கிய
நயமுணர
ரும் நுண்புலமை யில்லாதவரால் படித்துத்
தம்முள் களிப்
படையத் தக்கனவேயாம்.

இம் முல்லைப் பாட்டுக்கள் யாவும் மணம் நிறைந்த நன்மாலையாகத் திகழ்வனவே; ஆயினும் இங்குச் சில பாட்டுக்களின் நலம் துய்ப்பாம்.

## செவிலிகூற்றுப் பத்து

"மறியிடைப் படுத்த மான்பிணை போலப்
புதல்வன் நடுவண னாக நன்றும்
இனிது மன்றவவர் கிடக்கை முனிவின்றி

நீனிற வியலகங் கவைஇய

ஈனும் உம்பரும் பெறலருங் குரைத்தே''

(௨0௧)



தலைவி தலைவனுடன் இல்லறம் நடத்தும் கடிமனைக்கு (பல் வளத்தாலும் சிறந்த மனைக்கு)ச்சென்று வந்த செவிலி இன்பமும் பொருளும் அறமும் தழுவிய அவர் தம் காதல் வாழ்க்கையைக் கண்டு உவந்து வந்து நற்றாயை நோக்கி, "தம் இளங்குட்டியை நடுவண் கொண்ட ஆண்மானும் பெண்மானும் போலப் புதல்வன் தமக்கிடையே படுத்திருப்ப, அப் புதல்வனைச் சூழ்ந்து அத் தலைவனும் தலைவியும் வெறுப்பின்றிப் படுத்திருத்தலானது பெரிதும் இனிமையாகவே உள்ளது; நீலநிறம் வாய்ந்த கடற்பரப்பினால் சூழப்பெற்ற இவ் வுலகத்திலும் மேலுலகத்திலும் அத்தகைய தொருநிலை பிறரால் பெறுதற்கரியது'' என்று கூறினள் என்பதை இப் பாட்டுக் கூறுகின்றது.

இதனுள் வந்துள்ள "மறியிடைப் படுத்த மான்பிணை போல'' என்ற உவமை நயங்கண்டு இன்புறற்பாலது. இது முல்லைத்திணைக் கருப்பொருளால் கிடத்தல் வினைபற்றிக் கூறப்பட்டுள்ளது. மானும் பிணையும் கவலையின்றிப் புல்லும் நீரும் பெற்று மாலைக்காலம் வந்ததும் ஏமமான இடத்தில் தம் குட்டியின் மேலுள்ள அன்பால் அதை இடையில் வைத்து இருபுறமும் பாதுகாவலாய் உறங்குமன்றே! அதுபோல், தலைவனும் தலைவியும் இல்லிலிருந்து நல்லறஞ் செய்து தம் பொருளாம் தம் புதல்வன் மீதுள்ள

அன்பாலும், தமக்குள் ஒருவர்மேல் ஒருவர்க்குள்ள காத லாலும் புதல்வனை நடுவண் உறங்கச் செய்து இருபுறமும் படுத்துறங்குகின்றனர். இங்ஙனம் இத்தலைமக்கள் அறமும் பொருளும் இன்பமும் வழாமல் இல்லறம் நடத்தும் நிலையைக் கண்ட செவிலி "இத்தகைய நிலை மற்றொரு வருக்கு இம்மையிலும் மறுமையிலும் பெறுதற்கரியது!" என்று உவந்து கூறுகின்றாள்.

தலைமக்களுடைய இல்வாழ்க்கையின் நலனை இதனி னும் சொல்லால் எடுத்து விளக்குதல் எங்ஙனம்? அவர்கள் பெறும் இன்பம் ஒப்புற்றதாயிருத்தலின் "ஈனும் உம்பரும் பெறலருங்குரைத்து" என்றார். இப்பாட்டில் இல்வாழ்க்



கையின் பண்பாகிய அன்பும், பயனாகிய திலங்குதல் காண்க.

அறமும் செறிந்

ஒண்சுடர்ப் பாண்டிற் செஞ்சுடர் போல
மனைக்குவிளக் காயினள் மன்ற கனைப்பெயல்
பூப்பல வணிந்த வைப்பின்
புறவணி நாடன் புதல்வன் றாயே.

(சoரு)

கடிமனைக்குச் சென்று தலைவியைக் கண்டு வந்த செவிலி, உவந்தவுள்ளத்தளாய் நற்றாயை நோக்கி, "மிகுந்த மழை பெய்தலால் பூக்கள் பல அழகு செய்துள்ள இடங்களோடு கூடிய முல்லைநில நாடனுடைய புதல்வனுக்குத் தாயான தலைவியானவள், தன் வீட்டில் மாலையில் ஏற்றிய விளக்கம் பெற்ற ஒளியையுடைய கால்விளக்குப்போல (புதல்வனை யீன்றதால்) தான் வாழும் மனைக்கு விளக்காயினள்" என்று கூறினள் என்பதை இப்பாட்டு அறிவிக்கின்றது.

முல்லைத் திணைக்குரியது மாலைக்காலம். அம்மாலைக் காலத்தில் மனைக்கண் விளக்கேற்றுதல் உண்டு. அவ் விளக்கைத் தலைவி ஏற்றி நெல்லும் மலரும் தூவி இல்லுறை தெய்வத்தை வணங்குவள். இதனை "இரும்பு செய் விளக்கின் ஈர்ந்திரிக் கொளீஇ, நெல்லும் மலரும் தூஉய்க்கை தொழுது" (நெடுநல் வாடை - சஙு - ௪) "அகனக ரெல்லா மரும்பவிழ் முல்லை, நிகர்மலர் நெல் லொடு தூஉய்ப் பகன்மாய்ந்த, மாலை மணிவிளக்கங் காட்டி" (சிலப்-கனாத்திறம்: க-ந) என்பனவற்றால் நன்கறியலாம். செவிலி வந்திருந்த நாளின் மாலைப்பொழுதில் தலைவி யானவள் பொற்கலையுடுத்துப் பொன்னும் மணியும் பூண்டு பொற்குத்து விளக்கினுள் நறுநெய் வார்த்துப் பஞ்சுத் திரியுள் செஞ்சுடர் ஏற்றி வணங்கினள். இக்காட்சியைக் கண்ட செவிலி தலைவியைப் பொற் குத்துவிளக்காகவும் அவள் அணிந்திருந்த அணிகலன்களின் ஒளியைச் செஞ் சுடராகவும் முன்னர்க் கருதினள். பின்னர், தலைவி வீட்டினுள் அல்லும் பகலும் எரிகின்ற நந்தாவிளக்காகவும் அம்மூல விளக்குப் பல விளக்கை ஏற்றிப் புறவிருளை

ஓட்டி வீட்டினை விளங்கச் செய்வதோடல்லாமல் நல்ல புதல்வனை யீன்று குலத்தை விளங்கச் செய்கின்ற சிறந்த விளக்காகவும் விளங்குகின்றது என்பதைக் கருதி, "புதல்வன்றாய் மனைக்கு விளக்காயினள்" என்று கூறுகிறாள்.

தலைவி இல்லறத்திற்கு இன்றியமையாதவளாயிருந்து விளக்குஞ் செய்தலை "மனைக்கு விளக்காயினள்" எனச்

சுருங்க
திறன்

எல்லாப் பண்புகளையும் அடக்கிக் கூறியிருக்குந் போற்றற்குரியது. "மனைக்கு விளக்கம் மடவார் மடவார், தமக்குத் தகைசால் புதல்வர்" "மனைக்குப்பாழ் வாணுத லின்மை" (நான்மணிக்கடிகை.) "தூண்டா விளக்கனையாய்" (திருக்கோவையார்.) என்பன ஈண்டறியத் தக்கன.

## கிழவன் பருவம் பாராட்டுப்பத்து

இதுவே மடந்தை நா மேவிய பொழுதே
உதுவே மடந்தைநா முள்ளிய புறவே !
இனிதுடன் கழிக்கில் இளமை
இனிதால் அம்ம! இனியவர்ப் புணர்வே.

(சகரு)

பருவங்குறித்துப் பிரிந்த தலைமகன் அப்பருவத்திற்கு முன்னே வந்து தலைவியொடுகூடி யாறுங் குளனுங் காவுங் கண்டு விளையாடச் செல்லும்பொழுது அவன் குறித்த பருவம் வந்ததாகத், தான் அப்பருவத்திற்கு முன்னே வந்தமை தோன்றக் கூறுவான் தலைவியை நோக்கி, "மடந்தை! நாம் இருவருங் கூடி விளையாடுவதற்காகக் குறித்துக்கொண்ட சிறந்த காலம் இதுவே; நாம் விளையாடுவதாகக் குறித்துக்கொண்ட சிறந்த புறவமும் உதோ தோன்றுகிறது. இங்ஙனம் சிறந்த புறவிலிருந்து இனியவர்ப் புணர்வைப் பெற்றுப் பொழுதை இனிமையோடு கழித்தால் இளமைப் பருவம் இனிதாகும்" என்று கூறுகின்றான்.

இளமைப் பருவத்தில் எப்புலனும் இன்பம் துய்க்கப் பெறாத வறுமை உண்டாயின் அது மிகவும் இன்னாதாம்.



அங்ஙனமின்றி ஏதேனும் ஒரு புலன்
துய்க்கப் பெற்றாலும் அப்பருவம்
இன்பத்தை மட்டும்
அத்துணைச் சிறந்த

தாகாது. ஐம்புலன்களாலும்
தால்தான் இளமை இனிதாகும்;

இன்பத்தை முற்றத்துய்த்
அது சிறந்தது.

அழகிய தோற்றத்தால் கண்ணிற்கினிமை தந்து, இனிய சொல்லால் செவிக்கினிமை பயந்து, பாலொடு தேன்கலந்தன்ன வாயமுதால் நாவிற்கினிமை நல்கி, ஐந்து தொடை மாண்ட கோதைபோன்ற மேனியால் மூக்கிற்கும் உடம்பிற்கும் இனிமை கொடுக்கும் பெண்ணலங்கனிந்த இனியவர்ப் புணர்வால்தான் ஓர் ஆண்மகனுடைய பெறற்கரும் இளமையானது பேரின்பம் பெறுவதாகும். அத்தகைய பேரின்ப நுகர்ச்சிக்குச் சிறந்த கார்ப்பருவத்தையும் அதற்குரிய இடத்தையும் குறிப்பிடுகின்றான் தலைவன்.

இச்சிறந்த பொருளை ஆசிரியர் எளிய சொற்களால் தெளிவுபடக் கூறியிருத்தல் அறிஞர்கள் கண்டு வியத்தற்குரியதாம். "இனிதுடன் கழிக்கில் இளமை, இனிதாலம்ம இனியவர்ப் புணர்வே" என்னும் சிறந்த அடிகள் மனத்துட் கொள்ளத்தக்கன வாதலறிக.

## பாசறைப்பத்து

தழங்குரன் முரசங் காலை யியம்பக்

கடுஞ்சின வேந்தன் தொழிலெதிர்ந் தனனே;
மெல்லவன் மருங்கின் முல்லை பூப்பப்
பொங்குபெயல் கனைதுளி காரெதிர்ந் தன்றே;
அஞ்சி லோதியை யுள்ளுதொறும்,
துஞ்சா தலமரல் நாமெதிர்ந் தனமே. (சசஅ)

வேந்தற்கு உற்றுழிப்பிரிந்த தலைமகன் தலைவிக்குத் தான் வருவதாகக் குறித்த பருவம் வந்தும் மீளப்பெறாது, முழங்குங் குரலையுடைய முரசம் காலையிலே போர்த் தொடக்கத்தைக் குறித்து ஒலிக்க, மிகுந்த சினத்தை யுடைய வேந்தன் போர்த் தொழிலை மேற்கொண்டான்; மென்மையான பள்ள நிலத்தின் சுற்றுப்புறமெல்லாம்



முல்லை மலரும்படி கார்காலமானது மிகுதியும் பெய்கின்ற செறிந்த துளிகளை மேற்கொண்டது; ஆனால் யாமோ அழகிய சிலவாகிய கூந்தலையுடையாளை நினைக்குந்தோறும் உறங்காது மனஞ்சுழலுதலை மேற்கொண்டோம்'' என்று அரசன் செய்தியும் பருவத்தின் செய்தியும் தன் செய்தியும் கூறி ஆற்றுகின்ற நிலையை இப்பாட்டு கூறுகின்றது.

வேந்தன் தொழில் எதிர்ந்தது முரசு காலையில் முழங்குவதற்கு ஏதுவாயிற்று; கார் கனைதுளி எதிர்ந்தது முல்லை பூப்பதற்கு ஏதுவாயிற்று என்று கூறிய தலைமகன் தான் தலைவியை யுள்ளித் துஞ்சாது மனச்சுழற்சியை மேற்கொண்டது இன்னதற்கு ஏதுவாயிற்றென்று கூறிற் றிலன். அப்பயன் வேந்தன் வினைமுற்றுப் பெற்றுத் தலைவியைக் காணப்பெறின் கிட்டியதாகும் எனக் குறிப் பால்பெறக் கூறுகின்றான். அங்ஙனம் தான் அலமருதலுக்கு மேற்கூறியவை யிரண்டுங் காரணமாயிருத்தலின் வேந்தன் செயலையும் பருவத்தின் செய்தியையும்

முனனாக கூறு
கின்றான். ஒவ்வொரு செய்தியையும் ஆசிரியர் இரண்டிரண்டு அடிகளில் அழகுபெறக் கூறியுள்ளார். இதன்கண் தனித்திருக்கும் தலைவனுடைய அவலம் வெளிப்படுதல் காண்க.

## தோழி வற்புறுத்த பத்து

வரிநுணல் கறங்கத் தேரை தெவிட்டக்
கார்தொடங் கின்றே காலை யினிநின்

நேரிறைப் பணைத்தோட் கார்விருந் தாக
வடிமணி நெடுந்தேர் கடைஇ
வருவர் இன்றுநங் காத லோரே. (சகூஅ)

பிரிவு நீட ஆற்றாளாய தலைமகளைத் தோழி நோக்கி, "வரித்தவளை முழங்கத் தேரை மிகவும் ஒலிக்கக் காலம் கார்காலமாய்த் தொடங்கிற்று; அதனால், இனி உன் மெலிந்த முன்கையினையுடைய மூங்கில்போன்ற தோளினுக்கு அரிய விருந்தாகும்படி நம் காதலர் தெளிந்த ஓசையையுடைய மணி கட்டிய உயர்ந்த தேரைச் செலுத்





திக்கொண்டு இன்றே வருவர்" என்று
பருவங்காட்டி
வற்புறுத்தலை இப்பாட்டு கூறுகின்றது.

கார்காலம் வந்தபடியால் கறங்காத நுணல் மகிழ்ச்சி
யால் கறங்கிற்று; ஒலிக்காத தேரை உவகையால் ஒலித்தது.
அதுபோல் வராத தலைவரும் இக்காலத்தே நாம் மகிழ்வுற

இன்று மாலையே வருவர் என்று காலநிகழ்ச்சிப் பொருளைக்
காட்டித் தலைவியைத் தோழி வற்புறுத்துகின்றாள்.

தலைவனைத் தழுவப் பெறுததால் மெலிவுற்ற தோள் தலைவனைத் தழுவப்பெற்று, பணைத்தோளாகி (பருத்த தோளாகி) தொடி வளை ஆகிய அணிகள் நிலைபெறும்
ஆதலின்
வருவர்"

"நேரிறைப் பணைத்தோட் கார் விருந்தாக........
என்றாள். நுணல் தேரைகள் சேர்ந்தொலிப்
பினும் தலைவர் தேர் சேய்மையில் வரினும் நாம் விரைவில்
அறிதல் கூடுமென்பாள் "வடிமணி நெடுந்தேர்"

என்றாள்.

இன்னோரன்ன பொருள் நயம் இப்பாட்டில் விளங்குத
லறிக.

## பாணன் பத்து

சொல்லுமதி பாண! சொல்லுதோ றினிய

நாடிடை விலங்கிய எம்வயின் நாடொறும்
அரும்பனி கலந்த அருளில் வாடை
தனிமை எள்ளும் பொழுதில்
பனிமலர்க் கண்ணி கூறிய தெமக்கே.

(சஎக)

தலைவி விடத் தூதாய்ச் சென்ற பாணன் உரைத்த மாற்றங் கேட்ட தலைமகன் அப்பாணனை நோக்கி, "பாண! நாடு இடையே குறுக்கிடும்படி பிரிந்த எம்மிடத்தே, நாள் தோறும் மிகுதியான குளிர்ச்சிமட்டுங் கலந்து அதற் கேற்ற அருட்குணம் சிறிதுமில்லாத வாடைக்காற்றுத் தோன்றி எம் தனிமை நிலையை யிகழும் இக் காலத்திலே பனித்துளியையுடைய தாமரை மலர்போலும் கண்ணை



யுடையவளாகிய தலைவி கூறிய மொழியை "இவ் வாடை வருத்தத்திற்கு மருந்தாக எமக்கு இன்னுஞ் சொல்லுவா யாக; அச் சொல் சொல்லுந்தோறும் இனியவாயுள்ளன," என்று தலைவன் கூறியதை இப்பாட்டுக் கூறுகின்றது.

(பனியால் வருந்திய தாமரைமலர் எனப் பொருள் கொள்ளினுமாம்.)

வாடை—(வடகாற்று). ஐப்பசி
கூதிர்க்காலத்தில் வீசும். அக் காலம்

கார்த்திகையாகிய
அகத் தொடுங்கிப்
போகம் நுகர்வார்க்குச் சிறந்ததாம்; தனித்துறையும்
தலைமக்களுக்கு இன்னாதாம். ஆதலின் தனித்துறையும்
தலைவன் பாணனிடம் "வாடையினிடத்தே குளிர்ந்த (ஈரம்)

தன்மையிருந்தும் எல்லாரையும்
னில்லை; அதனால் தலைவியைப்
எம்மை அது வருத்துகின்றது"

ஒப்பநோக்கும் அரு
பிரிந்து தனித்துள்ள
என்று கூறுகின்றான்.
ஆசிரியர், "அரும்பனி கலந்த அருளில் வாடை" என்ற தொடரை யமைத்திருப்பது மிக அழகுடையது. "இன்னா வாடை" (சுகூ0) என்று இந் நூலுள் முன்னும் கூறியிருத்தல் அறியத்தக்கது. இங்ஙனமே இராமபிரானும் காரினை நோக்கிச், "சீதையை மறைத்தவரின் ஊரையும் யான் அறிந்தேனில்லை யான் உயிரோடு உழல்கின்றேன்; ஏ! காரே! நீ நீரை (நீர்மையை)ப் பெற்றிருக்கின்றாய்; ஆனால், அருள் நின்னிடத்தில இல்லையோ', என்னுங் கருத்துத் தோன்ற,

"வாரேர் முலையாளை மறைக்கு நர்வாழ்

ஊரே அறியேன் உயிரோ டுழல்வேன்
நீரே உடையாய் அருள்நின் னிலையோ

காரே! எனதா விகலக் குதியோ"

(கம்பரா. கிட்-கார் : ௩௨)

என்று கூறியுள்ளதும்,

அல்லமனைக் கண்டு தன் நிலையழிந்த
நோயுற்றகாலத்து வீசிய தென்றலை நோக்கி,

மாயை, விரக



"கொல்லா நோன்பு முனிமலையிற்
றோன்றி யென்னைக் கொல்கின்றாய்
பொல்லா மந்த மாருதமே!
என்னோ கருணை பூண்டிலாய்"
(பிரபுலிங்க லீலை. பிரபுதேவர். ௬௨)

என்பதும் ஈண்டொப்பிட்டு அறியத்தக்கன.

தலைவி கூறிய வார்த்தைகள் தனக்கு வருத்தந் தணிக்கும் மருந்தாகவுள்ளன என்று தலைவன் கூறும் உரை எத்துணை இன்பம் பயக்கின்றது!

இன்னோரன்ன இலக்கியச்சுவை நிரம்பிய
பாட்டுக்கள்
இத் திணைக்கண் உள்ளன ;
தைத் துய்ப்பார்களாக.
அறிஞர்கள் அவற்றின் இன்பத்

## செய்யுள் ஓவியம்

புலவர் தாம் கண்ட இயற்கைக் காட்சிகளைச் செஞ்சொற்களில் அமைத்துக் காட்டுவர். இத்திறன் சங்ககாலப் புலவர்களிடத்து நன்கு அமைந்திருக்கக் காண்கிறோம். ஓவியப் புலவன் ஓவியத்தை வரைந்து, வண்ணத்தால் வனப்புறச் செய்து, கண்ணுக்கினிமை பயக்க அமைத்தல் போலச் செய்யுளியற்றும் புலவர்கள் பொருளுக்கேற்ற சொற்களைக் கண்டமைத்து மனத்திற்கின்பந் தரும் பாக்களைப் புனைகின்றனர். கைவல் ஓவியப் புலவன் தீட்டிய ஓவியம் உவகை அவலம் முதலிய உளச்சுவைகளை நன்கு வெளிப்படுத்தி உயிர்த்தன்மை பெற்று விளங்குகின்றது. அங்ஙனமே புலவனும் தன்பாட்டில் உளச்சுவைகள் அமையயாத்துப் பயில்வார்க்கும் கேட்போர்க்கும் அவ்வச் சுவை தோன்றச் செய்கின்றான். இஃது ஒரு தெய்வத்தன்மையே; எளிதில் எவர்க்கும் வாய்ப்பதன்று.

இத் திறன் நன்கு வாய்க்கப் பெற்ற இத்திணை ஆசிரியர் பல கவிச்சித்திரங்களைத் தீட்டி அழகுபடுத்தியுள்ளார். மலை, கடல், யாறு முதலிய பேரிடங்களைச் சிறிய நிழற்படம் தன்னுள் அடக்கிக்காட்டுதல் போலக் குறைந்த



அடிகளைக் கொண்ட பாட்டுக்கள் பலப்பல காட்சிகளை ஒருங்கே நமக்குக் காட்டுகின்றன. அவற்றுள் சிலவற்றைக் கண்டு களிப்பாம்.

காலம் கார்காலம்; மழை நன்கு
பெய்தது; நிலம்
செழித்துள்ளது; முல்லை கொன்றை முதலிய
மலர்கள்
மலர்ந்து கண்ணிற்கு விருந்தளிக்கின்றன.
அக் கானகக்
காட்சியைக் காண விழைந்தான் தலைவன்.
அவன் மட்டும்
அங்குத் தனித்து இல்லை. காதலியுடனும் புதல்வனுடனும் பெருமிதந் தோன்ற இனிது வீற்றிருக்கின்றான். முல்லை மலரைத் தொடுத்து அணிந்து கொண்டிருக்கிறாள் தலைவி.

அங்குக் கண்ணிற்கு இன்பந்தரும் காட்சியோடு செவிக்கும் விருந்து உண்டு. பாணன் யாழ்கொண்டு முல்லைப்பண்ணைப் பாடுகின்றான். அறிவும் திருவும் வாய்ந்த ஒத்த தலைமக்கள் மகிழ்வுடன் கேட்டின்புறுகின்றனர். இந்நிலையை,

"பாணர் முல்லை பாடச், சுடரிழை
வாணுத லரிவைமுல்லை மலைய,
இனிதிருந் தனனே நெடுந்தகை
துனிதீர் கொள்கைத் தன்புதல்வனொடு
பொலிந்தே"

(௪0அ)

என்ற பாட்டு நம் கண்முன் நிறுத்துகின்றது.

"சுடரிழை வாணுதல் அரிவை" என்ற தொடரால் தலைமக்களின் செல்வ நிலையினையும், தலைவி கூடியிருக்கும் நலத்தினையும் அமைத்துக் காட்டுகின்றார். "நெடுந்தகை இனிதிருந்தனன்" என்றதால் அவனது அறிவு, ஆண்மை, திரு முதலியவற்றாலுண்டான பெருமிதத்தைப் புலப்படுத்துகின்றார். "துனிதீர் கொள்கைத் தன் புதல்வனொடு" என்றதால் புதல்வன் வாயிலாகத் தலைவியின் ஊடல் நீங்கப்பெற்றுக் கூடியிருத்தலை யுடையர் என்பதையும் அறிவிக்கின்றார். "பாணர் முல்லைபாட இனிதிருந்தனன்" என்றதால் அவர்களது ஒத்த கலையறிவும் வண்மையும் காணச் செய்கின்றார். இத்தோற்றம் உய்த்துணர்

வார்க்கு இறையும் இறைவியும் முருகனுடன் கூடி. தெய்வக் காட்சியை நினைக்கச் செய்யும்.

## உறையும்

பல்வளஞ் செறிந்த மலையின்முற்றம்; ஆங்குப் புதல்வன் சிறுதேர் உருட்டி விளையாடுகின்றான்; விளையாடும் பொழுது அவன் புன்னகை புரிகின்றான்; கால் ஊன்றாத தால் அச்சிறு தேரினை உருட்டும்பொழுது தளர்நடை உண்டாகின்றது. அந்நிலை, தலைவியின் கடிமனைவாழ்க்கையைக் காணச்சென்ற செவிலித்தாயின் கண்ணிற்குப் பெருவிருந்தாய் இன்பம் பயந்தது, உள்ளத்துப் பெரு விருப்பங்கொண்டாள். அவ்விருப்பம் தலைவியிடத்துக் கொண்டதைக் காட்டிலும் அம்மகனை யீன்ற தலைவனிடத்துப் பெரிதாயிற்று,

இதனை ஆசிரியர்,

"புணர்ந்தகா தலியிற் புதல்வன் றலையும்
அமர்ந்த வுள்ளம் பெரிதா கின்றே!
அகன்பெருஞ் சிறப்பிற் றந்தை பெயரன்
முறுவலி னின்னகை பயிற்றிச்
சிறுதே ருருட்டுந் தளர்நடை கண்டே"

(௪0௩)

என்ற பாட்டால் சித்திரித்துக் காட்டுகிறார்.

"முறுவலி னின்னகை பயிற்றிச், சிறுதே ருருட்டுந் தளர்நடை" என்ற தொடர் இளமகனையும் அவன்முகத்தில் அரும்பும் இளநகையையும் அவன் தளர் நடையோடு சிறு தேருருட்டி விளையாடுதலையும் மனக்கண்முன் கொண்டு வருகிறது. திருவள்ளுவர் "மக்கள்மெய் தீண்டல் உடற் கின்பம் மற்றவர், சொற்கேட்ட லின்பம் செவிக்கு" என்னும் திருக்குறளில் மக்களால் பெறும் ஊற்றின்பத்தையும் செவியின்பத்தையும் கூறினர். இவ்வாசிரியர் குழந்தைகள் காட்சியின்பம் பயத்தலையும் அறிவிக்கின்றார்.

இவ்வின்ப நிலையைக்கண்ட செவிலியின் உள்ளத்தில் அத்தோற்றம் மறையாமல் மகிழ்வூட்டிக் கொண்டேயிருந்தது. அதனாலன்றோ நற்றாய்க்கு இதனை எடுத்துரைக்கின்றாள்?



பிள்ளைகள் சிறுதேருருட்டி விளையாடல் பெற்றோர்க்கும் காண்போர்க்கும் இனிமை தருதலினாலன்றோ காவியத்திலும் பிள்ளைக்கவியிலும் இப்பருவத்தைச் சேர்த்துப் புலவர்கள் பாடினர்.

இவ்வாறு செவிலிகூற்றாக உள்ள பத்துப்பாட்டுக்களும் சொற்சித்திரங்களாகவே திகழ்கின்றன.

புறவணிப்பத்தில் உள்ள பாட்டுக்கள் யாவற்றையும் ஒன்று சேர்த்து நோக்குவோமாயின் முல்லைநிலத்தோற்றம் யாவற்றையும் ஒருங்கே காட்டத் தீட்டிய திரைப்படாம் போலத் திகழும். ஒவ்வொரு பாடலையும் தனித்தனி பார்ப்போமாயின் கானகத்தின் ஒவ்வொரு பகுதியையும் வரைந்து காட்டுவது போல் இலங்கும்.

அவற்றுள் ஒன்று:

"நன்றே காதலர் சென்ற வாறே
அணிநிற விரும்பொறை மீமிசை
மணிநிற வுருவின தோகையு முடைத்தே."

இது பெரிய பாறைமீது நீலமணிபோலும் நிறத்தை யுடைய அழகிய மயில் நிற்கும் காட்சியைப் புலப்படுத்தா நின்றது. தமிழகத்தில் காடாரம்பமாகவுள்ள இடங்களில் இத்தகைய காட்சிகளை நாம் இன்றும் காணலாம்.

தலைவன் வேந்தனுக்கு உதவிபுரியச் சேட்புலம் சென்றான். கார்காலத்தில் வருவதாகக் கூறிச் சென்றவன் வந்திலன். தலைவி பிரிவாற்றாமையால் துன்புறுகின்றாள். உடல் மெலிந்தது; வளை, தொடி கழன்றன; தலைவிக்கு உற்ற துணையாகவுள்ள தோழி காண்கிறாள். அவள் தான்

புறக்காணச் சகிப்பாளா? தேற்றுகின்றாள். தோழியே! தலைவன் பிரிவை எண்ணி நொந்துநொந்து வருந்தாதே" என ஆற்றுவிக்கின்றாள்.

இப்பிரிவுக்காட்சியை,

"புனையிழை நெகிழச் சாஅய் நொந்துநொந்
தினையல் வாழி, இகுளை!"

என்ற தொடரில் அழகுற அமைத்துள்ளார்.



"புனையிழை நெகிழ" என்ற தொடர், 'உடம்பு நனி சுருங்கல்' என்ற மெய்ப்பாட்டினையும் "நொந்து நொந்து இனையல்" என்ற மெல்லோசைபெற்ற சொற்கள் தலைவிபால் தோழிகொண்ட பரிவினையும் நன்கு காட்டுகின்றன. இச்சிறிய செய்யுளடிகளுள் எத்துணை அழகுறக் கவிச் சித்திரம் அமைத்துள்ளார் ஆசிரியர்.

இங்ஙனம் நம் உள்ளக்கிழியில் உருவமைக்கும் பேயனார் கவித்திறம் மிகமிகப் போற்றற்குரியது!

புலவர்

## ஓசையின்பம்

இத்திணையைப் பற்றிய பாட்டுக்கள் யாவும் அகவற் பாக்களாதலின் அப்பாவிற்குரிய அகவலோசை மிக்கு விளங்குகின்றது. ஆசிரியர், தாம் கூறப்புகும் கூற்றினுக் கேற்ப ஓசை பயக்கும் சொற்களை யமைத்துள்ளார். இதனைப் பின்வரும் எடுத்துக்காட்டுக்களால் ஒருவாறு அறியலாம். சொற்களின் பொருட்சிறப்பினை யுணர்ந்து, கேட்போர்க்கு மெய்ப்பாடு தோன்றப் பாடவல்லார்பாடின், பாட்டின் இசைநயம் சிறந்து விளங்கும். செய்யுளைப் படிப்பவர் அதன்கண் அமைந்துள்ள ஓசை நயத்தைப் பொதுவாக உணர்தல் கூடும். அஃதெங்ஙனமெனில்,

பாட்டை ஒரு முறை பாடினால் அதைப் பின்னரும் பாட வேண்டுமென்ற அவா எழும். அத்தகு விருப்பம் ஒரு பாட்டு முழுவதிலும் தோன்றலாம்; ஓரடியிலும் தோன்றலாம்; இது சொல்லோசையால் உண்டாவதே. பொருளுணர்வார்க்கு இதனினும் இன்பம் தோன்றும். இதனைத் திருவாசகம், சிலப்பதிகாரத்திலுள்ள வரிப்பாடல்கள், குறவஞ்சிப் பாட்டுக்கள் முதலிவற்றில் நன்கு காணலாம். பொருளுணர்ச்சியுடன் சொற்களின் வன்மை, மென்மையறிந்து படித்தலின் அவசியத்தைத் தக்கயாகப்பரணியின் உரையாசிரியர் நன்கறிந்து அந்நூலைப் படிப்பவரை வழிப்படுத்துகின்ற முறையில் உரைகூறியுள்ள ஓரிடத்தைக் காட்டுகின்றேன்.



" பாவியார் சிறு தக்கனொரு
பக்க மாய பரம்பரன்
தேவியான் முனி வுண்டுபட்டது
கேண்மி னென்றது செப்புமே "
(தக்கயாகப்பணி : உசரு)

என்ற தாழிசையின் உரையில் "பாவியா ரென்றதைப் படுத்துச் சொல்லி எளிமையிற் கொள்க" என்பர்.

இங்ஙனம் பிற இடங்களிலும் உரை எழுதுவர். ஆதலின்,

அறிஞர்கள் இங்ஙனம் அறிந்து செய்யுளின்பம்

நுகர்தல் நன்றாம்.

இந்நூலுள்,

[1]நன்றே காதலர் சென்ற வாறே
அணிநிற விரும்பொறை மீமிசை
மணிநிற வுருவின தோகையு முடைத்தே.

(சஙக)

[2]நன்றே காதலர் சென்ற வாறே
சுடுபொ னன்ன கொன்றை சூடிக்
கடிபுகு வனர்போன் மள்ளரு முடைத்தே.

(சஙஉ)

எனவரும் பாடல்களைத் தொடர்புறப் படித்துப் படித்து இன்பங் காண்க. நாவில் தேன்சுவையினும் இனிமை பயக்கும் இச் செந்தமிழ்ப் பாட்டுக்கள். இதன்கண் "நன்றே காதலர் சென்ற வாறே" என்ற முதலடி பத்துப் பாட்டுக்களிலும் அமைந்து வருதலும், முதலடியின் முதற் சீரின் ஈற்றிலும் நான்காம் சீரின் ஈற்றிலும் ஏகாரங்கள் வந்து ஓசையை யுயர்த்துதலும், மூன்றாவதடிகள் "உடைத்தே" என்று பாட்டுக்கள்தோறும் முடிவதும் ஓசையின்பந் தோன்றுதற்குக் காரணங்களாகவுள்ளன. இவை இயற்றமிழ்ப் பாட்டுக்களாக விருப்பினும், இசைப் பாட்டினுக்குரிய இன்னோசைபெற்று விளங்குகின்றன. 'நன்றே' என்பதை எடுத்தலோசையாற் கூறின் ஓசைநலம் சிறக்கும்.

---

1, 2. இவற்றின் பொருளைப் புறவணிப் பத்தில் காண்க.

[1]"பொன்னென மலர்ந்த கொன்றை,
மணியெனத்
தேம்படு காயா மலர்ந்த தோன்றியொடு,
நன்னல மெய்தினை புறவே! நின்னைக்
காணிய வருதும் யாமே
வாணுத லரிவையொ டாய்நலம் படர்ந்தே."
(௪உ0)

இச் செய்யுளில் மெல்லின ஓசை மிக்கு இன்பந் தருகிறது. "நன்னல மெய்தினை புறவே" என்ற தொடரைப் படுத்தலோசையாலும் "காணிய வருதும் யாமே" என்ற தொடரை எடுத்தலோசையாலுங் கூறின், தலைவனது பெருமிதந் தோன்றக் கூறும் பொருளை ஓசை நல்கும்.

[2]"பெருஞ்சின வேந்தனும் பாசறை முனியான்,
இருங்கலி வெற்பன் றூதுந் தோன்றா,
தசையிலை வாழை முழுமுத லசைய
இன்னா வாடையும் அலைக்கும்
என்னா குவென்கொ லளியென் யானே."
(௪௬0)

பருவ முதிர்ச்சியில் தலைமகனை வரக்காணாத தலைமகள் சொல்லியது இது. இது நாடக நூலுள்வரும் தனிமொழி போன்றது. "முனியான்" "தோன்று" "மலைக்கும்" என்ற சொற்களை மெலிந்தும் "என்னாகு வென்சொல் அளியென் யானே" என்ற தொடரைப் படுத்தும் கூறின் ஆவலச்சுவை நன்கு தோன்றுதல் காண்க.

[a]"நின்னே போலு மஞ்ஞை யால,நின்
னன்னுத னாறு முல்லை மலர,
நின்னே போல மாமருண்டு நோக்க,

நின்னே யுள்ளி வந்தனென்
நன்னுத லரிவை ! காரினும் விரைந்தே."

(சகஉ)

---

1. இதன் பொருளைக் கிழவன் பருவம் பாராட்டுப்பத்தில் காண்க.

2. இதன்

பொருளைப் பருவங்கண்டு கிழத்தி யுரைத்த பத்தில் காண்க.

3. இதன் பொருளை வரவுச் சிறப்புரைத்த பத்தில்

காண்க. முல்லை

மேற்கொண்ட செயலை நிறைவேற்றி, மனையகம் புகுந்த தலைவன் தலைவியிடம் கூறிய கூற்றினை அறிவிப்பது இப்பாட்டு. இப்பாட்டில் பத்து வல்லின எழுத்துக்களைத் தவிர, யாவும் மெல்லெழுத்துக்களே. தன் காதலியிடம் காதலன் எத்துணை அன்பும் அமைதியும் தோன்ற மெல்லிய குரலில் கூறுவானோ அத்தகைய இயல்பினைக் காட்டுகிறது இப்பாட்டு. தலைவனின் மனவமைதியை நன்கு விளக்கி நிற்கின்றது.

தேர்வியங்கொண்ட பத்தில்,

"சாயிறைப் பணைத்தோள் அவ்வரி யல்குற்
சேயிழை மாதரை யுள்ளி நோய்விட
முள்ளிட் டூர்மதி வலவ! நின்
புள்ளியற் கலிமாப் பூண்ட தேரே."

(சஅக)

இச்செய்யுள் தலைவன் பாகனை நோக்கிக் கூறுவதாக வுள்ள "வலவ! நின் புள்ளியற் கலிமாப் பூண்ட தேர், முள்ளிட் டூர்மதி" என்னுந் தொடர், பாகனை ஏவும் மிடுக்கினைச் செவ்விதின் தெரிவிக்கின்றது. இங்ஙனம் பாட்டுக்கள்தோறும் "வல் விரைந்து கடவுமதி பாக" (சஅஉ) "முன்னுறக் கடவுமதி பாக." (சஅ௩) என்றும் வருந் தொடர்கள் ஏவல் தொழிலுக்கேற்ற இசையமைந்திருத்தல் காண்க.

## இத்திணைப் பகுதியில் காணப்பெறும் அரிய செய்திகள்

1. தந்தையின் பெயரைத் தன் மகனுக்கிட்டு அழைத்தல். (ச0௩)

2 காதலர் புதுப்புன லாடுவர்; (சகக) பொழில் விளையாடுவர். (சகஉ)

3. உத்தமப் பெண்களின் நுதல் முல்லைமலர் போல் நறுநாற்றமுடையது. (சகங, சகஉ)

4. மகளிர் கூந்தலைப் பின்னி முடிப்பர். (சகரு)

5. மகளிர் பல (ஐம்பாலாக) வகையாகக் கூந்தலை முடிப்பர். (சஉகூ, சசஅ)



6. தலைவனைப் பிரிந்த மகளிர்க்கு நுதல் பசக்கும். (சஉங)

7. மழை வறண்ட காலத்து வானம்பாடி மேகத்து நீர்த்துளியை நச்சிப்பாட, மழை தவறாமல் பெய்யும். (சகஅ)

8. இளமை இனிமையுடையது. (சகரு)

9. கற்பிற்கு அருந்ததியை உவமையாகக் கூறல்.

(சசஉ)

10.

புதல்வற்குத் தென்னங் குரும்பைபோலக் கிண்கிணி செய்து அணிவர். (சசஉ)

11. பல உயர்ந்த மதில்களை அரணாக அமைத்தல். (சசங)

12. மதில்களைத் தகர்க்க யானைப்படைகளை ஏவுதல். (சசச)

13. வெற்றிக் கொடியை மதிலில் உயர்த்துதல். (சஉகூ)

14. தேரிற் பூட்டிய குதிரையை விரைவிற் தாற்றுக்கோல் பாய்ச்சுவர். (சஅக)

செலுத்தத்

15. கோவலர் குருந்த மலர் மாலையை அணிவர். (சகூகூ)

16. கோவலர் தழைவிரவித் தொடுத்த வர். (சஎகூ)

மாலையை அணி

17. கார்காலத்தில், மேட்டுநிலத்திலிருந்து
பறவைகள்
ஒலிக்கும். (௪௫௩)
18. கார்காலத்தில் தேரை ஒலிக்கும். (௪௫௩)

19. கார்காலத்தில் நுணல் ஒலிக்கும். (௪௬௮)
20. கார்காலத்தில் புற்றிலிருந்து ஈசல் புறப்படும். (௪௬௭)
21. கார்காலத்தில் வரகு கதிர்விட்டுச் செழித்திருக்கும். (௪௬௬)
22. முன்பனிக்காலத்தில் கருவிளையும் பீர்க்கும் பூக்கும். (௪௬௪)
23. கூதிர்க்காலத்தில் பகன்றை, ஈங்கைப்புதல் மலரும். (௪௫௬)

முல்லை

253
24. வெற்றியடைந்தவர் பகைவர் நாட்டிலிருந்து பொருள்களைக் கொண்டுவருதலுண்டு. (௭௬௩)
25. பிரிந்தோர்க்கு ஒருநாள் ஊழிக்காலம் ஆகும். (௪௮௨)

போலிருக்

## இதன்கண் வந்துள்ள அரிய தொடர்கள்

1. நீனிற வியலகம். (௪௦௧) 2. அகன்பெருஞ் சிறப்பிற் றந்தை பெயரன் (௪௦௨). 3. தாழிருங் கூந்தல் (௪௧௧). 4. கால் வல் புரவி (௪௩௨). 5. கல்லா யானை (௪௨௯). 6. அருந்தொழில் கட்டூர் (௪௪௫). 7. அரும்புனி யளைஇய கூதிர் (௪௫௯). 8. இன்னா வாடை (௪௬௦). 9. திமிர் பரி நெடுந்தேர் (௪௬௫). 10. அரும்பனி யளைஇய வற்சிரக் காலை (௪௭௦). 11. அன்பின் மாலை (௪௭௬). 12. அரும்பனி கலந்த அருளில் வாடை (௪௭௯). 13. புள்ளியற் கலிமா (௪௮௧). 14. பின்னிருங் கூந்தல் (௪௯௫). 15. வியனெடும் பாசறை (௫௦௦).

## தொகுப்புரை

புலத்துறை முற்றிய புலவர் பேயனர் இம் முல்லைத் திணைப் பாட்டுக்களை ஒரு கோவைப்பட அமைத்துள்ள அழகு நாம் கண்டின்புறத் தக்கது.

"அறனெனப்பட்டதே இல்வாழ்க்கை" (திருக்குறள்) என்று சிறப்பித்துக் கூறும் இல்லறத்தைத் தலைமக்கள் புரிகின்றனர். அதன்பயனாக நற்புதல்வனைப் பெற்று அன்புடன் கூடி வாழ்கின்றனர். அம் மனைமாட்சியைச் செவிலித்தாய் கண்டு உவகைகொண்டு நற்றாய்க்கு அறிவிக் கின்றாள். கார்காலம் வரவே, அக் காலம் இன்பந் துய்த் தற்குரிய காலமாதலின், அப் பருவத்தில் தலைவன் தலைவி யுடன் புதுப்புனலாடியும் பொழில் விளையாடியும் மாவும் புள்ளும் கண்டும் கலந்து இன்பந் துய்க்கின்றான். பின்னர்த் தலைவன், தலைவியின் உடன்பாடு பெற்று, வினைவயிற் பிரிகின்றான். அங்ஙனம் பிரிந்தானாயினும் தலைவி தலைவன்

சென்றவழி சுரமாயிற்றே என்று கவல்கின்றாள்; தலைவன் சென்றவழி நன்று என்று தோழி எடுத்துக்கூறி ஆற்றாமையைத் தணிக்கின்றாள். சென்ற தலைவன் போர்குறித்து அமைத்துள்ள பாசறைக்கண் தங்கியுள்ளான். போர்த் தொழில் முற்றுப்பெறவில்லை. தலைவிக்குத் தான் வருவதாகக் குறித்த கார்காலம் வந்துற்றது. அப் பருவத்தில் தனித்துறையும் தலைவி இல்லிலிருந்து வருந்துகின்றாள். தோழி, "தலைவர் வருவர்" எனப் பல ஏதுக்காட்டி வற்புறுத்திக் கூறுகின்றாள். தனித்துறையும் தலைவனும் தலைவியும் தூதாய் வந்த பாணனால் ஒருவர் மற்றொருவர் நிலையை உணர்கின்றனர். தலைவன் மேற்கொண்ட வினை நிறைவேறியதால், புட்போல விரைந்துசெல்லும் குதிரை பூட்டிய தேரைச் செலுத்தி வருகின்றான். பிரிந்திருந்த தலைமக்கள் கூடி இன்புறுகின்றனர்.

இங்ஙனம் தலைமக்கள் இல்லில் இருத்தலாகிய ஒழுக்கத்தில் ஆரம்பித்து, இடையில் பிரிந்து தனித்திருத்தலைக் கூறி, முடிவில் இல்லில் தலைமக்கள் பதிதலாகிய ஒழுக்கத்திலேயே மங்கலமாக இத்திணைப் பத்துக்களை அழகு நிரம்ப அமைத்து, நிறைவேற்றியுள்ளார் ஆசிரியர்.

---